(இதன் பொருள்.)

நீறுமூடிய நெருப்பை யொத்த சுவாமியே! சண்டாளத் துவமாகிய ஆணவமலமென்கிற செடிமூடிக் கொண்டிருப்பதினாலே அவிவேகியாய்த் திரியாநின்ற சிறியனொருவன் பொருளா உருவமானவனோ- அகண்டவெளி யானவனோ? நான்குவேதமாகிய வனோ? நான்கு வேதத்தினுடைய அந்தத்திலிருக்கின்றவனோ? ஒப்பற்ற முதலாகிய வனோ- கோபித்துக் கொள்ளவேண்டாம் கோபித்துக் கொள்ளவேண்டாம்—என்றவாறு ... ... ... .. (௭௰)

எந்நீர்களுமொன்றாகிய வெழுவாரியுமாறுகி . ... *
வெந்நீர துவாறலுடன் விளாவப்புனலுண்டோ... ... *
நின்னீர்மையிதென்றாலுலகுயிரெப்படி நிகழும் .. ...*
முந்நீர்விடமுண்டாயென்னை முனியேலென்னை முனியேல் ... *

(இதன் பொருள்.)

எல்லாநதிகளினீரும் விழுந்து ஒன்றாகிய எழுசமுத்திர முங்காய்ந்து வெந்நீராய்ச் சுட்டால் அதையாற்றுகிறதற்கு வேறே சலமுண்டோ உமக்கே இப்படிப் பட்ட கோபம்வந்தால் உலகத்திலிருக்கிற சீவராசிகள் எப்படிபிழைக்கும் முன்னே சமுத்திரத்திலேபிறந்த ஆலகாலவிஷத்தை உண்டமூர்த்தி கோபஞ்செய்யவேண்டாங் கோபஞ்செய்யவேண்டாம்—என்றவாறு ... .. ௭௧)

பிறைமேயமுழுமதியேயுறைபெண்ணேபிறவாணே ...*
நறைமேயநறுமலரேயெனநானாவிதமானவை . ... *
பொறைமேயதிருவருளேபொழி புயலேயியலிசையே *
முறைமேயபலமுறைமேயயென்னைமுனியேலென்னைமுனியேல் .. *

(இதன் பொருள்)

மூன்றாம் பிறையாகியும் பூரணச்சந்திரனாகியும் பெண்ணாகியும் ஆணாகியும் தேனாகியும் புஷ்பமாகியும் மலைகளாகியும் கிருபா வருஷத்தைப் பொழிகின்றமேகமாகியும் சொல்லாகியும்நாதமாகியும் மற்றும் நானாவிதரூபமாகி இருக்கின்ற மூர்த்தியே உமக்கு முறையோ முறையென்னைக் கோபிக்கவேண்டாம் கோபிக்கவேண்டாம்—என்றவாறு .. ... ... ... (௭௨)

வெம்மைச்சரமலராகியவிலவேள்தனுவன்றே .... .. *
கொம்மைத்தலை யதுவாறெழுகோபக்களிறன்றே ... ... *
செம்மைக்கன லன்றேகொலைசெயுமந்தகனன்றே... .. *
மும்மைப்புரமன்றேயொரு பொருளாயெனைமுனியேல் *

(இதன் பொருள்.)

மிகுந்த வெப்பத்தைக்கொடுக்காநின்றபுஷ்பபாணங்களையுடைய, மன்மதன்தேகமல்லவே, தாருகாவனத்து ரிஷிகள்விட்ட எழும்

பினதலையையும் ஆறுபோன்ற மதத்தையுமுடையசேபாடாசியையா
னையல்லவே, அந்தரிஷிகள் பின்புவிட்டசிவப்பாகிய அக்கினியல்ல
வே- கொலைசெய்யுக தொழிலையுடைய யமனல்லவே நீர்புர யவல
வே- நான்எவ்வளவு உமக்குஎனைனை ஒருபொருளாகக் கோபயசெ
ய்யவேண்டாம்—என்றவாறு .. . .... . (௭௩)

அரிதற்கரிதாமுன்முடியறிவேனெனுமனவே .. ... *
பறவைப்படிவாமேனினிமேலோவிடர்பயிலேன் ... *
சிறுமைப்பயிமென்பாலருள் செய்யென்றுரைசெய்தான் *
மறுகிக்குளிரனலபோலிறைமகிழ்வாயிவைமொழியான, .. *

(இதன்பொருள்)

யாவராலுமறியக்கூடாத வும்முடைய முடியையறிகிறேனென்ற மாத்திரத்திலேபட்சியுருவமானேன் இனிமேலோ துக்கத்தையடைவேன் சிறுமையையடைந்த என்னிடத்தில் கிருபைசெய்யுமென்று சொல்லிவிசனப்பட்டபோது மறுகக்காய்ந்து குளிர்ந்தசலம்போலச்சிவன் சந்தோஷமாய்த் திருவாய்மலர்ந்து சிலதிருமொழிகளை அருளிச்செய்வார்—என்றவாறு .. . ... .. (௭௪)

அம்போருக வஞ்சேலினியவனித்தல மறையோர் . *
தம்பூசனை யுன்பூசனை யாகித்தப னியமாகு .. *
சம்பூதரவுலகேழைபும்விதியென்றருள்செய்தான் .... *
கப்பூர்கடல் விடமுண்டருள் கருணைக்கடலானான் .. .. *

(இதன்பொருள்)

வாராய்பிரமாவே இனிமேல் நீபயப்படாதே பூமியில்பிராமணர்களுக்குச் செய்கிறபூசை உன்பூசையாகக்கொண்டு பொன்னுருவமாயுண்டாகிய மகாமேருமலை தாங்கும் எழுலகத்தையும் எப்போதும்போல்படையென்று அருளிச்செய்தார் சங்குகள்தவழாநின்றசமுத்திரத்தின் விஷத்தையுண்டகிருபைக்கடலாகியசிவன்—எ-று (௭௫)

அறுசீரடி ஆசிரியவிருத்தம்,

இத்தலத்தை யுமக்குவரங்கொடுத்தவிறல் யோசனைமுன்றெல்லை
தூரம்-சுத்தபவித்திரஞானத் தலமாகப் பொலிகவிந்தச் சோதி
தானுஞ் சிற்றுருவ மலையாகிவரமுதவக் கடவதின்பஞ் சிறந்ததா
ன- முதிதனைத்தலையாம வுதவுமிதற்கருணை புரிமொழியு நாமம்.

(இதன்பொருள்.)

வாருங்கள் பிர்மா விஷ்ணுக்களே உங்களுக்கு இந்தத்தலத்திலே அனுக்கிரகஞ்செய்து வரங்கொடுத்தபடியினாலே இந்தத் தலத்தைச் சுற்றி மூன்றுயோசனை தூரம்வரைக்கும் சுத்தபவித்திரமாக இருக்கவேணடியது இந்தச்செந்தீ மலையானதுசிறிய உருவத்தோடுங்கூடியமலை யாகக்கடவது பேரின்பசிறந்த மோட்சத்தைத் த

(இதன்பொருள்)

இறப்பினையும் பிறப்பினையும் நீக்குவதற்கு மருந்தானபடியினாலே இந்தமலைக்கு மலைமருந்தென்றப்பேர் இந்தமலைசிவப்பிரமாணபடியினாலே அருணகிரியென்றுமொருபேர் அதை ஒருதரம் பூமியிலே சொன்னவர்களுக்குப் பஞ்சாட்சரத்தை மூன்றுகோடிதரம் உச்சரித்ததற்குச் சமானமாகுமென்று நீலகண்டத்தையுடைய சிவன் அருளிச்செய்ய விஷ்ணு பிரமாக்கள் சந்தோஷத்தையடைந்து சுவாமியைவணங்கிச் சொலத்தொடங்கினார்கள்—எ-று, (௮௨)

அம்த்தருணகிரியாமேயுனக்கு விண்ணீரலதுபுனலாட்டுவாராய்த், தொடுத்தவுடுத்திரளலது திருமுடிச்சூடணமாலைசூட்டுவாரார், கடுத்திசபூமடற்றுணைகதிர்களின்றி மணித்தீடங் காட்டுவாரார், எடுத்தினருஞ்சிற் பூசைசெய்ய விதலகிடமா ரிலிங்கவடிவெடுப்பாயென்றார்......... *

(இதன் பொருள்)

அருணாசலேசுரரே மலையாகி உமக்கு ஆகாயத்தில் நின்றுப் பெய்யாநின்ற மழையல்லாமல் சலங்கொண்டுவந்து அபிஷேகஞ்செய்கிறவர்களார் நட்சத்திரககூட்டங்களே முத்துமாலையாவதல்லது வேறேபுஷ்பமாலைசூட்டுகிறவர்களார் சூரியகிரணமே தீபமாகவல்லாமல் தீபங்கொண்டுவந்து வேறேகாட்டுகிறவர்களார், ஆனபடியினாலே நாங்கள் அபிஷேகமுதலானதுகள்செய்து பூசைசெய்வதற்கு இந்த மலையின்கீழ் ஒருலிங்கரூபமாக எழுந்தருளவேணுமென்றுகேட்டுக்கொண்டார்கள்—என்றவாறு. (௮௩)

அன்னதுவாயிருக்குது நீர் காமியத்திலருச்சிப்புமென்றசலப்புக்கா, வெவ்விலருப்புகழவங்கோரிசிவனுருவேனுத்தகுதலன் டிலைஞ்சிமேயத்தி, மன்னியபூமறைபொழிந்து பரவசமாய் பகிழ்ந்தாடி மயனைக்கூவித், தலமணிகரில்கோபுரமு மண்டபமு மணிமதிலுஞ் சமைட்பித்தார்கள்... *

(இதன் பொருள்.)

அப்படியே லிங்கமாகினேம் டத்தியுடனே பூசியுங்கொள்ளென்று அந்தமலையினுள்ளே மறைவுகோலஞ்செய்தார் எத்தகதேயருப்புசமும்படி அவ்விடத்தில் ஒருலிங்கந்தோன்றியது அதைக்கண்டு வணக்கி தோத்திரஞ்செய்து புஷ்பவருஷிப்பொழிந்துபரவசமாய்ச்சந்தோஷத்தையடைந்து ஆனந்தக்கூத்தாடி மயனென்கிற தேவதச்சனைக் கூப்பிட்டு, ஒப்பில்லாதகோபுரங்களும், மண்டபங்களும், அழகு பொருந்திய, மதிலுஞ் செய்வித்தார்கள்—என்றவாறு. (௮௪)

அழியாதவளநகருதாததமூர் நூற்றறுபதுங்கண்டழகுசெய்தார்-*
வழியாதநீர்சகரந்திடஞ்சுதருவுங்கேணிகளுமரமுமான... ... ... *

அரியயனு மளவிடுதற் கரியமலை நிலையுரைக்க வரிதென்றுந் *
தெரியவுனக் கறிந்தபடி சிறிதுரைத்தே னினியுரைக்குந் திறமதெ
ன்றான், வரிசைபெறு மார்க்கண்டமுனிமகிழ்ந்துபணிந்துமையாள்
மலையிற்றோன்றி, யுரியசிவ னிடங்கலந்த கதையுமுரைத் தருளுகெ
ன வுரைப்பதானான்... ... .... .... *

(இதன்பொருள்)

நந்திகேசுரர் மார்க்கண்டேய ரிஷியைப் பார்த்து விஷ்ணுவும் பிரமாவும் அறிதற்கரிதாகிய திருமலையினது சிறப்பை மெய்யமுற் சொலலுதற் கரிதென்றாலும் எனக்குத் தெரிந்த அளவில் சிறிது உமக்குத் தெரியும்படிச் சொன்னேன், இனிச்சொலலவேண்டிய தெ ன்னவென்றார் - வரிசைபெற்ற மார்க்கண்டேய ரிஷி சந்தோஷித்து வணங்கிச் சுவாமீ பார்ப்பதியானவள் இமவற்பர்வதத்தில் அவ தாரஞ்செய்ததுவும், சுவாமியை நோக்கித் தவஞ்செய்து அவரிடப் பாகம் பெற்றதுவும் சொல்லவேண்டுமென்றுகேட்கச் சொல்லத் தொடங்கினார்—என்றவாறு. (௮௭)

இரண்டாவது

ருமலைச்சருக்கம்

முற்றுப்பெற்றது

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், அடையாறு, சென்னை-20.



ஆக திருவிருத்தம் — ௱௯௪.





சிவமயம்.

பார்ப்பதியார்

# திருவவதாரச்சருக்கம்.

[அறுசீரடி ஆசிரிய விருத்தம்.]

பன்னிருவர் பதினொருவ ரெழுவரெண்மர் திசைக்கிறைவர் பணி
நாட்டினர் யோர், கின்னரர் கிம்புருடர் சித்தரியக்க ரிமையவர் முனிவ
கணாயினுள்ளோர், மன்னுமல ரவன் திருமால் கலைமடந்தை மலர்
மடந்தை மகிழ்ந்து சூழ, முன்னவனை யிகழ்ந்து தக்கன் முடியாத
பெருவேள்வி முடிக்கலுற்றான்.........................................*

(இதன் பொருள்)

கேளாய்-மார்க்கண்டேயரே முன்னாளிலே பிர்மாவினிடத்திற் பிற
ந்த தக்கனென்பவன் அரியதவஞ்செய்து உயர்ந்தவரங்களைப்பெற்று
கொண்டுமிகவும்பிரசித்தனாகி வாழுகிறகாலத்திலே பார்ப்பதியான
வர் தன்னிடத்திலேபிறக்க அந்த அம்மனைச் சுவாமிக்குக் கலியாண
ஞ்செய்துகொடுத்து மாமனாகும்படி வரம்பெற்று அந்தப்படி செ
ய்தபின்பு - ஒருநாள் இவன் சுவாமியினுடைய சபைக்குப்போனபொ
ழுதவ்விடத்திற் சுவாமிதனக்கு எழுந்துமரியாதைசெய்யவில்லையென்
றகோபங்கொண்டு தன்னுடையவீட்டுக்குவந்து சுவாமியையப்பார்
க்கிலும் உயர்வையடையவேண்டுமென்று பன்னிரண்டுசூரியர்கள்,ப
தினொருருத்திரர்கள், சத்தரிஷிகள், அட்டதிக்குப்பாலகர், நாகலோ
கத்தார், கின்னரர், கிம்புருடர், சித்தர், யக்ஷர்கள், தேவர்கள், முனிவ
ர்கள், நிலைபெற்ற பிர்மா,விஷ்ணு, சரஸ்வதி,லட்சுமி,மிகவுஞ் சந்தோ
ஷமடைந்து சுற்றிக்கொள்ள எல்லார்க்கும் முதல்வராகிய பர
சிவனை நிந்தித்து முடியக்கூடாத பெரிய யாகஞ்செய்யத்தொட

எந்தைசெயுமகம் பார்க்க விடையருளென்றிறைக்கிறவி யிசைத்
தாளுந்தை, புந்தியிலா திகழ்ந்தனனென்றுரைத்தனளீ தெனைவேண
டிப்பொறுப்பாயென்று, வந்தனஞ்செய்தன ளவளை நகைபுரிந்து
கடிதுசென்று வருவாயென்றான், கந்தமலர்க்குழலாளுந் தந்தைமக
நந்தொடங்குகன தலத்தைச்சார்ந்தாள்.............. ............*

(இதன்பொருள்)

பார்ப்பதிதேவியானவள் தகப்பனுகியதக்கன் யாகம் பண்ணுகிற
தைக்கேட்டு சுவாமீ என்னுடையதகப்பன் செய்கிறவேள்வியைப்
பார்த்து வருகிறதற்கு உத்தரவுகொடுமென்றுகேட்க அதற்குச்சுவா
மியானவர் உன்னுடையதகப்பன் புத்தியில்லாமல் என்னை மிகவும்
நிந்தித்திருக்கிறுனே நீபோகலாகாதென்று சொல்ல அதைக்கேட்டு
சுவாமீ என்தகப்பன்செய்த இந்தக்குற்றத்தை என்னை வேண்டிப்
பொறுக்கவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்தபோது அந்த அம்ம
யை நகைத்து நல்லது நீபோய்ச்சீக்கிரத்தில் வந்துசேரென்றுசொல
லப் பார்ப்பதியும் தக்கன் யாகஞ்செய்கிற இடத்திற்குப் போனுள்
—என்றவாறு. (௨)

தாயவளைக்கண்டடிதொழுதா ளவ டழுவா திருந்தனள்தன் றந்தை
யான, தீயவனைப் பணிந்தனளங் கவனுமிகழ்ந் தானிகழ்ந்த செயலை
நோக்கிப், பேயிருக்குஞ் சுடலையெனப் பிழைபிறந்து விடகவுங்கள்
பெருவாழ்வென்று, வாய்பிறக்குங்கொடுமைசொலி மறைந்தன ளச்
செயலறிந்தான் மங்கைபாகன்..................................*

[இதன்பொருள்]

பார்ப்பதியானவள் தக்கன் யாக சாலைக்குப்போய்த் தன்னுடைய
தாயைவணங்கினுள் அவள் இந்த அம்மனைத்தழுவி உபசாரஞ்சொல்
லாமலிருந்தாள், அதன்பின்புதிமைபொருந்திய தகப்பனைவந்தனஞ்
செய்ய அவனும் நிந்தித்தான் அதைப் பார்த்துக் கோபங்கொண்டு
உன்னுடைய யாகசாலைவாழ்வு பேயிருந்து விளையாடுஞ் சுடலையாகி
ப் போகக்கடவதென்று சபிதது இந்தப் பாவிவளர்த்ததேகம் இருக்
கக்கூடாதென்றுபோகத்தினுலேதன்னுடைய தேகத்தைவிட்டாள் அ
ந்தச்சமாசாரத்தைக்கேட்டார் பரமசிவன்—என்றவாறு. (௩)

[கலிவிருத்தம்.]

உன்னணிலாவுவஞ்சிசொல்ல வொருவனுவியுய்யுமோ.. ......... *
தன்னணிலாமுடிக குலைநின்று தழலைமொண்டிறைக்கையா ....- .. *
மன்னனைல்வெய்பிழுணிவுமகாள்ளுயளவினைத்தி விழிதனில் ...... *
மின்னணடுங்கமின்னனடுங்க வீரன்வந்துதோன்றினுன் ............*

(இதன்பொருள்)

ஏப்பொழுதுங்கூட இருக்க பார்ப்பதி தேகத்தைவிட்டவுடனே

(இதன்பொருள்.)

பாலொடுகலந்திருக்கின்ற நீரைச்சகவாசயோக்கியத்தால்தள்ளா மலெடுத்துக் கொள்ளுவார்கள் புஷ்பமாலையோடு சேர்ந்த நாரையும்அப்படியே கொள்ளுவார்கள்; ஆத்திமாலையைச்சூடிய சடைமுடியையும்ஆலகாலமிருக்குங் கண்டத்தையுமுடைய அருணாசலேசுரரதுநாமமிருக்கிற பெருமையினாலே என்னாற் செய்யப்பட்டபுன் பாடலையும் பெரியோர்கள் ஒப்புக்கொள்ளுவார்களேயன்றி யிகழார்கள்—என்றவாறு .. ... . ... ... . (௰௭)

அழகுதரக்கனிந்த நச்சுமரம்பழைய தெனினுமதிலமுதுண்டாமோ- விழைவு தருசுவைக்கரும்பு புதியதுவேயெனினுமதுவிரசம்போமோ- இழிவுறுபாடலுமுயர்வு தங்கியசெய் யுளுமவைபோலிருக்குமாகில்,பழமையெனநலந்தருமோ புதுமையெனவிகழ்படுமோபயன்கொள்வோர்க்கே... ... ... ... .. ...*

(இதன்பொருள்.)

அழகாகியசிவப்புநிறம்பொருந்தப் பழம்பழுத்த எட்டிமரம் வெகுநாளைய மரமாயிருந்தபோதிலும் அதிலமாதுரிய முண்டாகாது சர்வத்திராலும் இச்சிக்கப்பட்டஇனிப்பாகிய கருப்பு கொஞ்சநாளையதாகவிருந்தாலும் அதனில்கசப்பு உண்டாகாது அப்படிபோல்குற்றந்தோய்கூடிய செய்யுட்பழமையாயிருந்ததினாலேயேஒருநன்மையைக்கொடுக்காது யாதொரு தோஷமு மில்லாமல் உயர்வுபொருந்திய பாடல் சிலநாளைக்குமுன் னுண்டா யிருந்ததினாலேயே இகழப்படாதுபிரயோசனத்தைக் கொள்ளுவோர்களுக்கு()

தினையளவுந் தமிழ்ப்பிடியுந் தறிமதுரம் பிறந்தகல்வித்திறமையோருந்- தினைபுமியறநுவையறியாமூடர்பகு தறிவின்முன்னே நிற்கலாமோ- வினையடருங்குவளைவிழியனிச்சமல ரனையதிருமேனி மாதர் புனைவின்மதன் மலர்க்கணையைப்பொறுப் பதலாலமரினைம்பொறுத்திடாரோ... ..... ... .... ..... .... ... .....*

(இதன்பொருள்)

தினையளவுகூடச் செந்தமிழ்த்தரித்திரம் இன்றிஅதிக மதுரம்பிறந்த கல்வியில்லவர்களும் இலக்கணரசமே அறியாத மூடர்களது மிதந்த அறிவையுடையகல்விப்பிர சங்கத்தின் முன் னிற் கார்கள் கொல்லுந் தொழிலடைகின்ற நீலோற்பலம்போன்ற கண் களையும் அனிச்சப்பூவொத்த உடம்பினையுமுடைய பெண்கள் கருப்புவில்லைத் தரிக்கின்றமன்மதனாலேவிடப்பட்ட புஷ்பபாணத்தைப் பொறுப்பார்களேயல்லாமல் கொடுந்தாக்கிய யுத்தத்தில்விடுகிற அம்பைப்பொறுக்கார்கள் அதுபோல—எ-று... .... .. ... (௰௧)

(நூல்வரலாறு.)

கருத்துருகவிறைவனந்திக் கருள்புரியநந்தியமார்க் கண்டற்கோ-தவிருத்திமறை வியாசமுனிக் கவனுரைக்கச் சூதனுரைக்கவியா சனிமுட்கல்லப் -பொருந்தமனவிருடியருக் கருட்சூதன்மொழிந்தசி வபுராணங்கோடி - யுருத்திரசங்கிதை யுரைத்தவருணைகிரிவளந்தமிழோ டுரையாசைகளுற்றேன்-... ... ... ... ... ... ... *

(இதன்பொருள்)

மனமுருகப் பரமசிவன் நந்திகேசுரருக்குஅருள்புரிய நந்திகேசுரரும் மார்க்கண்டேயருக் கருள்செய்ய, மார்க்கண்டேயர் வேதங்களைபொழுங்குசெய்த வியாசருக்கு அருள்செய்ய, அவர்பெருமையுடையவனத்திலிருக்கும் ரிஷிகளுக்கருள்செய்த சிவபுராணங்கோடியாரும் அவைகளில முக்கியமாகிய ஸ்காந்தத்தில் ருத்திரசங்கிதையிற் சொல்லிய அருணசல ஸ்தலமகிமையைச் சொல்லத் தொடங்கினேன்—என்றவாறு. (௨௰)

அருணைநகர்வளமையுமா லயனகந்தையிட வழல்வெற் பானவாறும், பொருவில் மகமழித்ததுவு மரனுமையை மணத்ததுங்கண் புதைத்தவாறும், வருமகிடற்கொலைத்ததுவு மிறைவியிடங்கலந்ததுவும் வயிரப்பூணு, ளிருவினையையகற்றியதும் வடகலைதென்கலைவிருப்பா லிசைகக்லுற்றேன்... ... ... ... ... ... *

(இதன்பொருள்.)

அருணசல ஸ்தலமகிமையும் பிர்மமா விஷ்ணுவினுடை கர்வங்கெட அக்கினிமலையானதும், ஒப்பில்லாத தக்கனுடைய யாகத்தை அழித்துப்போட்டதும், பரமசிவன் பார்ப்பதியைக் கலியாணஞ்செய்ததும், அப் பார்ப்பதி சுவாமியினுடைய கண்களைமூடியதும், மகிடாசுரனை உமாதேவி கொன்றதும், அப் பார்ப்பதி வாமபாகத்திற்சேர்ந்ததும், வச்சிராங்கத பாண்டியனுடைய பாவத்தைநீக்கினதுமாகியசரித்திரங்களைச் சொல்லுகின்ற கிரந்தத்தைத் தமிழ்மொழியினுலே சொல்லத் தொடங்கினேன்— என்றவாறு. (௨௧)

பாயிரம்

முற்றுப்பெற்றது.

ஆ. திருவிருத்தம் — ௨௧.






சிவமயம்.

# திருநகரச்சருக்கம்.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

துங்கமழுவுழைபிரம்பு சரிகைபகலாதகையான் றுகிர்க்குன்றூ டே, திங்களுமிழ்நிலவனைய வெண்பொடியான் சடைமுடியான் செறிமுக்கண்ணான், பொங்குதிரு வரையகலாப் புலித்தோலான் புயநாலான் புரிமுந்நூலான், கங்கைமதிதவழ்சடையான் றிருவாணைசெலுத்தும்வெள்ளிக் கயிலைகாப்பான் ... .... ..... ... ........... *

(இ-ள்.) உயர்வாகியமழுவும்மானும்பிரம்பும்உடைவாளும்நீங்காத கையையுடையவர், பவளமலையில் சந்திரன்பொழிகின்ற நிலவுபோலத்தேகத்தில் அணிந்தவிபூதியையுடையவர், சடைமுடியையுடையவர், நெருங்கியமூன்றுகண்களையுடையவர், விளங்குகின்ற இடுப்பில் நின்று நீங்காத புலித்தோலையுடையவர், நான்குபுஜங்களை யுடையவர், மூன்றுபுரியாகிய பூணூலையுடையவர், கங்கையும் சந்திரனும்தவழாநிற்கிற சடையையுடைய பரமசிவனது கட்டளையைச்செலுத்திக் கொண்டு கைலாயகிரியைக்காக்கிறவர்—எ-று. (க)

கொய்வனசமலர்நிறத்தான் மைவளருந்திருமிடற்றான்குலவெள்ளேற்றான், சைவமெனும்பயிர்தழைக்கக் கருணைமழை பொழிமேகந்தன்னையொப்பா, னைவரையுமகத்தடக்குஞ்சிலாதரார்க்குப் புறத்துலவுமாவிபோல்வான், தெய்வமெல்லாந் தொழச்சிவந்தமலர்ப்பதத்தானந்திபெறுந்திருநாமத்தான் .. .. ... ...... .. ..... ...... *

(இ-ள்) கொய்யப்பட்ட தாமரைமலரொத்த நிறத்தையும்விஷம்பொருந்தியகண்டத்தையும் நல்லவெண்மையாகிய ரிஷபவாகனத்தையும் உடையபரமசிவன் சம்பந்த[illegible]மென்னும் பயிரானது தழைப்பக் கருணையாகிய[illegible]பொழிகின்ற மேகம்போன்றவர் பஞ்சேந்திரியங்களையும் அகத்தில் [illegible] புறத்தில் திமையா

கிய பொருள்களிற்போகவொட்டாமல் அடக்கியசிலாதராரிஷிக்குப் புறத்திற் சஞ்சரிக்கின்ற உயிர்போன்றவர் விஷ்ணுமுதலாகிய தெய்வங்களெல்லாம் வணங்க அதனாற்சிவப்பேறிய தாமரைப்பூவொத்த பாதங்களையுடையவர்- இப்படிப்பட்ட தன்மையையுடைய நந்திகேசுரரென்கிற அழகியநாமத்தைப்பெற்றவர்—எ-று. (௨)

ஈசனணி நதிமதியுந் திருவுருவுந் திருவுருவி லிசைந்த நீறுந், தேசுவென விளங்குமொரு கயிலாயச் சிலம்புளதச் சிலம்பின்மீதே, வாசவனே முதலிமையோர் நெருங்குதலான் மகுடமொடு மகுடந்தாக்கி,யோசையுடன் கனகமணிப் பொடியுதிர்ந்து கனகமலைக்குவமையாகும் .................................................*

(இதன்பொருள்.)

பரமசிவர் தரிக்கின்றகங்கையும் சந்திரனும் மேற்சொன்னசுவாமியினது வெண்மையாகியதிருவுருவமும் அவ்வுருவத்திலணிந்ததிருநீறுமாகிய இந்நான்கினுடைய காந்திபோலப் பிரகாசிக்கும்கைலாயமென்று ஒருதிருமலையுண்டு, அந்தத்திருமலைமேல் வணங்கிறதற் காகத் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் நெருங்குகிறபடியினாலே கிரீடத்தோடு கிரீடம் இடிபட்டுச் சப்தத்துடனே சொர்ண பொடிகளும் ரத்நப்பொடிகளும் உதிர்ந்து மகமேருகிரிக்குச் சமானமாகக்குவியும்—எ-று. (௩)

இந்திரநீலச்சிலையாலிசைத்தகடூந் தெரியாமலெழுதிச்சேர்த்து*
மந்தரமாமெனவயிரத்தூணிறுத்திமாணிக்கமதலைகூட்டி. ... ... .. *
செந்துகிராற்போதிகையுமரகதத்தாலுத்திரமுஞ்செறித்துமீதே . *
சந்திரகாந்தத்தகடுபரப்பியமண்டபமுளதச்சயிலமீதே... ...- .. *

(இதன் பொருள்.)

இந்திரநீலக்கல்லினாலே ஒன்றோடொன்றுசேர்த்த சந்துதெரியாமல் சித்திரமெழுதிச் சுவர்வைத்து மந்திரகிரிபோல் வயிரத்தூண்களை நிறுத்தி மாணிக்கத்தினாற்செய்த கொடுங்கைசேர்த்துச் சிவப்பாகிய பவளத்தினாலே போதிகையும் மரகதத்தினுத்திரமுஞ் சேர்த்து மேலேசந்திரகாந்தத்தகடுவேய்ந்த மண்டபம் ஒன்றுண்டு அந்த மலையின்மேல்— எ-று. (௪)

இருமருங்குந்தரளமணி யிழைத்தவரியாசனத்தி லிருந்து,நீலப்-*
பருமணியாலிழைத்ததொருபாதபீடிகையின்மலர்ப்பதத்தையூன்றி
-மருவுபெருங்கயிலையின்மீதிருந்துமுயல்கன்றுமுதுகில்வலத்தாளூன்
றி-பருமறையுமுனிவருக்குமாக்குமிறையெனவிருந்தனந்தமிவ

(இதன் பொருள்.) [ளே.

அந்த மண்டபத்தில் இரண்டுபக்கமும் முத்துக்களிழைத்த சிங்காதனத்திலிருந்து பரிய நீலரத்தினத்தினாலே இழைக்கப்பட்டிருக்கின்ற பாதக்குறட்டின்மேலே மலர்போன்ற பாதங்களைவைத்துக்

கொண்டு நந்திகேசுரர் சிவகணங்களாலே மருவப்பட்ட பெருமையாகிய கைலாயகிரியில் எழுந்தருளியிருந்து மூயலகன்மேல் வலப்பாதத்தைவைத்து அரிதாகியவேதப்பொருளைமுனிவர்களுக்குத்திருவாய்மலர்ந்தருளிய பரமசிவம்போல் இருந்தார் அந்தவேளையில்— என்றவாறு. (௫)

குற்சனுரோமசன் குமுதன்குமுதாக்கன்சகடாயன்கும்பசாதன்,
வற்சன்வைசம்பாயனர்கலுசி முனிபுலிக்காலன்வாமதேவன் ........*
நற்சனகன்சனக்குமரன்வாதராயணன் மதங்கனடனத்தாளை . .....*
அர்ச்சனைசெய்யனந்தமுனி முதலனந்தமுனிவர்தம்மருகிற்சூழ-*

(இ-ள்) குற்சர், ரோமசர், குமுதர், குமுதராட்சர், சகடாயர், அகத்தியர், வற்சர், வைசம்பாயனர், கலுசி, வியாக்கிரபாதர், வாமதேவர், சனகர், சனற்குமாரர், வியாசர், மதங்கர், சுவாமியினது நடனம்பொருந்திய திருவடிகளில் அர்ச்சனைசெய்கின்றபதஞ்சலிமுதலாகிய அனந்தமுனிவர்கள்தம்முடையபக்கத்திற்சூழ—எ-று. (௬)

மன்னியமார்க்கண்டமுனியுடனெழுந்துபணிந்து யிர்கண்மழைமின்போல,
விற்றிலத்திற்பிறப்பதுவுமிறப்பதுவுமிருவினையுமெமக்குத்தோன்றச்,
சொன்னவொருதனிமுதலே முத்திபெறும்பரிசெமக்குச்சொல்வாயென்று,
ஊன்னவுரைசெவிப்புகலுநந்தியருள்சுரந்துமுனிக்கருள்வதானுன் ... . ...........*

(இதன்பொருள்)

நிலைபெற்றவயதினையுடைய மார்க்கண்டேயமுனி யானவர்சீக்கிரத்திலெழுந்திருந்து நந்திகேசுரரை வந்தனஞ்செய்து சுவாமிமேகத்தில்தோன்றி அதிசீக்கிரத்தில் அழியு மின்னல்போல் உயிர்களானவை இவ்வுலகத்தில் பிறக்கிறதும் இறக்கிறதும் இவைகளுக்குக் காரணமாகிய நல்வினை தீவினைகளாகிய இரண்டும் எங்களுக்குவிளங்கும்படியாக அருளிச்செய்த ஒப்பற்றகடவுளே நாங்கள் மோட்சத்தையடைகிறதற்குத் தக்கவழியைக்கிருபைசெய்யவேண்டுமென்றுகேட்க, அந்தவார்த்தையைக்கேட்டவுடனேமிகுந்தகிருபை யுண்டானவராகி நந்திகேசுரர்மார்க்கண்டேயருக்கருளிச்செய்யத்தொடங்கினார்-று.

கம்பைநதிகும்பநதி காவிரிகோதாவேரி கன்னவேணி ... .........*
பம்பைநதி வேகவதி வேதவிதி சரயுநதி பரமாங் கங்கை .. . [ணை
செம்புநதிபொன்முகி நல்யமுனைநதிநருமதை மேற்செப்புஞ்சோ
அம்புவியின்மிகவுளவங்காடினர்தம்வினையகற்றுமதுவல்லாமல...*

[இதன் பொருள்.]

கம்பைநதி, கும்பநதி, காவேரி, கோதாவரி, கிருஷ்ண வேணி,- பம்பைநதி, வேகவதி, வேதவிதி, சரயுநதி, எல்லாநதிகளுக்குமேலாகிய, கங்காநதி, தாமிரபன்னி, பொன்முகி, யமுநாநதி, நர்ம

னாநதி, மேன்மையாகச்சொல்லப்பட்ட சோணநதியென்று அழகு பொருந்தியபூவுலகத்தில்அநேகநதிகளுள்ள அலைகள்தம்மிடத்தில், ஸ்நானஞ்செய்தவர்களுடையபாவத்தை நீக்கும்அதுவல்லாமல்,எ-று,

காசியெனு மொருதலமிக் கயிலையினுஞ்சிறப்புளது கங்கைநீத்தம், வீசுதிரைக் கொழுந்தோட்டிப் பாகதிக்கு வேரோட்டும் வியந்து ழூழ்கின், மாசினுடலதிலிறந்தான் மாமேனும்விலங்கேனு மனிதரோனு,மீசனருளுபதேசஞ்செவிப்புகலாலிறைவனெனவிருக்கலாமே.*

(இதன்பொருள்)

காசியென்கிற ஒருதிவ்வியஸ்தலமானது இந்தக்கைலாயத்தைப்பார்க்கிலும் சிறப்புள்ளது அக்காசியில்வருகின்ற கங்காப்பிரவாகமானது எறிகின்ற அலைகளைக்கொழுந்தாக ஓடச்செய்து தன்னிடத்தில்விரும்பி முழுகினால் அவர்களுக்கு மோக்ஷத்துக்கு வழிகாட்டும் எளங்கும்பொருந்தியதேகம் அவ்வூரில் விட்டால் பசுவாகிலும் மிருகமாவது மனிதராவது பரசிவனது தாரகப்பிரமோபதேசம் செவியிற்சேர்தலாலே சிவசாரூப்பியதசையடைந்திருக்கலாம்—எ-று. (௯)

போகியொரு புற்றிடங்கொண்டிருப்பது கண்டிடுதலல்லாற் புவிதனிற்போற்றும், யோகியொருபுற்றிடங்கொண்டிருந்ததலங்கண்டதுண்டோ வுரைப்பக்கேளு, நாகமிசை நடித்தவருக குயிர்வேண்டித் திருதவஞ்செய்தனிலமகையில், சேருமனத் தவரான மருவாரூர் தனையெரித்தார் திருவாரூர்... ..... .... ... .... ......*

(இதன்பொருள்)

சர்ப்பமானது புற்றையிடமாகக்கொண்டிருந்ததைப்பார்த்ததேயல்லாமல் ஜனங்கள்போற்றுகின்ற யோகியானவர்புற்றினிடத்திலேயிருந்த தலத்தைப்பார்த்ததுண்டோ அதுயாதெனிற் சொல்லக்கேளுங்கள் காளிங்கனென்னும் பாம்பின்மேலேறி நடனஞ்செய்த விஷ்ணுவுக்கு உயிர்ப்பிச்சைவேண்டி லட்சுமியானவள்பூசைசெய்துகொண்டிருந்த கமலாலயமென்னும் தலமாகி வஞ்சம்பொருந்திய மனத்தையுடைய திரிபுராதிகளையெரித்த சிவன் வாசஞ்செய்கின்ற ஊராகியதிருவாரூர் என்னுந்திவ்வியஸ்தலந்தான்—எ-று ......(௰)

ஏக்கவிராட்புருடன்மனத்தல மெனுமோர்தலமுளதத் தலத்தின் பீடு... முக்கணையர்நடிப்பரவர் மூர்த்தியிலாயிரத்திலொரு மூர்த்திதானே யிக்கயிலையிடத்துரைவதென்னிலதின்பெருமை நம்மாலிசைக்கலாமோ, அக்கணகசபைகண்டா ரரியயன்காணுதமூர்த்திய டைருவாரோ ..... .. ....... .... ....... .. ... ......... ... ...... ...*

(இதன்பொருள்)

பெருமைபொருந்தியவிராட்புருஷனுடையஇருதயஸ்தலமாகிய

சிதம்பரமென்று ஓர் ஸ்தலமுண்டு அதிலுள்ளதாகிய கனகசபையில் மூன்றுகண்களையுடைய பரமசிவன் ஆனந்த தாண்டவஞ் செய்வார் அவருடைய மூர்த்திகரத்தில் ஆயிரத்திலொன்றுதான் இக்கைலாயபதத்திலிருக்குமென்றால் அந்த ஸ்தலத்தினது பெருமையை நம்மாற்சொல்லக்கூடுமோ அப்படிப்பட்ட அழகுபொருந்திய கனகசபை கண்டவர்கள் விஷ்ணுவினாலும் பிர்ம்மாவினாலும் காணப்படாத மோட்சத்தையடைவார்—எ-று. (௰௧)

தாங்காழியவன்சிவனைவழிபடுமூதுவளையத்தலத்தைப்பார்க்கி
ஓங்கார வடிவதிலே யுயிரிழந்தா லுடலழியா தொளிகெடாது...[ஸ்,
வீங்காது தெகிழாது பிறவுயிரால் வருந்தாது வெடித்திடாது *
நீங்கான மணங்கிருமி பிறவாது கிடக்கும்வலச் செவிமேலாக... *

(இதன் பொருள்)

சக்கரத்தைக் கையில்தரிக்கின்ற விஷ்ணுவானவர் பரமசிவனைப் பூசைபண்ணிய விர்த்தாசலமென்று ஒருஸ்தலமுண்டு, அந்த ஸ்தலத்தைப்பார்க்குமிடத்தில் அதுபிரணவசொரூபமாயிருக்கும், அந்த ஸ்தலத்தில், உயிர்விட்டால் தேகமழியாது, நிறங்குன்றாது, வீங்கமாட்டாது, கட்டுநழுவாது, மற்றப்பட்சிமிருகங்களால் பின்னமாகாது, வெடிபடாது, அதில்துர்க்கந்தமும் புழுவும் உண்டாகாமல் வலதுகாதுமேலாகக்கிடக்கும்—எ-று. (௰௨)

பொய்மகிட முகனைவென்ற வம்மையிடமகலாத புனிதமூர்த்தி*
செம்மையிட மென்றிருந்த கருமகிடமுகமாகச் செறிகேதார. . *
இம்மையிடர் மறுமையிடர் ஞானமில்லாச் சிறுமையிடரில்லா நீ
ர்க்கு, மும்மையிடம் பெறுமுலகுக் கெளிதாகத்தனியிருந்த முத்தி
போலும்... ......... .... ... .. ... .. .......... ........ ..... ...*

(இதன் பொருள்.)

மெய்மையாகிய எருமைமுகத்தினையுடையமகிடாசூரனை ஜயித்த பார்ப்பதி வாமபாகத்தில் நீங்காதபரிசுத்தராகிய பரமசிவனானவர் செம்மையாகிய இடம் இதுதானென்று எழுந்தருளியிருக்கிற கறுப்பாகிய எருமையினதுமுகம்போல் விளங்கிய திருக்கேதாரமென்னும் ஸ்தலமானது இந்தஜன்மத்தில் வருகிறதுக்கமும் மறுமையில் வருகிறதுக்கமும் ஞானமில்லாததனாலே உண்டாகிற துக்கமுமாகிய எல்லாத்துயரத்தையும் தீர்க்கிறதற்கு மூன்றுலகத்தாருக்கும் எளிதாகித்தனியேயிருந்தமுத்திஸ்தானம்போல இருக்கின்றது—எ-று()

இருப்பனைத்தன் பருப்பதத்திற் பிரமராம் பிகையுடனின் றிர
ண்டுபோதும்- விருப்பனைத்தன் பணிந்திமையோ ருலகுமுதலனைத்
துலகும் விதித்தான்மற்றறத்- திருப்பதிக்கே யிருப்பவனுந் தேவ
ர்களுஞ் சராசரமாச்செனித்தவ்வூரி - லிருப்பதற்கு முயல்வரொன்று

(இதன் பொருள்)

மல்லிகார்ச்சுனமென்கிறபர்வதத்தில் பிரமராம்பிகையுடனேபரமசிவருணவர் எழுந்தருளி யிருக்கிறுரென்று அன்னவாகனத்தையுடையபிர்மா வானவர்வந்து பத்தியோடுஇரண்டு வேளையும் வணங்கி அவருடைய அருள்பெற்றுத்தேவலோகமுதல் எல்லாலோகத்தையும்படைத்தார், மற்ற திருப்பதியிலிருக்கின்ற வேங்கடாசலபதியும். தேவர்களும் அந்தஸ்தலத்தில் சரமாகவும் அசரமாகவும் பிறந்திருப்பதற்குத்தவஞ்செய்வார்களென்றுல் 'எப்படிப்பட்டஸ்தலங்களும் அந்தக்ஷேத்திரத்துக்குச்சமானமாகுமோ—எ-று. ... ... (௰௪)

விருப்படியார் சொரிந்தவறு கலருடனேவிழியிடந்த வேடர்காவிற் - செருப்படியுமுகந்தபிரான்காளத்தி நகரமெனுந் தெய்வபூமி- பருப்பதமாகியும்விளங்குந் தண்ணருக்கொழிக்குமலர்ப்பதுமைபோடு- மருப்படியுந் துழாய்மார்பின் வடமலைமேலிருந்துகண்டுவணக்கமாதோ... .. ... .... . ..... .. ... ..... *

(இதன் பொருள்)

திருக்காளத்தியென்னுந் தெய்வீகம்பொருந்திய ஸ்தலத்தில்ஆதிசைவ ப்ராமணராகிய சிவகோசரியார் என்பவர்பத்தியோடுமிகுதியாக அர்ச்சனைசெய்த அருகுபுஷ்பங்கள் இவையுடனே கண்ணைப்பிடுங்கிப்பதித்தகண்ணப்பசுவாமிகளது காற்செருப்பையும் விருப்பமாயேற்றுக்கொண்டலிங்கசொரூபமாகிய சிவன்றானே குளிர்ச்சிபொருந்திய தேனைச்சொரிகின்றதாமரைமலரிலிருக்கின்றலட்சுமியோடுவாசனை யுற்றதுளசியாலையையணிந்தமார்பினையுடையவிஷ்ணுவானவர் வேங்கடமென்னுந்திருப்பதியில்நின்றுகொண்டு தரிசனஞ்செய்துவணங்கும்பொருட்டு அந்தக்காளத்தியில்மலையாகியும் விளங்குகிறுர்—எ-று. (௰௫)

தேக்குநா விருநிசையும்புகழ்ந்த தொண்டநாடெனுமோர் தெய்வநாட்டி- ஞெக்கினர்வினையகற்றுமொருதல முண்டதன்பெயரை நுவலக்கேளும்- வாக்குநாயகிகணவன் படைத்தபுவி தழைக்கவறம்வளர்த் தெந்நாளும்- காக்குநாயகியுடனே கம்பநாயகருறையுங்கச்சிமூதூர். *

(இதன்பொருள்.)

அகன்ற எட்டுத்திக்கிலுள்ளவர்களும் புகழ்ந்துகொண்டிருக்கிற தொண்டமண்டலமென்னுந் தெய்வீகம்பொருந்தியநாட்டில்தரிசனஞ்செய்தவர்களுடையபாவத்தைப்போக்குகின்ற ஒருஸ்தலமுண்டு அதன்பேரைச் சொல்லக்கேளுங்கள்சரஸ்வதியின்கணவனாகிய நான்முகன்படைத்த உலகத்திலுள்ள உயிர்கள்பிழைக்கும்படிக்கு முப்பத்திரண்டு தர்மத்தையும்பரிபாலனஞ்செய்து எந்நாளும்காக்கின்

ற காமாட்சியம்மையுடனேஏகாம்பரேசுரர் எழுந்தருளி யிருக்கிற காஞ்சீபுரமாகும் — எ-று. (௰௬)

பழுதறவேயெழுகடலுமெழுகிரியுமெழுதலமும்படைத்தவேதக் *
கிழவனறியாமுடியையொருபால னறிந்தபதிகிளர்த்தக்கேளும் . *
அழகுதருநடம்புரியுமிறையவருக்கம்பிகைபூசையயனார்பூசை .. *
விழைவுதருமரிபூசைகரன்பூசைபுரிந்ததிருவிரிஞ்சைசழுதூர்... ... *

(இதன்பொருள்)

யாதொருபழுது மில்லாமல் ஏழுசமுத்திரத்தையும் ஏழுமலையையும் ஏழுலகத்தையும் படைத்தபிரமாவினாலே அறியக்கூடாத சிரசை ஒருஆதிசைவப்பிராமணப்பிள்ளையானது அறிந்தஸ்தலத்தைச் சொல்லக்கேளுங்கள் ஆனந்ததாண்டவஞ்செய்த சுவாமிக்குப் பார்ப்பதியாரும்பிர்மாவும்சிவனைசமிதுத்தவிஷ்ணுவும்கரனும்பூசித்தவிரிஞ்சீபுரமென்னும்ஸ்தலமாம் [என்றவாறு] சுவாமியினதுசிரசைப்பாலன் அறிந்ததாவது, அபிஷேகமுதலியவைசெய்கிறதற்குச் சுவாமியினுடையதிருமுடியானதுஒருகுருக்களுடைய பிள்ளையின்கைக்கு எட்டாமையினாலே அந்தப்பிள்ளையானது பூசாகாலத்தவறுகிறதென்னசெய்வேனென்று விசனப்பட அப்போது லிங்கவுருவாயிருந்தபரமசிவன்சிரசைவளைத்தருளினதால் — எ-று. (௰௭)

பொய்யாதபுனல்பெருகுங்காவேரி நதிக்கரையிற்பூந்தராயு ...*
மையாறுமிடைமருதுந்திருக்குடந்தைவளநகருமானைக்காவு ...*
மையாருமிடத்தார்திரிசிரமலையுமாணிக்கமலையுந்தோன்று [தானே
மெய்யாகவவற்றினதுபெருமை யெல்லாம்விரித்துரைக்கும் வேதந்

(இ-ள்.) பொய்க்காமல் பெருகிவருகின்ற காவேரிநதியினிருகரையிலும் சீர்காழி திருவையாறு- திருவிடைமருதூர்-வளம்பொருந்தியகும்பகோணம் திருவானைக்கா- விஷம்பொருந்தியகண்டத்தையுடையமாதுருபூதேசுரர் எழுந்தருளியிருக்கிற- திரிசிரபுரம்- ரத்தினகிரி- இவைமுதலாகிய ஸ்தலங்கள்விளங்கிக்கொண் டிருக்கும் அந்தத் திவ்வியக்ஷேத்திரங்களினுடைய பெருமையெல்லாம்வேதமானதுதான்மெய்ம்மையாகவிரித்துச்சொல்லும்— எ - று (௰அ)

பருவலையார்ப்பரிகரும்வையை நதிக்கரையின் மதுரையறுபத்
துநாலுதிருவிளையாட்டிறைவனியற் றியதலமா மதன்பெருமை
செப்பலாமோ - கருவிளையாட்டகற்றுமிராமேச்சுரந்தென் கடற்
கரையிற் காணுமங்கே- செருவிளையாட்டிராகவனு ரிராவணனைத்
தொலைத்தபழிதீர்த்திட்டாரே.

(இதன்பொருள்)

பெரியசங்குகள் முழங்குகின்ற வையையாற்றின் கரையில் சோமசுந்தரக்கடவுள் அறுபத்துநாலுதிருவிளையாடல் செய்தருளிய மது

ணாயென்று ஒருஸ்தலமுண்டு; அந்தஸ்தலத்தின்பெருமை யாவராலுஞ்சொல்லப்படாது தென்திக்குச்சமுத்திரத்தின்கரையில் ஜனனதுக்கத்தைப்போக்குகின்ற ராமேச்சுரமென்று ஒருஸ்தலமுண்டு, யுத்தத்தைவிளையாட்டாகச்செய்கின்ற இராமரானவர் இராவணனைக்கொன்றதனால்வந்ததோஷத்தை அந்தஸ்தலத்தில் சிவனைப் பூசித்துத் தீர்த்துக்கொண்டார்—என்றவாறு. (௰௯)

அத்தகையதலங்கடமிற் பிறக்கவுட லிறக்கவிழியமையக் காணச், சுத்தவெளிதனிலாடுஞ் சுடரொளிக்குமணங்களிக்கத் தூய்நீராட்ட, வித்தமதையெடுத்திறைத்துச்சிவாலயமும்விரிபொழிலுமிகவுண்டாக்க, வுத்தமமாகியபாடகதியுளதென் றுரைக்கமுனி யுரைப்பதானான் *

[இதன் பொருள்.]

அப்படிப்பட்ட தன்மையையுடைய ஸ்தலங்களிலே யாவராகிலும்பிறந்தாலும் இறந்தாலும் போய்த்தரிசித்தாலும் பரிசுத்தமாகிய சிதாகாசத்தில் நிர்த்தனஞ்செய்யும், மிகுந்தபிரகாசமே சொரூபமாகிய சிவனுக்குத் திருவுள்ளமானந்தங்களிக்கும்படி தூய்மையாகிய நீரினால அபிஷேகஞ்செய்தாலும் திரவியங்களைச் செலவுசெய்து சிவாலயங்கட்டுவித்தாலும் விரிந்தபூஞ்சோலைமிகவைத்தாலும் உத்தமம்பொருந்திய பரகதியுண்டாமென்று நந்திகேசுரர் அருளிச்செய்யக்கேட்டுமார்க்கண்டேயர் சொல்லத்தொடங்கினார்—என்றவாறு. (உ௰)

இந்நிகரா நதிதோறுந் தலந்தோறுமிப்படியே யியற்றவென்றால்-முன்னியசி ரமரருக்குஞ் சித்தருக்கு முனிவருக்கு முடிவுறாது-மின்னனிகருஞ் சிறுவாழ்க்கை மனிதர்தமக் கெளிதாமோ மேவினாலு-மன்னியமாம் பிறவுயிர்கட்கு மரத்தினுக்குங் கிடையாதே யமலவென்றான்..................................................*

[இதன் பொருள்.]

இப்படிப்பட்ட தன்மையையுடைய நதிகள்தோறும் ஸ்தலங்கள்தோறும்போய்த்தேவரீர்கட்டளையிட்டவிதமாகவேதீர்த்தமாடி வழிபாடு முதலானவைகளைச்செய்யவேண்டுமென்றால் மிகுந்தசிறப்புப்பொருந்தியதேவர்களாலும் சித்தர்களாலும் முனிவர்களாலும் முடியாது அப்படியாக மின்னல்போல்தோன்றி க்ஷணத்திலழியுஞ் சிறியவாழ்நாளையுடைய மனிதர்களுக்கும் எளிதில் முடியுமோ அப்படி முடிந்தாலும் மிருகங்களுக்கும பட்சிகளுக்கும் விருட்சங்களுக்குங் கிடைக்கமாட்டாதே சுவாமியென்றுசொன்னார் மார்க்கண்டேயர்—என்றவாறு. (உ௧)

ஆமெந்த நதிதோறு மினிதெனுமத் தலந்தோறு மனந்தகாலந்-தேமலின்ற பயனுதவுஞ் சிவஞானம் வருந்தாமற்சிறிதுமேயாதி, நின்ற வுறுப்பிலர்க்கு மறிவிலர்க்கும் புலையருக்கு, நாகாள்வார்க்கு-

- வோடுகின்ற விலங்கினுக்கு மற்றெவைக்குந் தருமமொன் றுரைப் பாயென்றான் ........................................ *

(இதன் பொருள்.)

மனிதர்கள் ஆடுகின்ற அந்தநதிகள்தோறும் இனிதாகிய அந்தஸ் தலங்கள்தோறும் அநேககாலமாக ஸ்நானஞ்செய்து தரிசனமுதலி யவைகளைச்செய்த்தலால் உண்டாகியபிரயோசனமாகிய சிவஞானத் தை வருத்தப்படாமல் கொஞ்சகாலத்தில்தானே பிரதக்ஷணஞ்செய் தல் கும்பிடுதல் தரிசனஞ்செய்தல்முதலியவற்றிற்கு ஏதுவாகிய-கை கால்-கண்களற்றவர்களுக்கும், விவேகசூனியர்களுக்கும், நீசர்களுக்கு ம், நரகத்தில்விழத்தகுந்த பாவஞ்செய்தவர்களுக்கும், சஞ்சரிக்கின் ற மிருகங்களுக்கும் மற்றுமுள்ள எல்லாச்சீவராசிகளுக்கும் கொடுக் கின்ற ஒருஸ்தலம் அருளிச்செய்யவேண்டுமென்று கேட்டார் மார்க் கண்டேயர்— என்றவாறு. (உஉ)

இப்படியே நமனைவென்ற பெருந்தவனு மிருந்தவரு மியம்பி யேத்திக்,கைப்பதும மலர்கொடுதன் காற்பதுமந் தீண்டுதலும் கரு ணையாகி, அப்படியே முத்திதரு மொருதலமுண்டுரைக்குதுமென் றமைத்தான்பின்னை, மைப்படியுங் கண்டத்தா னருணகிரி நினைந்து பரவசத்தனானான் ........................................ *

(இதன் பொருள்.)

இயமனை ஜயித்த பெருமையாகிய தவத்தினையுடைய மார்க்கண் டேயரும்,மற்றுமுள்ளமுனிவர்களும், இந்தப்பிரகாரமாகச் சொல் லி ஸ்தோத்திரஞ்செய்து தாமரைமலர்போன்ற கைகளால நந்திகேச ரருடைய தாமரைமலரொத்த திருவடிகளைஸ்பரிசித்துவந்தனஞ்செ ய்த அளவில் அவர்கிருபையுள்ளவராகி நீங்கள்சொன்னபடியேமோ க்ஷங்கொடுக்கிறஸ்தலம் ஒன்றுண்டு, அதைச்சொல்லுகிறோம் என்று கையமர்த்திப் பின்பு விஷந்தங்கிய கண்டத்தையுடைய பரமசிவன் எழுந்தருளியிருக்கிற அருணாசலமென்னும் தலத்தைநினைத்து பர வசமானார் நந்திகேசுரர்—என்றவாறு. (உ௩)

அங்கமெல்லா மயிர்பொடிப்ப நடுநடுங்கி விழியிரண்டு மருவி பாயச் - செங்கையிணை மலர்குவிய மொழிதளர நெடும்போது தெ ளிவில்லாமற்- கங்கையணி சடையானே யருணகிரிப் பெருமானே கனற்கண்ணனே- எங்களையாளுடையானேயெனத்துதித்து விழித்தத ற்பின் இசைப்பதானான் ........................................ *

(இதன் பொருள்)

தேகமெல்லாமயிர்க்குச் செறியக்கம்பிதங்கொண்டு இரண்டுகண்க ளிலும் நின்று அருவிபோல் ஆனந்த பாஷ்பம்வர மலர்போன்ற இரண்டுகைகளும் ஒன்றாய்க்குவிய வார்த்தைதடுமாற அநேக நழி கை ஞாபகமில்லாமல்கங்கையைத்தரித்திருக்கின்றசடையையுடைய

வரே! அருணகிரியில் எழுந்தருளியவரே! அக்கினிக்கண்களையுடையவரே! எங்களையாட் கொண்டவரே! என்று ஸ்தோத்திரஞ்செய்து விழித்துக்கொண்டு அதன்பின்பு சொல்லத்தொடங்கினார் நந்திகேசுரர்—எ-று... ..... ... ..... .... .... ..... ....(உச)

(எழுசீரடி ஆசிரியவிருத்தம்,)

சத்திய மதா மொழிவன் முத்திதருமூரது தனக்குரிய நாமமிகவுண், டத்தனையுநான்மொழிய வெத்தனை வலேனுமிலோரற்பவளவேபுகலுவேன்- சித்தியுதவுங்கவுரி தேசுநகமென்றுபெயர் தென்னருணையென்றுபெயர்சீரா வைத்தசிவலோகநகமென்றுபெயர் நீடுசதுர்வாயினகமென்றுபெயரே .. ... .... ..... .... ...—...... ✻

(இதன்பொருள்.

அப்படி ஸ்தோத்திரம் செய்தபின்பு நந்திகேசுரர்சொல்வார்வேளூம் மாதகண்டேயரே சத்தியமாகச் சொல்லுகிறேன் மோக்ஷத்தைக்கொடுக்கிறஸ்தலமொன்றுண்டு அதற்குரியநாமங்களோ அநேகம் அத்தனைபெயரையுஞ் சொல்லுகிறதற்கு நானெவ்வளவு சத்தியுடையவன் ஆகிலும் அவைகளில் சிலநாம மாத்திரஞ் சொல்லுகிறேன் சித்திகளைகொடுக்கிற கௌரிநகரமென்றும், தேசுநகரமென்றும், அழகிய அருணாசலமென்றும், சிறப்புப்பொருந்தியசிவலோகநகரமென்றும், நாகரிகமிகுந்த வாயினகரமென்றும், நூலகளிற் சொல்லப்பட்ட திருநாமங்களையுடையது—எ-று... ..... (உரு)

சத்தபுரியேமுதலெடுத்ததலம் யாவுமொரு தட்டுமொரு தட்டதனிலே, யத்தலமுமிட்டெதிர் நிறுக்கவவைகட்கதிக மானதோர்நகரம்,முத்திநகமென்றுபெயர் ஞானநகரென்றுபெயர் முத்தியதலேசுரமெனுஞ், சுத்தநகமென்றுபெயர்தென்கயிலையென்றுபெயர்சோணகிரியென்றும்பெயரே. ✻

(இதன்பொருள்.)

பின்னும்நந்திகேசுரர்சொல்வார் சத்தபுரிகளென்கிற, அயோத்தி, மதுரை, மாயாபுரி, காசி, காஞ்சிபுரி, அவந்தி, துவாரகை, முதலாகிய எல்லா ஸ்தலங்களையும் ஓர்தட்டிலும் அந்த அருணாசலஸ்தலத்தைஓர்தட்டிலும் வைத்து நிறுக்க அந்தஸ்தலங்களுக் கெல்லாம் அதிகனத்தையுடைத்தாயிருந்து பிரகாசிக்கின்ற அந்தஸ்தலத்துக்கு முத்திநகரமென்றும்,ஞானநகரமென்றும், முதன்மையாகிய தலேச்சுரமென்றும், சுத்தநகரமென்றும், தட்சிண கைலாயமென்றும், சோணகிரியென்றும், பெயராம்—எ-று. ... .... ... (உசு)

வாதமிகுகாலவழ லூழியலையேழுபுயல் வாதைபுரி யாதநகரஞ், சிதமுதலானபிணி நீமையிடைபூறுபசி சேரவரி தானநகரம்புமர் நகர்க்கண் மாதவர்கள் பூசைபுரி மா[illegible]ரம்,

போதிலுறை வேதியர்தொ ணூறுபெய ரோடுறுவர் பூசைபுரி
தேவநகரம்... .... .... .... .... — .... .... .. *

(இதன்பொருள்)

இறுதிக்காலத்திலுண்டாகிய பிரசண்டவாயுவினாலும் ஊழித்தீயாகிய வடவாமுகாக்கினியினாலும் பொங்கிவரு மசமுத்திரப்பிரளயத்தினாலும் யுகமுடிவில் பொழிகின்ற ஏழுமேகங்களினாலும் யாதொருவாதையும் அடையாதஸ்தலம் சைத்திய முதலான பிணிகள் தீண்டயாகியபிடைபூறுகள் பசியிவைகள் சேராத ஸ்தலம் மகத்தாகியதவசிகள் அநேகம் விஷ்ணுக்கள் பூசைசெய்த ஸ்தலம் அப்படிப்பட்ட விஷ்ணுக்களுடைய நாபிகளாகிய தாமரைமலர்களில உண்டாகிய தொண்ணூற்றாறு பிரமாக்கள் பூசித்ததெய் விகம் பொருந்தியஸ்தலம் அருணசமென்னும்ஸ்தலமாம்—எ-று .. .. (௭௨)

ஒன்றுளது பூமிதனிலின்றுபுதி தன்றுலகு மும்பருமுயர்ந்தவெளியு,மென்றுளதுத் நாளுளதுவேதமுடி மீதினி லிருப்பதகலாமலதிமேலார்- குன்றுதலிலாதவொருவெற்புளது புண்டரிகமோளகையுமுருவியே- நின்றுளது தென்றிசையிலென்றுமழி யாதுநெடு நீருலகு வாழ்வுபெறவே. *

(இதன்பொருள்)

இப்படிபட்ட தன்மையையுடைய ஸ்தலம் ஒன்றுண்டு அந்தஸ்தலம் இன்றைக்குப் புதிதாகவந்ததல்ல - இந்தப்பூவுலகமும்- மேலுலகங்களும் - ஆகாயவெளியும் என்றைக்கு உண்டானதுகளோ அந்தநாளிலேதானே உண்டாயிருக்கின்றது நீங்காமல் வேதத்தின் முதலிலுள்ளது அந்தஸ்தலத்திலேகுறைதலில்லாதஒருமலையுண்டு அது தென்றிசையில் என்றும் நிலைபெற்றுப் பிரமாண்ட கோளகையையூடுருவி நிற்கின்றது நெடியகடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்கள் வாழும்படிக்கு—எ-று (௨௮)

(கலிவிருத்தம்.)

ஆரிடமிராக்கத மசுரந் தேவதந்.... .... .... .... *
தாருடையு மாநிடஞ் சிப்பு வென்றதாம் .... .... .... .... *
பேரிடுமிலிங்கமே பிறங்கு மெங்கணு .... ... *
மேருடைப்பருபத மிலிங்கமாவது .... .... *

(இதன்பொருள்)

ஆரிஷமென்றும்- ராக்ஷசமென்றும்- ஆசுரமென்றும்- தைவதமென்றும்- மாலையைத் தரிக்கின்ற மானிடமென்றும் - நாமங்கள் பெற்றலிங்கங்கள் எந்தஸ்தலங்களிலும் பிரகாசிக்கும் இந்தஸ்தலத்திலோ வென்றால் மலையேலிங்கமா யிருக்கின்றது —எ-று, ரிஷிகளாலே பூசை செய்யப்பட்டது ஆரிஷலிங்கம் ராக்ஷசர்களாலேரா
க்ஷ [illegible] லை,தைவதலிங்கம்,மானிடராலேமானிடலிங்கம்

செங்கணன் முதல்யுகந் திரேதைமாமணி
பொங்கியதுவாபரம் பொலிந்தபொன்னிறந்
தங்கியகலியுகந் தன்னிலேசிலை
யங்கமாமதன் பெயரருணபூதரம்

(இதன் பொருள்.)

முதல் யுகமாகிய கிர்தயுகத்தில் சிவப்பாகிய அக்கினிமலையாகவும், திரேதாயுகத்தில் மாணிக்கமலையாகவும், துவாபரயுகத்தில் குருத்தபிரகாசத்தையுடைய பொன்மலையாகவும், கலியுகத்தில் கல்மலையாகவும், திருவுருககொள்ளும் அந்தமலைக்கு அருணாசலமென்னும் திருநாமம்—எ-று. (௧௰)

கருவியாமுகக்கடைச்சொரியுங்காரின
முருவமேழன்றியொவ் வொன்றுகோடியாய்ப்
பருவமாயிரந்துளி டனையிற்பெய்யினு
மருவியாயடங்குமவ் வசலமீதினில்.

(இதன் பொருள்.)

எல்லாச் சீவராசிகளும் கருவறும்படி யுகாந்தகாலத்திற் பொழிகின்றமேகங்கள் ஏழெனகிற எண்ணிக்கையில்லாமல் ஒவ்வொன்று கோடியாகி ஆயிரம்வருஷம் ஒவ்வொருதுளி பனையின்கனி போலப் பருமனாகப்பெய்தாலும் அந்தமலையின்மேலசிறிய அருவியாய்ச் சுவறி அடங்கிப்போமல்லாமல புறத்தில்வரமாட்டாது—எ-று (௧௧)

அரியயனளவிடா தனந்தகாலமாய்த்
திரிதானதற்கிணை செப்பலாகுமோ..
சுரநதிபரவிற சுனையினீருணை
விரவிதன்புரவிமே லேறிச்செல்லுமே...

(இதன் பொருள்.)

விஷ்ணுவும், பிரம்மாவும், பன்றியாகியும், அன்னமாகியும், அநேக கோடிகாலமாய்த்தேடி அடிமுடிகாணாமல் வருந்துவார்களானால் அந்த அருணாசலத்துக்கு உவமைச்சமானமாகச் சொல்லக்கூடுமோ அதுவன்றி ஆகாய கங்கையானது நட்பிலுமுககியமென்று ஸ்துதிசெய்கின்ற அந்தமலையிலிருக்கிற சுனையில் நீருண்ணச் சூரியன்தேரிற் கட்டியகுதிரையானதுகள் ஏறிநடக்கும்—எ-று. (௧௨)

வெண்மைசேர்புயலடியின்மேவுத
வெண்மகிழ்கயிலைமீ திருப்பதொக்குமா
றண்மைசேர்கார்த்திகை விளக்குசாற்றுதன்
மண்மகண்மகுடமா மணியிற்றோன்றுமே.

(இதன் பொருள்.)

வெள்ளைநிறமாகியமேகங்கள் அந்தமலையடிவாரத்திற்சேர்ந்தால் யாவராலும் எண்ணப்பட்ட கைலாயகிரிமேல், அந்தமலையிருக்கி

நதுபோலாம் குளிர்ச்சிபொருந்திய கார்த்திகைமாதத்தில் கிர்த்திகா தீபம் அந்தமலைமேல் ஏற்றினால் பூமிதேவியினுடைய கிரீடத்தில் பதித்த ரத்தினம்போலாம்—எ-று. (௩௩)

அன்றுமாற்றிசைமுக னளவிடாமுதன் ... ..... ..... ..... *
மன்றல்சேர்ந்திடுமலை வடிவுகொள்கையா ..... ... ... *
னன்றுநம் மருகனு நாமுமோர்குல ..... ... ... ... *
மென்றுளமகிழ்ந்ததே யிமையபூதரம். ... ..... ..... *

(இதன் பொருள்.)

முன்காலத்தில் பிர்மாவினாலும், விஷ்ணுவினாலும், அறியப் படாத பரமசிவன்கீர்த்திபொருந்திய அந்தமலையுருவங் கொண்டதி னாலே இமவத்பர்வத ராஜனானவன் இத்தன்காலம் வரைக்கும் வேறு சாதியாயிருந்த நம்முடையமருமகன் நம்முடையசாதியாய்ப் போய்விட்டானென்று மனது சந்தோஷித்தான்—எ-று. (௩௪)

பன்னிருதிங்களும் பரிதியானது ... ..... ..... .... *
மன்னியமதிய மும வலமதாய் வரு .. ... ... ... *
மந்நிலையுரைக்கவென் னறிவுபோதுமோ ... ... ..... *
வுன்னியவாசையா லுரைக்கலுற்றனன் ..... .... ..... *

(இதன் பொருள்.)

பன்னிரண்டுமாதமும் சந்திரசூரியர்கள் மகாமேருவை வலஞ்செ ய்தல்போலப் பிரதட்சணஞ்செய்து வருவார்களென்றால் அந்தவரு ணாசலத்தினது பெருமையைச்சொல்வதற்கு அற்பமாகிய என்னு டையபுத்திபோதுமோ ஆனாலும் சொல்லவேண்டுமென்று நினைவு கொண்டபத்தியென்பதே சொல்லத்தொடங்கியது—எ-று (௩௫)

அர்க்கமாமலையுளதடுத்தகீழ்த்திசை... ... ... ... ...*
நற்கணுப்பிரத்தவ னண்ணியாழ்த்துவன் ... ..... ... .... *
தெற்கிலேயுளதுபுத் தேளிர் மாமலை ... .... ..... .... *
பொற்கையந்தகன்றினம் புகழ்ந்துபோற்றுவான் ..... ... *

(இதன்பொருள்.)

அருணாசலமென்னுமலைக்கு அடுத்த கீழ்ப்பக்கத்தில் அர்க்கம லையென்றுஒருமலையுண்டு அதில்ஆயிரங்கண்களையுடைய தேவேந்திர ன் இருந்துகொண்டு சுவாமியைத்தோத்திரஞ்செய்வான் அவ்வருண கிரிக்குஅடுத்த தென்பாரிசத்தில் தெய்வமலையென்று ஒன்றுண்டு அ தில் சிவந்தகைகளையுடைய இயமன்புகழ்ந்துகொண்டு வணங்குவா ன்—என்றவாறு. (௩௬)

மேற்றிசைத்தண்டமா விலங்கலுண்டதிற் ... ..... .... *
சேற்றிசைவருணன்முன் செங்கைகூப்புவன் ..... ... ...*
தோற்றிடும்வடதிசைச் சூல்மால்வரை ... ... ..... .... *
போற்றியவளகையான் பொருந்திவாழ்த்துவான். .... ... *

(இதன்பொருள்)

அந்த அருணாசலமென்னுந் திருமலைக்கு மேல்பாரிசத்தில்தண்டமலையென்று ஒருமலையுண்டு அதில் மகரவாகனத்தி லேறுகின்ற வருணராஜன் சிவந்தகையைக்கூப்பி அந்தமலையைவணங்குவான் வடபாரிசத்தில் சூலமலையென்று ஒருமலையுண்டு அதில்எல்லாராலும்போற்றப்பட்ட குபேரனானவன் இருந்துகொண்டு ஸ்துதிசெய்வான்—என்றவாறு. (கஎ)

மற்றநால்வரைகளில்வாயுதீயவ ... ... ..... *
னெற்றிசேர்விழியவ னிருதிபோற்றுவன் ... ..... *
சுற்றுளமலைதொறுஞ் சூருஞ்சித்தரு ..... .... *
முற்றசீர்வசுக்களு முறைந்துபோற்றுவார் .. ... *

(இதன்பொருள்.)

மற்றநான்குதிக்குகளிலும் இருக்கிறமலைகள்நான்கிலும் இருந்துகொண்டு, வாயு, அக்கினி, ஈசானன், நிருதி, இந்த நால்வர்களும் வணங்குவார்கள் அவைகளைச்சூழ்ந்திருக்கிற மலைகளிலெல்லாம் தேவர்களும் சித்தர்களும் சிறப்புப்பொருந்திய அஷ்ட வசுக்களும் இருந்துகொண்டு வணங்குவார்கள்—என்றவாறு. (கஅ)

தன்னையேநிகருமத்தலத்திலேபுவிக் ..... ..... *
கன்னைமாதவம்புரிந்ததிகமாகவே ..... ... *
யென்னையாளுடையவனிடங்கலந்தனள் ..... *
பின்னையுமதினலம் பேசலாகுமோ .. .. ..... *

(இதன்பொருள்)

தனக்குத்தானே ஒப்பாகிய அந்தஸ்தலத்தில்பூலோகத்திற்குத்தாயாகியபார்ப்பதியம்மைமகத்தாகிய அரியதவஞ்செய்து என்னையாட்கொண்டபரமசிவனுடைய இடபாகத்திற் சேர்ந்தாள் ஆனபடியினாலே அந்தஅருணாசலத்தின்பெருமையைச்சொல்லவேண்டுமோ—என்றவாறு. (கசு)

தன்னிகர்மந்திரம் புவனந்தத்துவம் .... .... *
உன்னமாய்விலங்குமவ் வசலமாலயன் ... .. *
அன்னமேனமு மாகிநாடினார் .... ..... .... *
இன்னமுமனவிடா திடும்பைநீங்கினார்... ..... .. *

(இதன்பொருள்)

தனக்குத்தானேசமானமாகிய,மந்திரம்,புவனம், தத்துவம் இவைகளினுருவமாய்வணங்கும் அருணாசலத்தை, விஷ்ணு,பிரம்மா, இருவரும் பன்றியும்அன்னமுமாகித்தேடி இருந்தன்மையையுடையதென்று அறியக்கூடாமையினாலேதங்களுடைய கர்வத்தைநீங்கினார்கள்—என்றவாறு. (உ௰)

மருவியபெரும்புகழ்வச்சிராங்கத ... ...... *
னருணையைவலம்புரிந் தமலனாயினன் ..... ... *
கருவியுகலாதரன் காந்திசாலியென் ... ... *
திருவரும்பாகதியெய்தினாரதில் .. ..... ..... *

(இதன் பொருள்)

.. மகத்தாகிய கீர்த்திபொருந்தியவச்சிராங்கதபாண்டியன் அருணாசலத்தைப்பிரதட்சிணம்வந்ததினாலேதன்னுடையபாவத்தை நீக்கினான் பெருமைபொருந்திய, கலாதரன், காந்திசாலி, இந்தஇருவரும்அந்தஸ்தலத்தைவலம்வந்து மோட்சத்தையடைந்தார்கள்—என்றவாறு ()

எழுசீரடிஆசிரியவிருத்தம்.

ஆதியாமிவர்க டொடங்கி யின்றளவுக் கநேகருண்ட ருணையை நினைத்துங்,காதலானுரைத்துங்கேட்டுமுன்கண்டுங் கால்களால்வலஞ்செய்துமதிலே,நீதியாயிருந்துநெறிபிறழாது நெடுங்கயம்படிந்தறம்புரிந்துஞ்,சோதிதாடொழுதும்பணிவிடைசெய்துந்துளக்கிலாமுத்திபெற்றிருந்தார். ... .... ... .. . *

(இதன்பொருள்.)

முன்சொல்லப்பட்ட இவர்கள்ஆதியாகத்தொடங்கி அன்றுமுதலின்றைவரைக்கும்அநேகம்பேர் அருணாசலத்தைநினைத்து ஆசையோடுஸ்தோத்திரஞ்செய்தும்கேள்விப்பட்டும் தரிசனஞ்செய்தும் கால்களாலேபிரதட்சிணஞ்செய்தும் அதில்நீதிபொருந்திய மார்க்கத்தை அநுசரித்துக்கொண்டிருந்தும்மகத்துவம்பொருந்தியதீர்த்தங்களிலேமுழுகியும் தர்மங்களைச்செய்தும் சோதிசொரூபமாகிய சிவனைத்தொழுதும்திருப்பணிசெய்தும்கெடுதலில்லாத மோட்சத்தைப் பெற்றிருந்தார்கள்—எ-று. (௪௨)

அப்பதிதமிழ்நாட்டினிடை பெண்ணையாறு செய்யாறு பிங்கலையாகுஞ், செப்பியகமலைநதிசுழிமுனையாஞ்செய்தவோன் முபிரம்பலமா,முப்பத்துமூன்றுங்கோடிதேவர்களுமுனிவருந் தவஞ்செய்வாரதற்கோ,ரொப்புமேவிலலை யிம்பர்நாட்டிடத்து மும்பர்நாட்டிடத்துமென்றுரைத்தான்- ... ... ... ... ... *

(இதன்பொருள்)

அந்தஅருணாசலஸ்தலமானது தமிழ்நாட்டின்கண்ணிருக்கின்றது. அந்தப்பதிக்குவலப்பக்கத்தில் வருகிறபெண்ணையாறு இடையென்னுநாடியாகும் இடபக்கத்தில்வருகிற சேயாறு பிங்கலையென்னுநாடியாம் கமலையென்கிறநதி சுழிமுனையென்னு நாடியாகும் அந்தநதியில் ஸ்நானஞ்செய்தால் ஒன்றுக்குஆயிரம்பங்குபலன்வரும். முப்பத்துமுக்கோடிதேவர்களும் முனிவர்களும் அந்தஸ்தலத்தில் தவஞ்செய்வார்கள்-அதற்குச்சமானம்இந்தலோகத்திலும்மேலுலகத்திலும்இல்லையென்றுசொன்னார்தந்திகேசர்— எ-று. ([illegible])

களுக்கும், மிருகங்களுக்கும், விருக்ஷமுதலாகிய ஓரறிவுயிருக்கும், பு
ண்மைநிறைந்த நீசருக்கும், குருடருக்கும், சபாபதியினது நிர்த்தச
பையைத் தரிசனப்பண்ணக்கூடாது, பூர்வசன்மபுண்ணியத்தினாலே
அந்தச்சபைக்குப்போய்க் காணத்தகுந்தவர்களாகிய சிலர்க்குமாத்தி
ரங்கிடைக்கும்—மற்றவர்களுக்கு அரியதாகும் அந்த ஸ்தலம்—என்
றவாறு. (சுசு)

குண்டகர்பதிதர்கோளகர்புலையர்கொலைபினருறப்பினிற்குறைந்
தோர், கண்டகர்நெடுந்தூரத்தினிலிருப்போர் கருணைசேரருணைமூ
தூரத்தை, யெண்டகவொருகாலினைந்திடமுத்தியிவரலாஞ் விலங்குபு
ள்மரங்கள், முண்டகமுதலாயினவுமுன்னாணை முளைத்திட முத்தி
யெய்துமால். ..... .. ..... ..... *

(இதன்பொருள்)

ஸ்திரீயானவள் தன்கணவனுக்கன்றி வேறொருவனுக்குப் பெறப்
பட்ட குண்டகர்களுக்கும், பாவிகளுக்கும் விதவைபெறப்பட்டகோ
ளகர்களுக்கும், நீசருக்கும், கொலைசெய்கிறவர்களுக்கும், அவயவங்கு
றைந்தவர்களுக்கும், தீமைசெய்கிறவர்களுக்கும், நெடுந்தூரத்திலிரு
ப்போர்களுக்கும், கிருபைபொருந்திய அருணாசலஸ்தலத்தை நாவி
னால் நினைக்கமுத்தியுண்டாகும் இவர்களேயலாமல், மிருகங்கள், ப
க்ஷிகள், மரங்கள், தாமரைமுதலாகியகொடி பூண்டுகளும் அந்தவூரில்
முளைத்தால் முத்தியையடையும்—என்றவாறு. (சுஎ)

சிலையெலா மிலிங்க மதுசிவலோகந் தேவர்பாதவங்கள் பாதவங்க,
ளலையுலாம் புனல்கள் சடையுலாங் கங்கை யருந்துமூ ணமரருண்ணு
மமுதா, முலவியே வருதல் புவிவலம் வருத னுரைத்தசொல் சுருதியா
மறங்கள், மலைவறு சமாதி யாகுமத்தலத்தை மானுமோ மற்றொரு
தலமே... ... ... ... ... *

(இதன்பொருள்)

அந்தஸ்தலத்திலிருக்கிற சிலைகளெல்லாம்லிங்கங்களாம் ஆனபடியி
னாலே அதுசிவலோகமாகும் அந்தஸ்தலத்திலிருக்கிறவிருக்ஷங்களெ
ல்லாம்கற்பகவிருக்ஷங்களாம் அந்தஸ்தலத்திலிருக்கிற அலைபொருந்
திய தீர்த்தமெல்லாம் சுவாமியின் சடையிலிருக்கிறகங்கையாகும் அந்தஸ்த
லத்திலிருக்கிறவர்கள் சாப்பிடுகிற உணவுகளெல்லாம் தேவாமிர்தமா
கும் அந்தஸ்தலத்திற் சஞ்சரித்தல் பூப்பிரதட்சிணஞ்செய்தலாகும்
அவ்வூரிற்சொல்லும்வார்த்தைகள் வேதமாகும் அந்தஸ்தலத்தில்நித்தி
ரைசெய்தல் நிஷ்டைகூடிச்சமாதியிருத்தலாம் ஆனபடியினாலே அந்
தமற்றொருஸ்தலம்சமானமாகுமோ—என்றவாறு. (சுஅ)

முத்தழல்பரித்தோர் நான்மறைதெரிந்தோ ரைவகைவேள்வியு
முடித்தோர், மெய்த்தவம்புரிந்தோ ரறவறஞ்செய்தோ ரெண்வகை

யோகியொளினு- மந்தலதினையாதவர்க்கிலமுத்தி யாதலாலமரர்வா
னிருந்தும் - வந்துமானிடராய்ப்பிறந்ததை நினைத்துத் தானக்கிலா
முத்திபெற்றிருப்பார்,

(இதன்பொருள்)

காருகபத்தியம்- ஆகவனீயம் - தக்ஷிணாக்கினியம்- என்கின்றமூ
ன்றாகனியையுமேவர்த்தவர்களும்,ருக்கு,எசுர்,சாமம், அதர்வணம்,என்
னும்நான்கு வேதங்களையுணர்ந்தவர்களும்,பிரமயாகம், தெய்வயா
கம்,பூதயாகம்,பிதிர்யாகம், மானுடயாகம், என்கின்றவைவகையாகங்
களையும் நிறைவேற்றினவர்களும் எத்தன்மையாகியதவஞ்செய்தவர்
களும் எப்படிப்பட்ட தருமஞ்செய்தவர்களும்- இயமம்,நியமம்,
ஆசனம், பிராணாயாமம்,பிரத்தியாகாரம்,தாரணை,தியானம்,சமாதி,
எனப்படுகிற அஷ்டாங்கயோகஞ்செய்தவர்களும் ஆகிய இப்படிப்
பட்டவர்களாயிருந்தாலும் அந்தஅருணாசலத்தைநினைக்காவிட்டால்
அவர்களுக்கு முத்தியில்லை ஆனபடியினாலேதான் தேவர்களாய்-சொர்
க்கலோகத்தி லிருந்தவர்களும் ஞானமுள்ளமானிடராகப்பூமியிற்பிற
ந்து அந்தஅருணாசலத்தைத்தியானஞ்செய்து கெடுதலில்லாதமுத்தி
யையடைந்திருப்பார்கள்—என்றவாறு (௪௧)

பொருவிலாச்சுவர்க்கத் தமிர்தமுண்டிருப்போர் போகபூமியை
த்தனிடரப்போ, ருணைமாநகரிற்கிருமியாப்பிறப்ப ததிகமென்று
தாங்கொள்வார்,மருவுமப்பதியிற் பிறப்பதுநூறுமகம்புரிந்தவர்க்
கலாற்கிடையா-திருவருள்படைத்தார்க்கெனிலான்மற்றத்தேவர்யா
வருக்குமரிதே

(இதன்பொருள்.)

ஒப்பில்லாதசொர்க்கலோகத்தில்- நரை-திரை- மூப்பு உண்டாகா
தபடி அமிர்தமுண்டிருப்போர்களாகிய தேவர்களும்போகத்தைய
நுபவித்தற்குரிய அந்தச்சொர்க்கமுதலானலோகங்களை தனித்தனி
யாளுகின்ற தேவேந்திரன் முதலாகியதிக்குப்பாலகர்களும் அருணா
சலஸ்தலத்தில் கிருமியாய்ப் பிறக்கிறது சொர்க்கத்தின்பதத்தை அநு
பவித்தலைப்பார்க்கிலும் அதிகமென்று பிறப்பதற்கு ஆசைப்படுவார்
கள் தெய்வத்தன்மைபொருந்திய அந்தப்பதியில்பிறக்கிறது நூறு
யாகஞ்செய்தவர்களுக்கு அல்லாமற்கிடையாது-சுவாமியினுடையகி
ருபைபெற்றவர்களுக்குக்கிடைக்கும்அவர்களன்றிமற்றத்தேவர்கள்
முதலானமகத்துவம்பொருந்தியயாவர்க்கும் அப்படிப்பிறக்கிறது
கிடைக்கமாட்டாது—என்றவாறு (௪௨)

வெற்றிரும்பிடத்திற் செம்பில்வெண்கலத்தில் வெள்ளியில் வெ
ள்ளியபொன்னிற், குற்றமொன்றில்லாக் குயிற்றிய மணிபோற்குல
வியசிவலிருந்திடுவன், மற்றையதலத்திலருணை யெனுமூருக்கும்

வளம்பதி தனிலெழுந்தருள்வன், பொற்றகட்டிடத்த மணியெனவு
ரைத்தான் புனிதனாகியவருணந்தி *

(இதன்பொருள்.)

சொற்பணிலைபெற்ற இரும்பிலும் செம்பிலும் வெண்கலத்திலு
ம் வெள்ளியிலும் வெள்ளைப்பொன்னிலும் பதிக்கப்பட்டயாதொ
ருதோஷமுமில்லாத மாணிக்கத்தினைப்போல மற்றஸ்தலங்களில்
எங்கும் நிறைந்த பரமசிவன் எழுந்தருளியிருப்பார் பொன்னிறற்
செய்த தகட்டில் பதிக்கப்பட்ட ரத்நத்தினைப்போல் அருணாசல
மென்று சொல்லப்பட்ட வளம்பொருந்தியஸ்தலத்தில் எழுந்தரு
ளியிருப்பாரென்று பரிசுத்தமாகிய நந்திகேசுரர் திருவுளம்பற்றி
னர் ஆனபடியினாலே எல்லாஸ்தலத்திற்கும் இது அதிகமாம்—எ-று

கண்ணிரண்டிலங்குநற்றிருமுகத்தாற் கரியகண்விளங்குமவ்வி
ரண்டின்- பண்ணவிளக்கிலங்குமடலெலா மலைபோற் பரமனால்
விளங்குமவ்வருணை, பலவண்ணமுன்விளங்கு மருணைமா நகரா லமல
மேவருணைமாநகரா, லெண்ணிலாப்பதிகளெவைகளுக்கும்விளங்குமெ
வற்றினுஞ்சிறந்ததென்றிசைத்தான் *

(இதன்பொருள்.)

கௌரீமனோகரனுடையமோ கண்களிரண்டின்றிருமுகம் பிரகா
சிக்கிறது முகத்தினிடத்திலிருக்கிறதினால அந்தக்கண்கள் விளங்கிக்
கொண்டிருக்கும் இந்தஇரண்டினுடைய பிரகாசம் அழகினால் மேல்
தேகமெல்லாம் விளங்கும் இவைபோல் பரமசிவனாலே அருணாசல
ஞ்சிறப்படைந்திருக்கும் அந்த அருணாசலத்தால் சுவாமியும் அதிக
அதிசயையுடையவராய் விளங்குகிறார் அந்தஸ்தலத்தினாலும் அதி
ல் எழுந்தருளியிருக்கிற சுவாமியினாலும் எண்ணிக்கையில்லாத எல்
லாக்ஷேத்திரங்களும் சிறப்பாய்விளங்கும் ஆனபடியினாலே யெல்லா
ஸ்தலங்களிலும் அதுசிறந்ததென்று திருவாய்மலர்ந்தருளினார் எ-று
இதனால் எல்லாஸ்தலங்களும் உடலாகவும் அருணாசலஸ்தலம் முக
மாகவும் அதில்சுவாமிகண்ணாகவும் சொல்லப்பட்டது .. ... (௨௨)

விசலங்கலைமெய் குளிர்நதியின் கொடியின் வேரினீர்சொரிந்திடி
னதுபோற், பூசனையருணை நகரிலேசிறிதும் புரையறநடக்கு மே
யாகிற், காசியே முதலெத்தலமெலாம்பூசை கனம்பெறநடந்ததா
மிலேயே, யீசர்வாழ்ந்ததலமெலாம்பூசையியற்றியே னியற்றிடா
திருந்தேன் *

(இதன்பொருள்.)

ஒருகொடியினதுவேரில் நீர்வார்த்தால் அக்கொடியும் அதிலிருக்
கிறமணம்வீசுகின்ற புஷ்பங்களும் இலைகளும் குளிர்ச்சியையடை
யும் அதுபோல் அருணாசலஸ்தலத்தில் சுவாமிக்கு எவ்வளவாகிலும்
பூசைகுற்றமில்லாமல்நடக்குமானால் காசிமுதலாகிய எல்லா ஸ்தலங்

களிலும்மேன்மையாகப்பூசைநடந்ததாகும் அந்தத்திருவண்ணாமலை
யில் பூசைநடவாவிட்டால் மற்ற ஸ்தலங்களில் நடந்தாலென்ன நட
வாவிட்டாலென்ன ஒருபயனுமில்லை—எ-று. (கூ

நிலத்தொழுமருணாசலத்தனிலிருந்து நெஞ்சினிலைய மாப்பிரி
ந்தோர், தலத்தினை விரும்பி நடந்தவர் முன்செய் தவங்களு மறங்க
ளுந் தவறுங், குலந்தனி லுதித்தோராயினும் புலையர் குணத்தவரா
யினுங் கொடிய, குலத்தவ ருயிரோ டிருக்கினு மறந்தோ ருவமை
சொன்னவர்க்குமீ தொக்கும்... ... ... ..... ௧

(இதன்பொருள்)

உலகத்தார்போற்றுகின்ற அருணாசலஸ்தலத்திலிருந்துஇதைவிட
உயர்ந்தஸ்தலங்கள் இருக்குமென்றுமனதில் சந்தேகங்கொண்டுபிரி
ந்து ஒருக்ஷேத்திரத்தைநாடி நடந்தவர்களுக்கும் அவர்கள் அதற்கு
முன் செய்யப்பட்ட தவங்களும் தருமங்களும் பிரயோசனப்படாது
கள் அவர்கள் நல்லகுலத்திற் பிறந்தவர்களானாலும் நீசராவார்கள், ந
ல்லகுணத்தை யுடையவர்களானாலும் கொடியகுணத்தவராவார்கள்
அவர்கள் உயிரோடிருந்தாலும் இறந்தவர்களாவார்கள் அந்த அரு
ணாசலத்துக்கு வேறொரு ஸ்தலங்களைச்சமானமாகச்சொன்னாலும் இ
ந்தத்தோஷங்களெல்லாம் உண்டாகும்—எ-று. (உ

என்றுதானருணைச் சிறப்பெலா முனிவர்க் கேதுவோ டெடுத்
தியம்பிக், கன்றுமான் மழுவுஞ் சரிகையுந்தரித்த கடவுளை யிருந்
தன னகனைச், சென்றுசென்றிறைஞ்சி நெக்குநெக்குருகிச்சென்னி
மேற் செங்கைவேரோட்டி, ஒன்றுமானந்தப் பெருங்கட லிடைப்பு
க் குணர்ச்சியாய் முனிவனீ துரைப்பான் ..... ..... ... ௨

(இதன்பொருள்.)

இந்தப்பிரகாரம் அருணாசல ஸ்தலத்தினது பெருமையை ஏது
வோடு முனிவர்களுக்கு இனிதாக எடுத்து அருளிச்செய்து, மான்க
ன்று, மழு, உடைவாள், இவைகளைத்தரித்த நந்திகேசுரரானவர்
களிப்புற்றிருந்தார் அந்தநந்திகேசுரரைப் பலவாறு வந்தனஞ்செய்
து நெக்குவிட்டுருகி சிரசின்மேல் சிவந்த கைகளை நெடுநேரங்கூ
ப்பி ஒன்றுபட்டவராய் ஆனந்தசமுத்திரத்தில் மூழ்கித் தன்னைமற
ந்தவராகிப் பின்பு ஞாபகம்வந்து இதனைச்சொல்வார் மார்க்கண்
டேயர்—என்றவாறு. (உ

முதலாவது
திருநகரச்சருக்கம்—முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௩.



சிவமயம்.

# திருமலைச்சருக்கம்.

[கலித்துறை.]

எந்தையே யருணாத் திரியே யடியவர்க் கெளியாய் ........ *
சிந்தையா னதுமகிழ்ந் தனனருணையின் சிறப்பா ........ *
லந்த மாதவ ரிடத்திமேல் சிவனழல் வடிவாய் ........ *
வந்தவா றுடனது மலையாகிய வகையும் ........ *

(இதன்பொருள்)

அருணாசல ஸ்தலத்தினது மகிமையைக்கேள்வியுற்ற மார்க்கண்டேயர்சொல்வார் எம்முடைய ஆண்டவரே அடியேனுக்கு அருள்செய்த நந்திகேசுரசுவாமியே அடியார்க்கெளியவரே நீர் அருளிச்செய்த திருவண்ணாமலையென்னும் ஸ்தலத்தினது மகிமையினால் மனங்களிப்படைந்தேன் அப்படிப்பட்ட ஸ்தலத்தினிடத்திலே பரமசிவனானவர் அக்கினிசொரூபமாய்த் திருவுருக்கொண்டதும் அது பின்பு மலையுருவமானதும் — என்றவாறு. (க)

அம்மலைச்சுடரடிதலை தெரிகலா தயன்மால் ...... *
விம்மலுற்றது மவர்க்கருள்செய்ததும் விளம்பாய் ........ *
கைம்மலைக்கடக் கரியுரி புனைந்திடுங் கயிலை ........ *
செம்மலைத்தொழுஞ் செல்வனே யெனவவன் செப்பும் .... *

(இ-ள்) அந்த அக்கினிமலையினது அடியும் முடியும் அறியக்கூடாமல், பிரமாவும், விஷ்ணுவும், வருத்தப்பட்டதும் பின்பு சுவாமி அவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்ததும் திருவுளம்பற்றவேண்டும் கைபொருந்தியமலைக்கு ஒப்பாய் மதத்தையுடைய யானையினது சர்மத்தைத்தரித்தருளிய கைலாசவாசியாகிய பரமசிவனை வணங்கும்படியான செல்வத்தையுடையவரே யென்றுசொல்ல, அந்த நந்திகேசுரர் சொல்லத்தொடங்கினார் — என்றவாறு. (உ)

பஞ்சபாதக மொருவனப் பதியிலே பண்ணவே *
நெஞ்சிலெணினைத் திடினுநினைந்ததே பலமாய்த் ... *
தஞ்சமாகிய முத்தியா மெனமறை சாற்று ... ... *
மஞ்சொலாலது மொழிந்தவர்க்கென்னபேறிதே... *

(இதன்பொருள்.)

ஒருவன் அந்தஅருணசலஸ்தலத்திலே பஞ்சபாதகங்களைச்செய்யவேண்டுமென்று நினைத்தாலும் அப்படி நினைத்ததே மேற்பட்ட புண்ணியமாகி அதனால் பற்றுக்கோடாகிய முத்தியுண்டாகுமென்று வேதங்கள் முறையிடும் அன்னையுண்டாக்கும் நல்லசொற்களினாலே ஸ்தோத்திரஞ்செய்தவர்களுக்கு என்னபேறு கிடைக்கமாட்டாது—எ-று. (௧)

அணையாதுமக்கன்றியே யெமக்குமுண்டதிகசு.... *
சோகமோகங்கள் தவிர்ப்பவ னொருபரஞ்சுடராய் .... *
மாசறுமறைகள் தந்துமாலயர்க்காகப்.......... *
போகலிங்கமென் றணது மொருவனைப்புகல்வேன்... ... *

(இதன் பொருள்)

அணைபடியினாலே மார்க்கண்டேயரே இந்தமகாத்மியத்தைக் கேட்கிறவுமக்கே அல்லாமல் எனக்கும் அதிகபலனுண்டாகும் துக்கத்தையும் மோகத்தையும் நீக்கிவிடுகிற சிவன் ஒப்பற்ற பெரிய சோதிசொரூபமாய்ப் பிரம்மா, விஷ்ணு, இவர்களுக்காக ஆசாயம் அனாதியளர்ந்தாலும் சர்வத்திர ஞக்கும் போகத்தைக்கொடுக்கா நின்ற லிங்கமென்று சொல்லுமட்டடித் திருவருக்கொண்டதும் எனக்குத் தெரிந்தஅளவில் கொஞ்சம் சொல்லுகிறேன்—எ-று. (௨)

ஒடுக்குநாளினிலயனரி யுருத்திரன் மகேச ... *
னொடுஞ்சதாசிவன் விந்துநாதஞ்சத்தி நெறியே ... *
யடக்கும்பர சிவத்தினிற் பரசிவமனைத்துங்... .... *
கடந்ததத்துவ முடிவிலே நின்றது கருதி..., ... *

(இதன் பொருள்.)

சர்வசம்மாரகாலத்தில் முறைப்படிச் சகலவுயிர்களும்பிரம்மாவினிடத்தில் ஒடுங்கப், பிரம்மா விஷ்ணுவினிடத்தில் ஒடுங்குவார், விஷ்ணு மகேசுரனிடத்தில் ஒடுங்குவார், மகேசுரன் சதாசிவனிடத்தில் ஒடுங்குவார், சதாசிவன் விந்துவினிடத்தில் ஒடுங்குவார், விந்து நாதத்தினிடத்தில் ஒடுங்கும், நாதம் சத்தியினிடத்தில் ஒடுங்கும், சத்தி பரமசிவத்தில் ஒடுங்கும், அந்தப் பரமசிவம் திருவுளங்கொண்டு எல்லாங் கடந்த தத்துவமுடிவிலேநின்றது—எ-று. (௩)

பரசிவத்தினில் வருபராசத்தியாம் [illegible] *
விரவிம்பர தத்துவ முடிவிலே விரிந்த... *

மருவுமைவரு மொடுங்கிய முறையிலே வந்தா .... *
ரரிமகன்படைத் திடுவது நினைந்தன னகத்தில். ... *

(இதன் பொருள்.)

அப்படியெல்லாம் ஒடுங்கினகாலத்தில் தனியாகிநின்றபரமசிவம் உலகம் உண்டாகவேண்டுமென்று திருவுளங்கொண்டஅளவிலே அந்தச்சிவத்தினிடத்திலேதோன்றிய பராசத்தியினிடத்தில் குடிலையென்னுஞ் சத்திதோன்றியது அதில் பெருமைபொருந்திய மற்றத்தத்துவங்கள் முறையேஉண்டானதுகள்பஞ்சகிர்த்தியங்களுக்குரிய பிர்ம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுரன், சதாசிவன், முன்னே ஒடுங்கிய முறைமையே உண்டானார்கள். விஷ்ணுவினுடைய புத்திரனாகிய பிர்ம்மாவானவர் உலகத்தைச் சிருஷ்டிக்கிறதற்கு மனதில் எண்ணினார்—என்றவாறு. (௬)

மரீசியங்கிரன் புலத்தியன் புலகனுங் மறைமேயார் ... *
கிருதுவத்திரி சனபதி யெழுவருங் கினைத்தார் ..... *
ருரியதக்கனும் வலப்பதப் பெருவிரலுதித்தான் .... *
பிருகுமார்பினு மறத்திறை முகத்தினும் பிறந்தார். *

(இதன்பொருள்.)

அப்படிப் பிர்ம்மா நினைத்தவுடனே, மரீசி, அங்கிரர், புலஸ்தியர், புலகர், கிருது, அத்திரி, சனபதி, என்கின்ற எழு ரிஷிகளும் பிறந்தார்கள். தக்கன் வலதுகாற் பெருவிரலிற் பிறந்தான், பிருகு - மார்பினிடத்திற் பிறந்தான், தருமதேவதை முகத்திற் பிறந்தது —என்றவாறு. (௭)

உன்றுமைந்தரின் மரீசிபாற் கசிபனுதித்தான் .. ... *
பன்று தக்கனு மைம்பது பெண்களைப் பயந்தா .... *
னன்ன காசிப னவர்பதின் மூவரை மணந்தான் ... ..... *
முன்னனாகிய வதிதிபா லிமையவர் முளைத்தார். ... ... *

(இதன்பொருள்.)

பிர்ம்மாவினிடத்திற் பிறந்த பிள்ளைகளாகிய எழுவரில் - மரீசி ரிஷியினிடத்தில் காசியபரிஷிபிறந்தார், தக்கனென்பவன் ஐம்பது பெண்களைப் பெற்றான், அந்த ஐம்பது பெண்களில் பதின்மூன்று பெண்களைக் காசிபர் விவாகஞ்செய்தார், மூத்தவளாகிய அதிதியிடத்தில் முப்பத்துமுக்கோடி தேவர்களும்பிறந்தார்கள்—எ-று (௮)

இருமைசேர்திதி யிரணிய விரணியாக்கர்களைத் ... *
தெரியவீன்றனள் சிறப்புறத் திதிபெறு மினையாள் .. *
தருணமைந்தரி லிரணியன் பிரகலாதனை நேர் ..... *
டருமை மைந்தர்களைவரைப் பயந்தனனவருள். ..... *

(இதன் பொருள்.)

அதன்பின்பு அதிதிக்கு இளையவளாகிய சிறப்புப்பொருந்திய

திதியென்பவள் - இரணியன், இரணியாட்சன், என்கிற இரண்டுபே ரையும் பிரசித்தமாகப்பெற்றாள் அந்த இருவரில் இரணியன், பிர கலாதனன் முதல் ஐந்து பிள்ளைகளைப்பெற்றான் — எ-று, ......... (௯)

பிரகலாதனன் றவத்தினால் மூவரைப்பெற்ற . ...... ......... *
னொருனுமைந்தரில் விரோசனன் மாவலியளித்தான்............... *
பரவுமாவலி வாணனென் றொருவனைப்பயந்தா...... ...... ...... *
னரனருச்சனைபுரிந்தவனயன்றொழவிருந்தான் ...... ... ... *

(இ-ள் அந்தப்பிரகலாதனன் தவத்தினாலே மூன்றுபிள்ளைகளைப்பெ ற்றான் அந்த மூவரில், விரோசனனென்பவன்- மாவலியென்பவனை ப்பெற்றான், மாவலி- வாணாசுரனைப்பெற்றான், அந்தவாணாசுரன்ப ரமசிவனைப் பூசித்துப் பிர்மாதொழும் படியாக வாழ்வுபெற்றிருந் தான் — என்றவாறு.... .... ...... ......... ........ (௰)

தனுவளித்தவன் சம்பரன் முதலினோர்பதின்ம.................. *
ரனைபகானவாப் பெற்றனன் சிங்கிகையணங்கும் ... ... ... .... *
பனி பிராகுவேமுகலொரு நால்வரைப்பயந்தாள்............ *
பினையவாங்கொருமூன்றுபேரசுரரைப்பெற்றாள் . . ...... *

(இதன்பொருள்)

மலைகளினுடைய சிறகையறுக்கிறதற்குத் தேவேந்திரனுக்குக் க ண்முழுதுங் கெலுப்பைக்கொடுத்து நீங்கசுலை விட்டவராகிய தநீசி ரிஷிமேயவர் சம்பரன்முதலாகியபத்து அசுரர்களைப் பெற்றா அந்தப்பத்துபேரில் சிங்கிகையென்பவள் இராகுமுதல் நாலுபிள் ளைகளைப்பெற்றாள் அவளுக்கு இளையவள் மூன்றுபேர் அசுரரைப் பெற்றாள் — என்றவாறு ... ...... .... ...(௰௧)

காலகேயர்களறுவரைப்பயந்தனள் காலை ........ . ....... .. .... *
சாலநீள்சிறைக்கருடனுமருணனுந் தவிர .... ... ............... *
நாலுபாலரைப்புதல்வரா வினதையுநயத்தாள் .. ........ *
ஆலநேர்விழிக்கத்துரு பணியெலா மளித்தாள் ... ....... .... *

(இதன்பொருள்)

காலையென்பவள் காலகேயர்கள் ஆறுபேரையும் பெற்றாள் மிக வும் நீண்டிருக்கிற சிறகினையுடைய கருடன் அருணனோடேகூட நாலு பிள்ளைகளை வினதையென்பவள் பெற்றாள் விஷத்தையொத்த கண் களையுடைய கத்துருவென்பவள் பாம்புகளெல்லாவற்றையும்பெற் றாள் — என்றவாறு... ... .... .. .. ...... ... ....... ...(௰௨)

அரிட்டையென்பவளிடத்திலே அரம்பையேமுதலாய்த் ... *
திரட்டிமங்கையர் பிறந்தனரிலங்கிளைமுனித ... ....... ....*
னருட்டவத்தினிலெண் ணிரட்டிகந் தருவரையளித்தா.........*
ளருட்டேவாள்விழிக்கபிலைபாற்பதின்மர்வந்துதித்தார்... ... *

(இதன்பொருள்)

அரிட்டையென்பவளிடத்தில் அரம்பையூர்வசிமுதலானபெண்கள்பிறந்தார்கள் இலங்கிளையென்பவள் முனியினுடைய இருவையிருமேல் பதின்று வகையாகியகந்தருவர்களைப் பெற்றாள் வாள்போன்ற கண்களையுடைய கபிலையினிடத்தில் பத்துப்பிள்ளைகள் பிறந்தார்கள்—என்றவாறு (௰௬)

அங்கிராசனபதிகள்காந்தருவரையளித்தார் ..... ..... *
தங்குமத்திரிகதிர்பதிபுலத்தியன் றனையர் ...... ......*
பொங்கிராக்கதர் வானராகின்னரர்பலக... ... ... ... *
னங்குமைத்தர்கிம்புருடர்பின் விலங்கையுமளித்தான் .. ... *

(இதன்பொருள்)

இங்கிரர் - சனபதி - யென்கிற இருவரும் காந்தருவரைப் பெற்றார்கள் அத்திரியென்பவர் - சூரிய-சந்திர ரிருவரையும் பெற்றார் புலத்தியர் இராட்சசர் வானவர் - கின்னரர் - இவர்களைப் பெற்றார் புலகரிஷியென்பவர் கிம்புருடரையும்மிருகங்களையும் பெற்றார் என்றவாறு. (௰௭)

ச்ருனாகியவசுக்களைச்சனபதிதந்தான் ... ...*
பிருகுவென்பவன்கவியுடன்சவுனரைப்பெற்று... *
னிருவரோரபிசெந்திருவையும் பிருகுபெற்றெடுத்தான் ... *
பருவமைத்தரிற்கவியுமோவெள்ளியைப் பயந்தான் ......*

(இதன்பொருள்)

சனபதியென்பவர் பின்னும்தருணம்பொருந்திய அஷ்டவசுக்களைப்பெற்றார் பிருகுவென்பவர் கவியென்பவனையும் சவுனகரையும்பெற்றார் இந்தஇருவரைப் பெற்றதுமல்லாமல் பின்பு லட்சுமியையும்பெற்றார் அந்தப்பருவம் பொருந்திய பிள்ளைகளில், கவியென்பவர் சுக்கிரனைப்பெற்றார்—எ-று. (௰௮)

டரியதானதன் றேவிமூக் கிரண்டினும் பரிதி ...... *
யுரியவாண்பரியாகியிந்திரியத்தையூற்ற .. .. *
வரிசை பற்றிய பஞ்சுவ ரிருவரும் வந்தார் . ... *
விரிசராசரம்பிறந்தன பலபலவிதமாய் ..... ...*

(இதன்பொருள்.)

சூரியன் மனைவியைச் சேருகிறதற்கு யத்தனப் பட்டபோது அவளதற்குப் பொருந்தாமல பெண்குதிரையாய் யோடினாள் சூரியன் ஆண்குதிரையாய்த்துரத்த அவள் திரும்பிப்பார்த்தாள் அப்போது சூரியன் தனதுபெண் சாதியினிரண்டுமூக்கிலும் இந்திரியத்தை யூற்ற வரிசையாகிய அசுவனி தேவர்களிருவர் பிறந்தார்கள் அதன் பின்பு விரிந்தசராசரமும் அநேகவிதமா யுண்டாயின—என்றவாறு ... ... ..... (௰௯)

[கலிவிருத்தம்.]

கண்டுயில்கொணாரமனுக்கப்பண்கனென்றே ..... *
புண்டரிகவேதியனம்மதத்தரிபுரத்தில் ..... *
தண்டியெதிர்கொண்டுபணைத்தங்கவிசைவண்டார் ..... *
வண்டிரைபமாயவனைவனுளைவழங்கும் ..... *

(இதன் பொருள்)

இப்படிச்சகலமும் உண்டாக்கிய பிர்மதேவர் இந்த வுலகெல்லா ம்தம்முடைய சிருஷ்டியினாலல்லவோ உண்டாயினவென்று அக ங்காரங்கொண்டு அதனால் வைகுண்டத்தில் வலுவிற்போய் எதிர்த்து ப்பகைகொள்ளும்படி சங்கீதம்பாடாநின்ற வண்டுகள்சூழ்ந்ததுளஸி மாலையைதரித்த விஷ்ணுவைப்பார்த்து அவமதித்துச் சிலவார் த்தைகள் சொல்லத்தொடங்கினார்—எ-று (௰௭)

எழுலக மேழுபிலமேழுபுய லோர ..... *
மூழிமுத லேழுகிரி யாழ்வகையியற்றி... ..... *
வாழுயிர் யாவையும் வகுத்திட மனத்தாற் .. ..... *
பாழிகொண் மரீசிமுதன் மைந்தர்கள் படைத்தேன்....... *

(இதன் பொருள்.)

வாராய் விஷ்ணுவே, பதினாலுலகங்களையும் கறுத்த மேகங்களை யும் சத்தசமுத்திரங்களையும் முதன்மையாகிய சத்தகுலபருவதங்க ளையும் உண்டாகும்படி மனத்தினால்படைத்து இப்பொழுது வாழ் கின்ற எல்லாஉயிர்களையும் உண்டாக்கவலிமைபொருந்திய மரீசிமு தல ரிஷிகளைப்பெற்றேன்—எ-று (௰௮)

மைந்தரா மைந்தர்கள் குருக்களுடன் வானோர்.. ........ *
சந்திரன் முதற்பெரியதானவர்க வானோர்..................... *
கந்தருவர் கிம்புருடர் சித்தர்கணநாத ........................ *
ரிந்திரன் முதற்றிசைக ளெட்டினு மிருப்போர்............ *

(இதன் பொருள்.)

வாராய் விஷ்ணுவே; என்னுடைய பிள்ளைகளுடைய பிள்ளைகள்கு ருவாகிய பிரகஸ்பதியுடனே எல்லாத்தேவர்களும் சந்திரசூரியர்களு ம் அசுரர்களும் கந்தருவர் கிம்புருடர் சித்தர் கணநாதர்களும் தேவேந்திரன் முதலாகிய திக்குப்பாலகர் எட்டுபேருமாயிருக்கி றார்கள் இவர்களெல்லாரும் என்னாலல்லவோ உண்டானார்க ளென்று பின்னுஞ்சொல்வார் பிர்மதேவர்—எ-று. (௰௯)

எஞ்சுதலி லாவிறைவ னென்பதனையெண்பேர் ..... *
கஞ்சனெனு மைந்தனை மறந்திடு கரத்தர் ..... *
லஞ்சலில் படைப்பொழிபி லெப்படியுமெய்யாய் *
செஞ்சுவரில்லா தெழுது சித்திரமு முண்டோ ..... *

(இதன் பொருள்.)

குறைவில்லாத சகலத்துக்கும் நானே கர்த்தனென்பதையும், என் பிள்ளைதான் பிர்ம்மாவென்பதையும், மறந்துவிடு நான் கையினாலே உலகத்தை படைக்காவிட்டால் நீயெப்படிக்காப்பாற்றுவாய் அவரி ல்லாமல் எழுதுகிறசித்திரமுமுண்டோவென்றுபின்னுஞ்சொல்வார் பிர்ம்மதேவர்—என்றவாறு. (௨௰)

அளித்திடுகளிப்பினை யகத்தினில் விடாயேல்... ... *
வெளிப்படவொருத்தனை டளித்திடவிதிப்பேன். .. *
குளிர்ச்சியகடற்கிடை குதித்திடதனுள்ளே .... *
யொளித்திடுசேராத்திர ஞானச்சருவு முன்னே. .... ..... *

[இதன்பொருள்.]

வாராய்விஷ்ணுவே, சகலத்தையும் ரட்சிக்கிறேனென்கின்ற மதத்தைவிட்டுவிடு நீவிடாமற்போனால் உன் உத்தியோகத்தைநீக்கிஒருத்தனை உண்டாக்கி ரட்சிகருந்தொழிலுக்கு நியமித்துப்போடுவேன் நம்முடைய புத்திர பௌத்திரர்களாகிய தேவர் கூட்டங்கள்வந்து உன்னைக்கொல்லும்படி வளைத்துக்கொள்ளுகிறதற்கு முன்னேதிருப்பாற் கடலுக்குள்ளேகுதித்து ஒளித்துப்போவென்றுசொன்னார் பிர்ம்மதேவர்—என்றவாறு, (௨௧)

வித்தகமுனிப்பிருகு விட்டமுனியாலே ... ... *
பத்துருவெடுத்தனை பகுத்தறிவிலாயோ .... ..... *
அத்தனையுடற்களு மமைத்தபடியாலென் ... - *
கைத்தலமுமிப்படி கறுத்தபடியாராய். ..... *

(இதன்பொருள்.)

ஞானசொரூபியாகிய பிருகுரிஷியானவரிட்டசாபத்தினாலே பத்துதரம்பூமியில்பிறந்தாய் நீஅதைப்பகுத்தறியவில்லையோ அப்படிப்பிறந்தபோதெல்லாம் அவ்வளவுபெரிய உனதுஉடல்களையெல்லாம் படைத்துப் படைத்து என்கைகள் காய்ப்பேறிக் கறுத்துப்போச்சுதென்று பின்னுஞ்சொல்வார்—என்றவாறு. (௨௨)

உத்திமலரோனென விகழ்ச்சியுரையாதே .. ..... *
மூடந்தவொருதாணிடை முளைத்தனையுனக்குத் ... *
தந்தையெனவோவலது தாயதெனவோசொல் .. .... *
செந்தழல்பிறந்துகினை தீர்ப்பதறியாயோ. ... *

(இதன் பொருள்)

வாராய் விஷ்ணுவே, நம்முடையநாபி கமலத்திலேதானே வந்தானென்று நிந்தனைசொல்லாமுன்னமே நீ ஒருதூணினிடத்திலே பிறந்தாயே அந்தத்தூணை உனக்குத்தகப்பனென்றுசொல்லட்டுமா—தாயென்றுசொல்லட்டுமா— அந்தத்தூண் உனக்குத் தந்தை யானால் உனக்குநீதந்தையாவாய் செந்நிறம்பொருந்திய நெருப்பு மூங்கி

யினிடத்தேபிறந்து மூங்கிலைத்தானே கொளுத்திப் போடுகிறதை அறியாயோ, அப்படி உன்னிடத்திலேநான் பிறந்தாலும் உன்னை அழித்துப்போடுகிறே னென்றார் பிர்ம்மதேவர் — எ-று. (௨௩)

வேதனிவை சொற்றனை கொடும்படை வெதும்பிக் ..... *
காதிடை நுழைந்தனல் புகட்டின வெப்பக் ... ..... *
கோதமொ டெழுந்துபுகை கொண்டதலை கொண்டே .... *
மாதவன் மதித்தனன் மறுத்திவை யுரைப்பான்... *

(இதன்பொருள்.)

பிர்ம்மா இப்படிச்சொன்னவார்த்தைகள் விஷ்ணுவுக்கு இரண்டு காதிலும் வேலாயுதத்தைப் பழுக்கக்காய்ச்சித் துளைக்கவிட்டு உள்ளேசெலுத்திய நெருப்புப்போலத்தகிக்க மிகுந்தகோபங்கொண்டு புகையெழும்பும்படியாகதலைகத்த இவனுக்கு இந்த அகங்காரம்வந்தது எந்தவிதத்தினாலேயென்று ஆலோசித்துச் சிலவார்த்தைகளைச்சொன்னார்விஷ்ணு — எ-று. (௨௪)

வந்தவழிதன்னையு நினைத்திலைமனத்தென் .... *
னுந்திமேல தன்னையென வுன்றுதலையில்லாய் .. ... *
தந்தைசிறுமைந்தர்பிழை தன்னையுரையாரோ .... *
நிந்தவுரைசொல்லினை யிழந்ததுபொறேனே .. .... *

(இதன்பொருள்)

வாராய் பிர்ம்மாவே, நீவந்தவழியையும் நினைத்தாயில்லை என்னுடைய நாபியைத்தாயென்று ஆலோசிக்கவும் இல்லை தந்தைகளாயிருக்கிறவர்கள் பிள்ளைகள்செய்தபிழையை ஒருகுற்றமாக நினையார்களென்று இந்தவார்த்தைசொல்லினையோ, இனிமேல இப்படிப்பொறுக்கமாட்டேனென்று பின்னுஞ்சொல்வார் விஷ்ணு — எ-று (௨௫)

கன்றுமது வுங்கையிட வப்பகதொனு .... *
மென்றனைய ராகவு மிகழ்ந்துயிர் குடித்தேன் .... *
மன்றவொருதீமைசெயுன் மைந்தனெனவுண்டோ .... .... *
வன்றியுடனேயையு மறுத்தெறிகி லாரோ ... .... *

(இதன்பொருள்.)

கோபத்தையுடையமதுவும் யானைபோன்ற கைடவனும் எனக்குப்பிள்ளைகளல்லவா என்னையிகழ்ந்து எதிர்த்தபடியினாலே கொன்றுவிட்டேன் நிலைபெற்ற ஒருதீங்குசெய்தால் மகனென்று பார்க்கக்கூடுமோ, அதுவல்லாமல் தேகத்திலே ஒரு கட்டிகண்டால் அதையறுத்தெறிந்து சொஸ்தப்படுத்திக்கொள்ளாமலிருக்கிறார்களோ மாந்தர்கள் — என்றவாறு, (௨௬)

பித்தனுமெனேதார்தலை பிடுங்கியெறிபோதி... ..... *
லத்தலை நமக்கென வமைக்கவிதி யில்லா ..... *

யெத்தலைவ னென்பதுன்னை யித்தகைமை கொண்டோ ..... *
[illegible]த்தலைவராமுடிகொள்பாரிடம் விதித்தாய் .... .... *

(இதன்பொருள்.)

வாராய் பிர்மாவே பயித்தியக்காரனாகிய சிவன் உன்னுடையதலை
களிலொன்றைப்பிடுங்கி எறிந்தகாலத்தில் அந்தத்தலையைமறுபடியு
ண்டாக்கிக்கொள்ளவகையில்லை, உன்னை எதற்குத்தலைவனென்றுசொ
ல்லுகிறது இந்தத்தலையைக்கொண்டு நாகேறுபடத்தையுடைய ஆதிசே
டன்முடியிலிருக்கிறபூமியைப்படைத்தாய், என்றார்விஷ்ணு — எ-று

மச்சவுரு வங்கொடு மறைத்தொகுதி தந்தேன் ... *
விச்சையுள தானவனை வென்றுயிர் குடித்தே ..... *
யச்சுமரமாமெனினும் வைத்தமரமென்றே ... *
யுச்சமுறுகின்றனை யழிக்கவரிதென்றே ... ..... *

(இதன் பொருள்.)

வாராய் பிர்மாவே சோமுகாசுரன் உன்னிடத்தில் வேதங்களைப்பி
டுங்கிக்கொண்டு போனபோது நான் மற்சாவதாரங்கொண்டு அந்த
அசுரனைக்கொன்று *வேதங்களை வாங்கித்தந்தேன் அதுவல்லாமல்சா
மர்த்தியமுள்ள அநேக அசுரர்களைக்கொன்று தேவர்களோடு உன்
னையுங்காப்பாற்றினேன், எட்டிமரமானாலும் தான்வைத்தமரமாக இ
ருந்தால் வெட்டார்கள் அப்படிப்போல் பிள்ளையான உன்னைக்கொ
ல்லக்கூடாதென்று பயப்படுகிறேனென்றார்விஷ்ணு — எ-று (உஅ)

என்றொருவருக்கொருவ ரெத்தனையுரைத்தார் ..... *
கன்றினர்புயத்தின்மிசை கைத்தலமடித்தார் ... ..... *
நின்றுலகுதித்தனர் நெருக்கினர்நிமிர்ந்தார் ..... *
துன்றியகனற்பொறி சுருக்கெழவிழித்தார் ... ... *

(இதன்பொருள்)

இந்தப்பிரகாரம் ஒருவருக்கொருவர் எத்தனை வார்த்தைகளையோ
சொல்லிக்கொண்டிருந்தார்கள் கோபித்துக்கொண்டு புஜத்தின்மே
ல்கைகளாலே அடித்துக்கொண்டார்கள் நின்றுகுதித்தார்கள் நெருக்
கினார்கள் நிமிர்ந்தார்கள் நெருப்புப்பொறி நெருக்கமாய்விழச்சுறு
க்கெனக்கண்களை விழித்தார்கள் — எ-று. (உகூ)

‡ வெற்புகள்பொடித்தன வெடித்தனகடாகம் ... ... *
பற்பலசுடர்க்கதிர் பனிக்கதிரொளித்த ... *
சர்ப்பமுநெளித்தது தலைச்சுமைபொறுதே .... ..... *
கற்பமுடிவென்றமரர் கண்களையிமைத்தார் ... ... *

(இதன் பொருள்.)

பிர்மதேவரும், மகாவிஷ்ணுவும், சண்டைசெய்கிறபோது மலைக
ளெல்லாம் பொடியாய்ப்போனதுகள், அண்டகடாகம்படீரென்று
வெடித்தது, பலபல கிரகங்களையுடைய சந்திர சூரியர்கள் ஒளித்தா

களை ஆதிசேடன் தலைசுமை பொறுக்கமாட்டாமல் உடல்நெளித்துக்கொண்டான், கற்பகாலம்வந்து உலகம்அழியப்போகிற தென்றுகண்களை யிமைத்துக்கொண்டார்கள்தேவர்கள்—என்றவாறு (௩௰)

உடுக்கணமுகிற்கணமுதிர்ந்தவுலகெல்லாம்..... ..... *
மீடுக்கணில் விழுந்தன வெழுந்தனபோக..... ..... *
மடக்கின பகீரதிமுன் னுநதியெல்லாந் .... ..... *
திடுக்கொடுமுழங்கின திசைக்கரிகளெட்டும்... .. *

(இதன் பொருள்)

நட்சத்திரக்கூட்டங்களும் மேககூட்டங்களும் உதிர்ந்தனுகள் உலகமெல்லாந் துண்டங்களோடு அடக்குக்குலைந்து விழுந்தனவா மெழும்பியதுகள் கங்கைமுதலான நதிகளெல்லாம் தண்ணீரில்லாம லவற்றிப்போனதுகள் அட்டதிக்குமிருக்கிற யானைகள் திடுக்கிட்டுப் பயந்தன—என்றவாறு ... ... (௩௧)

மேலினிதெடுத்தெறிவர் வீழ்வர்கடிதோடிக் .... ... *
கோலியெதிர்குத்துமென நின்றிடுவர் சுத்திச் ... ..... *
சாலமடிதொட்டளவில் சாரிகைதிரிந்தார் .. ... .. *
மாலையுமிருட்டும்பலமாய்வருதன்மான .. .. .... *

(இதன் பொருள்)

ஒருவரை யொருவர் மேலே எடுத்தெறிவார்கள் கீழேவிழுவார்கள் மறுபடியெழுந்து விரைவில் ஓடிவளைத்து எதிராகநின்றுகுத்து என்று சொல்லுவார்கள் அப்படிக் குத்திக்கொண்டு மிகவும்மடியைப் பிடித்துச் சூறைபோல் அநேகவிசை சுழன்று திரிந்தார்கள், அந்திநேரமும் இருளும் வலமிடமாக வருதலையொத் திருக்கும்படி—என்றவாறு .. ... ..... ..... ... (௩௨)

ஊருவனதத்துவனசெல்வனவிண்டேடே.. ..... *
சேருவனநின்றனதிரிந்தனதிரட்டார் ... ... *
தாருவனையிற்றன தழைந்ததிருளெங்கு .... ... ...
மேருவனையுகமெழு வேலையளருக... ... *

(இதன் பொருள்)

அந்த வேளையில் உலகத்தில் ஊர்ந்துபோகின்ற சீவன்களும், தவழ்கின்ற சீவன்களும், நடக்கின்றவைகளும், பறக்குஞ் சீவராசிகள் போல் ஆகாயத்திற்பறந்ததுகள் நிலையாகநின்றவிருட்சம் மலைகள் திரிந்ததுகள் திரளாகநிறைந்த ஐந்துவகையாகிய தேவதருக்கள் பொடிப்பொடியாய்ப்போனதுகள் எவ்விடமும் அந்தகாரந்நிறைந்தது மகாமேரு அசைத்தது சத்தசமுத்திரங்களுஞ் சேறானது கள்—என்றவாறு, ... ..... (௩௩)

அந்தமுடிவெல்லைதனி லஞ்சியிமையோர்தா .....
மிந்திரனையப்பினைச்க ளெப்பிய துளைக்கு... .....

டைசெய்யும்அந்தவேளையில் தேவர்களெல்லாரும்பயப்பட்டுத் தேவேந்திரனிடத்திற் போய்ச்சேர்ந்து தங்களுடைய துக்கத்தைச் சொல்கிறதற்குமுன்னே தேவேந்திரன் தான்பட்ட துன்பங்களெல்லாஞ் சொல்லிப் பின்பு நீங்கள்வந்தகாரியம் ஏதென்றுகேட்கத் தேவர்கள் சொல்லுகிறார்கள்—என்றவாறு. (௯௪)

ஆரணனுநாரணனு மானவிருவோருந் ... ... *
தாரணியிலேமிகு சமர்த்தொழில்விளைத்தார் ... ... *
ஏரணியவேறுகதி யில்லையெவருக்குங் .... .... *
காரணனையேதொழுதல் காரியமிதென்றார் .. ..... *

(இதன்பொருள்)

பிர்மாவும் விஷ்ணுவுமாகிய இருவரும்பூமியில் மிகுந்த யுத்தத்தைச்செய்கிறார்கள் எங்களுக்குப்பிழைக்கத்தகுந்தமார்க்கம் வேறேயில்லை,எல்லாருக்கும் காரணமாயிருக்கிறபரமசிவனைத்தொழுது இந்தச் செய்தியைச்சொல்வதே காரியமென்றுசொன்னார்கள் தேவர்கள்—என்றவாறு. (௯௫)

நாயகனிலைசந்துபினர் நாகவுலகத்தோர் ... *
தூயமலர்போலடி துதித்தரிவைபாகா ..... *
மாயமுடன் மாலயன்வருத்தமதுதீராய்... ..... *
தாயலது மைந்தர்துணை தாரணியிலுண்டோ... ...*

(இதன்பொருள்)

இப்படிச்சொல்லத் தேவேந்திரனும் சம்மதித்துப் பின்பு அவனோடேதேவர்களெல்லாரும்போய்ச் சிவனுடையபரிசுத்தமாகியதாமரைமலர்போன்றபாதத்தைத்தொழுது மங்கைபாகனே மாயஞ்செய்கின்ற விஷ்ணுவும் பிர்மாவும் சண்டைசெய்வதினால் வருந் துக்கத்தைதீர்க்கவேண்டும் பிள்ளைகளுக்குத் தாயே துணையல்லாமல-மற்றொருதுணைபூமியிலுண்டோவென்றுசொன்னார்கள்—எ-று. (௯௬)

உருட்பரிசகட்டைநிக ருற்றுலகின்மீதே ..... *
யிருட்படு பிறப்பினோ டிறப்பினை யுறாதே ...... *
பொருட்பெறவுனக்கடிமை புக்களவிலாவுன் ... *
னருட்கடல்குளித்திட வடைக்கலமதானோம்.... ..*

(இதன் பொருள்.)

உருண்டுகொண்டுபோகாநின்ற வண்டியினுடைய சக்கரம்போல் அஞ்ஞானம்பொருந்திய பிறப்பையு மிறப்பையு மாறிமாறி யடைந்துவருத்தத்தை அநுபவியாமல் மோட்சத்தைப்பெற உனக்கடி

மையாகப்புகுந்து உன்னுடைய அளவில்லாத கிருபைக்கடலில் முளிக்கஅடைக்கலமானோமென்றார்கள்தேவர்கள்— எ-று .... .... (௰௭)

புழுக்குடையுடற்சுமை பொறுக்கமுடியாத................. ... *
விழுக்குடையவிச்சைகெடவிக்கிருபையருள்வானே.. ......... .. *
முழுக்கடலிடைத்தினமுழுக்குறினுமாறா...............
வழுக்கமலமற்றிடவடைக்கலமதானோம் ...... ..............*

(இதன்பொருள்.)

அனேகம்புழுக்கள் குடைந்துகொண்டிராநின்ற உடற்பாரத்தைப் பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானங்கெடப் பிரியத்தினாலேகிருபை செய்கின்ற சுவாமியே பெரிய சமுத்திரத்திலிடத்தில் தினமுழுகினாலும் போகாத மும்மலமாகிய அழுக்கு அற்றுப்போக அடைக்கலமா யும்மைச்சேர்ந்தோமென்றார்கள் தேவர்கள் என்றவாறு . ... . .... . (௰௮)

என்னையினிவேறிலையெமக்கருள்செயென்றே .. *
கண்ணுதலை விண்ணவர்கள் கற்று மொழிபோதி .... *
லண்ணலுமுணர்ந்தனனனைத்துயிரினுள்ளே .. .... *
யெணணெயென நிற்குமவனீதறிகிலாரே ....... .........*

(இதன்பொருள்)

இனிமேல்வேறே ஆலோசனையில்லை எங்களுக்கு கிருபை செய்யுமென்று சிவனைத்தேவர்கள்புகழ்ந்து ஸ்தோத்திரஞ்செய்யும்போதில் சுவாமியும் அவ்விருவருக்கும்வந்த சண்டையின் மூலத்தை யறிந்தார் எல்லா உயிர்களினிடத்தும் எள்ளினிடத்து நெய்போல் நிற்கும் சுவாமி இது அறியமாட்டாரோ அறிவார்——என்றவாறு .... (௰௯)

[அறுசீரடி ஆசிரியவிருத்தம்.]

நடுக்கமுறுமுனிவரொலாமமரரெல்லாம்பயந்தவிரநாகமீது .... *
படுகலைகடுர்திருமாலுப்பங்கயத்திலுறையயனும்பகைமைதீர ... *
வடுக்கியிடும்புவனமெலாமடிக்கழியா திருக்கமனத் தருள்வதாகித் *
தடுக்கரியதழலுருவத் தொருவனாயா யிருவரையுந்தடுப்பதானான் *

(இதன்பொருள்,)

நடுக்கமடைந்த முனிவர்கள் தேவர்களெல்லாரும் பயத்தை நீங்கும்படி சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்ற விஷ்ணுவும் தாமரைப்புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற பிர்மாவும் ஒருவருக்கொருவர் பகையைநீங்கவும் அடுக்கடுக்கா யிருக்கும் அண்டங்களெல்லாம் அடுக்குக்குலையாமலிருக்கவும்கிருபைசெய்வதாய்த்தடுத்தற்கரிய அக்கினிசொரூபத்தோடு கூடிய ஒருமலையாகிய இந்த இருவரையுந் தடுக்கும்படி எழுந்தருளினார்பரமசிவன்——என்றவாறு... ... .... (௨௰)

பாதலத்திற்பணிகளெலாம்விழுதாகவதன்கீழிற்பருவேரோடிப் . *
பூதலத்திற்கிளைத்திமையோருலகெல்லாமலர்ந்துமலர்ப்புண்டரீகன்
மீதலத்துமுகமிண்டத்துக்கடாகவெளிகடந்துபெருவெளிக்குமேலா
மாதலத்துகதிலுமொருகனன்மேருவடுத்ததெனவளர்ந்த மாதோ *

(இதன்பொருள்.)

பாதாளலோகத்தி லிருக்கிற பாம்புகளெல்லாம் அந்தமலைக்குச் சல்லிவேராகும்படி கீழ்ப் பருத்தவேரோடி பூமியிற்பெரிதாய்க் கிளைத்துத் தேவலோகங்களெல்லாந் தாண்டிப் பிரமலோகத்துமு கட்டையுடைத்து அண்டகடாக வெளியைக்கடந்து அதற்கு அப் பாலிருக்கிற பெரியவெளிக்கு மேலாயிருக்கிற இடத்துந்தம் அக் கினி சொரூபமாகிய மகாமேரு அடுத்ததென்று சொல்ல வளர் ந்தது—என்றவாறு, (சக)

முளைக்கு நெடுஞ்சுடரிரவி பரவியுல வலகமுழுதுமோடிக், கி ளைக்குமணியிருளகற்றவேற்றிவைத்தவிளக்கெனமேவ கிளர்க்கையா லே, யளக்கவொலாப் பெரிய வடவையழல் படர்ந்ததென வர்த்த மானத், துளைக்குமெழு கிரிகளெல்லா மதுசொரிந்த சிறுபொறி போற்சிவந்தமாதோ.... ... ... . *

(இதன்பொருள்)

உதயமாகி நெடுந்தூரம்கிரணங்களை வீசுகின்ற சூரியனுடைய தேர்க்கட்டிய குதிரைகள்சஞ்சாரஞ் செய்யக்கூடாத உலகமெல்லா ம் ஒடுக்கியிளைத்த நீலமணிபோலுங் கரியவிருளை யோட்டுகிற தற்கு ஏற்றிவைத்த விளக்குப்போல் பிரகாசிப்பதுமன்றி சமுத்திர மெல் லாம் செல்லுதற்கரியவடவாமுகாக்கினிபரந்ததுபோலச் சிவப்பு நிறத்தைப்பொருந்திச் சத்தகுலபர்வதங்களெல்லாம் அந்தப்பிரகா சத்தினாலே அந்த அக்கினிமலைசொரிந்த அக்கினிப்பொறிகள் போ லச்சிவந்தனவுகள்—என்றவாறு (சஉ)

(கலிநிலைத்துறை.)

வானக்கண்ணை மூலாய துகண்டமலரோனுங் · ........ *
கானகக்கண்ணனுமஞ்சியகன்றார்கனாகாணார் ........ *
ஞானக்கண்ணினர் காணுமதல்லானவைசேரு ...... ... *
மீனக்கண்ணினொருகொரியாளனெம்மானே ........ . *

(இதன்பொருள்)

இப்படி ஆகாச பரியந்தம் அக்கினி சொரூப மானது க ண்டபிரமாவும் வேணுநாதத்தைச் செய்கிற கிருஷ்ணனாகிய வி ஷ்ணுவும் பயப்பட்டு ஒதுங்கி நின்றார்கள் ஞானக்கண்ணை யுடையவ ர்கள் காணுவதல்லால் குற்றம்பொருந்திய ஊனமாகியமுகத்திற் கண்ணுடையவர் காணுகிற தற்கு எளியவரோ நம்முடைய பரமசிவம் —என்றவாறு,

னுலே நின்றதாரிய முடிந்தால்தான்பயன், பூமியையளந்த விஷ்ணுவினிடத்தில் பட்சியாயுருவெடுத்த இந்தப்பிரமா சிவனுடைய முடியை அறிந்தானென்று நீ சொல்லவேண்டும் என்று பின்னும் சொல்வான் பிரமதேவன்—என்றவாறு. (௬௰)

வஞ்சமென்றிகழ்ந்திடேல்வருந்தினோர்க்குயிர்த் ..... *
தஞ்சமாமெனிற் பெரும் பொய்யுஞ் சாற்றலா .... *
மஞ்சிம்ப சொலத்தகா மொழியுமன்றிது ..... *
நெஞ்சமுண் டமைவதோ நண்புவேண்டினோர் ..... *

(இதன்பொருள்)

தாழம்பூவேகேள்; இது வஞ்சனைத்தொழிலென்று தள்ளாதே யாதோவொரு துன்பத்தை யடைந்தவர்க்கு உயிர்க்குச்சேதம் வருமாயின் அதுபிழைத்தற்குப் பெரியதாகிய பொய்யைக்கூடச் சொல்லலாம் பயப்பட்டுச்சொல்லக்கூடாதவார்த்தையுமல்ல, இது சிநேகம் வேண்டினவர்கள் தம்முடையநண்பன் விஷத்தைத்தின்னு என்றாலும் தின்று சிநேகிதன் பேச்சைத்தட்டாமல கீர்த்தி நிலைக்கச்செய்வார்கள்—என்றவாறு (௬௧)

கண்ணுதன் முடியில்வாழ் கைதையேயிறி .. ..... *
தெண்ணுவதொழிதென விசைந்துபோந்தது ... *
விண்ணினு மிருந்துகீழ் விரைந்துவேதியன்... .... *
மண்ணுலகளந்தமான் மருங்குறநண்ணினன் . .... *

(இதன்பொருள்)

பரமசிவனுடைய முடியில்வாழ்கின்றதாழம்பூவே? வேறேயொரு ஆலோசனையுஞ் செய்யவேண்டாம், இதற்குடன்படென்று சொல்லத்தாழம்பூ அதற்கு இசைந்துவந்தது, ஆகாயத்தினின்று சீக்கிரத்தில் பிரமா மண்ணளந்த விஷ்ணுவினிடத்தில் வந்துசேர்ந்தான்—என்றவாறு. (௬௨)

சீதராகேட்டியென் வரவின் செய்கைக் ..... *
காதநூறாயிரங் கணத்திலேகடந் ..... ... *
தாதியான் முடியறிந் தனுகினேனெனா ..... *
வோதினன் கைதையு முள்ளதென்றதே ... ..... *

(இதன்பொருள்)

விஷ்ணுவே என்னுடைய நல்வரவைக்கேள்; ஒருநொடியிலே நூறாயிரங்காதம் பறந்து எல்லாருக்கும் ஆதியாகிய சிவனுடையசிரசைப்பார்த்தேனென்றுசொன்னான், தாழம்பூவும் நிசந்தான் பிரமா பார்த்தானென்று சொல்லியது—என்றவாறு. (௬௩)

[எழுசீரடி ஆசிரியவிருத்தம்.]

அக்கணமழற்கிரி வெடித்ததுகொ லெழுந்தவரவத்தினி லரக்கரிமை
யோ, ருக்கனார் இசைக்கணிறு கக்கினவ க்கணா யுருக்கியதெனக்கு

ருசிநீர், செக்கரொளிமட்கிட முருக்கிதழ் கறுக்குமெய் சிவப்பொளிவெளுத்தவடிவாய், முக்கணனதற்கிடை முனைத்தனன் முகத்திலவன் முப்புர மெரித்த நகையே ..... ... *

(இதன்பொருள்.)

அப்படி பிர்மா சொன்ன அந்தக்ஷணமே அக்கினிமலை படீரென்று வெடித்தது, வெடித்தசத்தத்தில், ராட்சதர்கள், தேவர்கள், திடுக்கிட்டு உயிர்சோர்ந்தார்கள், திக்கில் இருக்கிற யானைகள் சூரியர்களை உருக்கிசசாய்த்தாலெப்படியோ அப்படி ரத்தஜலத்தைத்தக்கினதுகள், செககர்வானத்துப் பிரகாசமும், மழுங்கிப்போகும்படியாகவும், முருக்கம் பூவிதழ் கறுகும்படியாகவும், சிவந்த தமது திருவுருவின் ஒளிவு பொருந்திய நிறமானது, விபூதியினால் வெளுத்த வடிவாயிருக்க அந்தவெடிப்பினின்றும் பரமசிவன் எழுந்தருளினார் முப்புரத்தையெரித்த நகைப்பு அவர்முகத்திலேவந்தது—எ-று.

முண்டகவகந்தையின் மொழிந்த வுரைநன்றென மொழிந்து நகைகொண்டவரேவே, அண்டபகிரண்டமு நடுங்கினவொடுங்கினவடங்கொவிமிசுடரெலாங், கொண்டலு மறைந்தனசிறந்தன விறைந்தனதுறைந்தன நிறைந்தனபுவா, லெண்டிசை திரிந்தனகரிந்தனபொரிந்தன வெரிந்தன விரிந்த தருவே... ... - - *

(இதன் பொருள்.)

அடே பிர்ம்மாவே உன்னுடைய அகங்காரத்தினாலே சொன்னசொல் நன்றாயிருந்ததென்று சொல்லி நகைத்தபோது அண்டபகிரண்டங்களெல்லாம் கிடுகிடென்று நடுங்கி ஒடுங்கிப்போயின, சூரியர் சந்திரருடைய பிரகாசமடங்கிப்போயின, மேகங்கள்மறைந்ததுகள், சிறந்து நிலைபாயிருக்கிறதுகளெல்லாம் இறைந்ததுகள், இறைந்த பொருள்கள் நிறைந்ததுகள், கூட்டமாகிய திக்குகள் அலைந்ததுகள், மரங்களெல்லாம் கரிந்தும், பொரிந்தும், எரிந்தும்போனதுகள்—என்றவாறு. (கூரு)

[கலிவிருத்தம்.]

அழிந்தன னயனென வமரருஞ்சிறுர் ... .... *
குழிந்தது நிலமெனக் கொளையாமலர் ..... *
பொழிந்தனர் நெடியவற் குவகைபூத்தது .... ..... *
கழிந்தது மலரவற் கிடும்பைகங்குலே ..... *

(இதன் பொருள்.)

தேவர்களெல்லாரும், பிர்ம்மா இன்றே அழிந்துபோனானென்று பயப்பட்டார்கள், பூமிபள்ளமாகும்படி கொள்ளைகொள்ளையாகப்புஷ்பமாரிபொழிந்தார்கள், விஷ்ணுவுக்குச் சந்தோஷம்வந்தது பிர்ம்மாவுக்கு முன்னே அகங்காரமென்கிற இருள்நீங்கிப்போயிற்று, எ-று.

[ ள் ]

பாடினன் பரவினன் பரவசத்தின ... ..... *
லாடின னோடின னளவிடா முதல் .... ... .. *
கூடின னெவ்வரங் கொள்ளுகே னெனத் ..... .... *
தேடினன் சிவனையத் தெளிந்தசெங் கண்மால்... ..... *

(இதன் பொருள்)

அப்போது தெளிவையடைந்த விஷ்ணுவானவர், அக்கினிமலையினிடத்திலிருந்து எழுந்தருளிய பரமசிவனைப்பாடினார், வந்தனஞ் செய்தார், பரவசங்கொண்டு ஆனந்தக்கூத்தாடினார், நான்கு திக்கிலும் ஓடினார், யாவராலுமளவிடக்கூடாத இந்தச்சுவாமியைத் தரிசித்துக்கூடினேன், இனி நானென்னவரங்கேட்பேனென்று ஆலோசனை செய்தார்—என்றவாறு. (௬௭)

ஆசையா லுருகுமவ் வரிதனன்புகண் .... .... .... *
டேசனும் பலவர மினிது நல்கினன் .. ... *
வாசமா மலரவ னுனக்கு மண்ணின்மேல் .... .... *
பூசையுங் கோயிலும் போகவென்றனன் ... ... *

(இதன் பொருள்)

இப்படியிருந்தபத்தியினாலே தேகம் உருகாநின்ற விஷ்ணுவினுடைய அடிமைத்திறத்தைப்பார்த்து கேட்டவரங்களெல்லாஞ் சிவன் அருளிச்செய்து, பிரமாவைப்பார்த்து உனக்குச்சப்பூமியிலே [illegible] ம் பூசையுமில்லாமற் போகக்கடவதென்று திருவுளம்பற்றி [illegible] ன்றவாறு. (௬௮)

மாசுறுதயே யிவனொடு கரவுநீயுமா ..... ..... *
செய்ததல தீண்டிலே யென்று தீர்த்தனை... ..... *
னெய்திய முளரிகண் டேங்கி நான்முகன்... ... .. *
மெய்தளா வுறப்பதம் வீழ்ந்து போற்றினன் ... ..... *

(இதன் பொருள்)

வாராய் தாழம்பூவே, இந்தப் பிர்மாவினோடு சேர்ந்து பொய்ச்சாட்சி சொன்னபடியினாலே உன்னை இதுமுதற்கொண்டு தீண்டேனென்று தள்ளினார், அதன்பின்பு சுவாமிக்கு இப்படிப்பட்டகோபம் வந்தது பார்த்து ஏக்கமெய்த்துப் பிர்மாவானவன் தன்னுடைய தேகம் பூமியிலே நன்றாய்ப்பட விழுந்து வந்தனஞ் செய்தான்—என்றவாறு. (௬௯)

[கலிவிருத்தம்]

பொடிமூடிய தழலேர்காபுகலியாண வமலமாஞ் ..... *
செழுமுறுகை யாலேயுழல் சிறியே னொருபொருளோ .. *
வடிவே பெருவெளியே சதுர்மறையே சதுர்மறையின் ... *
முடிவே தனிமுதலேயெனை முனியே லெனை முனியேல் ... *

(இதன் பொருள்.)

நீறுமூடிய நெருப்பை யொத்த சுவாமியே! சண்டாளத் துவமாகிய ஆணவமலமென்கிற செடிமூடிக் கொண்டிருப்பனிலேலே அவிவேகியாய்த் திரியாநின்ற சிறியனொரு பொருளோ உருவமானவரோ- அகண்டவெளி யானவரோ? நான்குவேதமாகிய வரோ! நான்கு வேதத்தினுடைய அர்த்தத்திலிருக்கின்றவரோ? ஒப்பற்ற முதலாகிய வரோ- கோபித்துக் கொள்ளவேண்டாம் கோபித்துக் கொள்ளவேண்டாம்—என்றவாறு . .... ..... .... .. (௭௰)

எந்நீர்களுமொன்றாகிய வெழுவாரியுமறுகி . ... *
வெந்நீரதுவானாலுடன் விளாவப்புனலுண்டோ... ... *
நின்னீர்மையிதென்றாலுலகுயிரெப்படிநிகழும் .... ...*
முந்நீர்விடமுண்டோயெனைமுனியேலெனைமுனியேல் ... *

(இதன் பொருள்.)

எல்லாநதிகளினீரும் விழுந்து ஒன்றாகிய எழுசமுத்திர முங்காய்ந்து வெந்நீராய்ச் சுட்டால் அதையாற்றுகிறதற்கு வேறே சலமுண்டோ உமக்கே இப்படிப் பட்ட கோபம்வந்தால் உலகத்திலிருக்கிற சீவராசிகள் எப்படிபிழைக்கும் முன்னே சமுத்திரத்திலேபிறந்த ஆலகாலவிஷத்தை உண்டமூர்த்தி கோபஞ்செய்யவேண்டாங் கோபஞ்செய்யவேண்டாம்—என்றவாறு . .... .. ௭௧)

பிறையேமுழுமதியேயுறைபெண்ணேபிறவாணே ...*
நறையேயநறுமலரோயெனநாலுவிதமானவை . ..... *
பொறையேதிருவருளேபொழி புயலேயியலிசையே *
முறையேபலமுறையேயெனைமுனியேலெனைமுனியேல் .. *

(இதன் பொருள்)

மூன்றாம் பிறையாகியும் பூரணச்சந்திரனாகியும் பெண்ணாகியும் ஆணாகியும் தேனாகியும் புஷ்பமாகியும் மலைகளாகியும் கிருபா வருஷத்தைப் பொழிகின்றமேகமாகியும் சொல்லாகியும்நாதமாகியும் மற்றும் நானாவிதரூபமாகி இருக்கின்ற மூர்த்தியே உமக்கு முறையோ முறையென்னைக் கோபிக்கவேண்டாம் கோபிக்கவேண்டாம்—என்றவாறு ... ... ... .... (௭௨)

வெம்மைச்சரமலராகியவிலவேள்தனுவன்றே .... .. *
கொம்மைத்தலையதவாறெழுகோபக்களிறன்றே ... ... *
செம்மைககனலன்றேகொலைசெயுமந்தகனன்றே... .. *
மும்மைப்புரமன்றேயொரு பொருளாயெனைமுனியேல் *

(இதன் பொருள்.)

மிகுந்த வெப்பத்தைக்கொடுக்காநின்றபுஷ்பபாணங்களையுடைய, மன்மதன்தேகமல்லவே, தாருகாவனத்து ரிஷிகள்விட்ட எழும்

MAHAMAHOPADHYAYA

ன், கழுத்துகாதுகளில் ருத்திராட்சமாலைகளைத்தரித்து ஆடுகின்ற பாம்புபோலிருக்கிற பட்டாடையுடுத்துகிறதுவிட்டு மாவுரிதரித்து செயத்தைக்கொடுக்கின்ற விபூதியைச்சர்வாங்கமுந்தரித்துநெருப்பில்காய்ந்து பசுபசுவென்று பிரகாசிக்குமேனியிலாருகாற்பெருவிரலை யூன்றிக்கொண்டு இராப்பகலாக, மனதுமேல பரமசிவனைத்தியானமாகநிறுத்தி அரிதாகிய பெரியதவத்தைச் செய்தாள் உலகத்தைப்பெற்ற பார்ப்பதியம்மன் —எ-று... ... ... ... (எசு)

இலைத்தகொடி மருங்குலைத் தெரியிழைப்ப ணிவியதலை மயத்துநல்லன் டிளைத்து வாடிக், களைத்துமனந் துடித்துவிழி புதைத்துவாணி கண்வனிரின் மூழ்கினின்றாள் கமலத்தாளு, மூளைத்துமனந்தளர்ந்தழுது விழுந்தனண்மற்றை யுயிர்க ளெலாங் கரைந்துருகத்துருகாநின்ற, வளைத்தமைத்தனைப்பயந்தாய் வருந்துமாறும் வயிற்றினுள்ள கருப்பமெலாம் வருந்திடாதோ ..... ... ... *

(இதன்பொருள்)

பிசவுக்குசிறிதாகிய கொடிபோன்ற இடையானதுவளைந்து அக்கினி மத்தியிலே இனிமையானதவத்தைச்செய்கிறதைப்பார்த்து ஏழைகளைத்து வாட்டத்தையடைந்து களைத்துமனது துடித்து இரண்டு கண்களையுமூடிக்கொண்டு சரஸ்வதியானவள் கண்ணீராலே உடம்பெல்லாமூழ்கினவள், லட்சுமியானவள் மனதுவருந்திச்சஞ்சலப்பட்டு அழுதுவிழுந்தாள், மற்றச்சிவராசிகளெல்லாம் மனங்கரைந்துருகரைந்து உருகியதுகள், தானினதப்பிரித்துப்பிரித்துச் சொல்வதென்னல்லையுலகத்தாயானவள் வருந்துவாராயின் வயிற்றிலுள்ளகருவாகிய சீவவெல்லாம்வருத்தத்தையடையாதோ—எ-று .. (எ)

முன்பனிபிற்சுருகு படக்கமலம்போல முகந்தோன்றப் பனிக்கயசத்துள் மூழ்கினிருந்தும், பின்பனியி லதிசீதவிடத்தினிருந்தும் பொருமழைக்குள் மீனைன்னப் பேசவிருந்து, மன்பமிடப் பெருமவளுடனாம்போல்வென்ற மரியதவம் புரிந்தனளவ் விடத்துவேதா, வன்பரிதிற் றுயில்வனமான் முதலாந்தேவர்மறைபுகுந்த தவச்சாலையடைந்திருந்தார் .... ... .. .... ..... .... ..... .. *

(இதன்பொருள்)

முன்பனிக்காலத்திலே கருகிப்போகாத தாமரைப் பூப்போல முகமாத்திரந்தெரியக் குளிர்ச்சிபொருந்திய தடாகங்களிலேநின்றும் பின்பனிக்காலத்திலே அதிகசீதளம்பொருந்திய இடத்திலேயிருந்துமழைபெய்கிறபோது அதில்ஒருமீன்போலசஞ்சலப்படாதுநின்றும பரமசிவ னிடப்பாகத்தைப் பெறுகிறவளாகரும் வேண்டியதவத்தைச்செய்தாள் அந்தவிடத்தில் பிரமதேவனும் வலியசர்ப்பத்தில் நித்திரைசெய்கின்ற விஷ்ணுமுதலாகிய தேவர்களும் வேதகோஷம்பொருந்திய தவசாலையைவந்து அடைந்தார்கள்—எ-று, ()

அந்தரியு மாயவனூர் முதலாந்தேவ ரனைவருக்கு முபசார மளித்
துநீங்கள், வந்தவா வியம்புமென மகிடனாலே வருந்தியதுந் தளர்ந்
ததுவும் வகுத்துச்சொன்னார், சுந்தரியுங் குமரியுடன் சுடரும்வாளா
ற் றெறுநிதளத்தின் மகிடனுரத் தொலைப்பா யென்றாள், விந்தையது
புரிவனெனப் பணிந்தாளன்னை விளம்புதல்கண்டகமகிழ்ந்து விடை
கொண்டாரே... ... ... ... ... ... *

(இதன் பொருள்)

பார்ப்பதியானவள் விஷ்ணுமுதலாகிய தேவர்கள் எல்லாருக்கும்
உபசாரஞ்சொல்லி நீங்களிவ்விடத்துக்கு வந்தவகை செல்லுங்களெ
ன்றுகேட்க அவர்கள்மகிடாசுரனாலே தாங்கள் துன்பப்பட்டுத் தள
ர்ச்சியடைந்ததைவகை விவரமாகச்சொன்னார்கள் அதற்குப்பார்ப்ப
தியானவள் துர்க்கையைக்கூப்பிட்டு, நீ-கத்தினாலே யுத்தகளத்திலே
மகிடாசுரனை வல்லமை கெடக் கொன்றுவிடென்று சொன்னாள் அ
தற்குத் துர்க்கை அப்படியேசெய்வேனென்றுபணிந்தாள் தாயாகி
ய பார்ப்பதி இந்தவார்த்தையைச்சொன்ன அளவில் விஷ்ணு முத
லானவர்கள் சந்தோஷித்தையடைந்து வணங்கி விடைபெற்றுக்கொ
ண்டார்கள்—என்றவாறு. (௭௭)

[கலிவிருத்தம்]

கோதமாச்சிரமந் தனிற்கோல்வலா ..... ..... *
தீதிலாத் தவஞ்செய்தது செப்பினேன் .... ... ... *
மோதி மாமுகக் காய்ந்ததும் வெள்விடைச் ..... *
சோதி பாகமடைந்ததுஞ் சொல்லுவேன் ..... ..... *

(இதன்பொருள்)

சத்திதேவியானவள் கௌதமருடைய ஆசிரமத்தில் குறைவில்லா
த தவத்தைச்செய்ததும் சொன்னேன் பிற்பாடு மகிடாசுரனைக்கொ
ன்றதும் ரிஷபவாகனத்தை யுடைய சிவனுடைய இடப்பாகத்தை
யடைந்ததுஞ்சொல்லுவேன்—என்றவாறு. (௭௮)

நான்காவது
திருக்கண் புதைத்த சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

ஆக திருவிருத்தம்—௯௱௯௨.





சிவமயம்.

# பாசம்பெற்றசருக்கம்.



[அறுசீரடி ஆசிரிய விருத்தம்.]

அஞ்சனக் கிரியில்வாழு மசுரன்றன் னார்க்குந்தீர..............
னஞ்சுரிமே னியானை நந்தி நமனுக்கு நமனாய் வந்தோன்....
செஞ்சிகை மயிரைய தீக்குந் திமையா னளகை நாட்டின்
விஞ்சையான வருந்த வுள்ளவெல்லாங் கவர்ந்தவீரன்......

[இதன்பொருள்]

நீலகிரியில் வாசஞ்செய்துகொண்டிருக்கிற அசுரனானவனெல்லாரினும் அதிகபராக்கிரமத்தையுடையவன், விஷ்ணுக்குச் சமானமானவன். அந்த யமனுக்கும் யமனானவன், சிவப்பாகி மேலேயெழுகின்ற மயிரையுடைய நெருப்பைச்சுடத்தகுந்த திறமையையுடையவன், அளகாபுரியில குபேரன் தரித்திரத்தையுடைய அங்கேயிருக்கிற வஸ்துக்களையெல்லாம் கொள்ளையிட்டவன்—என்றவாறு. (௧)

தாமரைக் கண்ணன் றாங்கு மரவினைத் தலைவால் கூட்டி.......
மாபணிச் சயனன் போற்கொள்வன் வன்னி வாகனத்தை வாங்கி ...
மேவெழுந் துஞ்சிகைப் பைந்தர்க் குதவுவன் விமானத்தோடே......
சோமனைப் பிடித்துக் கையாற் பிழிந்தமு தருந்துஞ் சூரன்......

(இதன்பொருள்)

விஷ்ணு நித்திரைசெய்கின்ற ஆதிசேடனைத் தலையையும், வாலையும் ஒருசேரச்சேர்த்துப்பிடித்துக் கவணாக அந்தவிஷ்ணுவைக் கல்லாக்கித் தூரத்தேயெறிந்து விளையாடுவான், அக்கினியைத் தள்ளிவிட்டு அவனேறுகின்ற ஆட்டை நெருப்பைப்போலச் சிவப்புமயிரையுடைய தன்பிள்ளைகளுக்கு இரைகொடுப்பான், சந்திரனை அவன் ஏறுகின்ற விமானத்தோடே கையினாலேபிடித்துப்பிழிந்து அவன் உடம்பிலிருந்தொழுகுகிற தேவாமிர்தத்தைப் பானம்பண்ணுகிறவன்—என்றவாறு. (௨)

(இதன்பொருள்)

அப்படி வேட்டையாக ஆயிரமசுரர்களும் பார்ப்பதிதவஞ்செய்து கொண்டிருக்கிற வனத்தைச்சுற்றிக்கொள்ள அதைக்கண்டுதேவர்கள் பணிகின்ற காவலாக இருந்த அஷ்டவயிரவர்களும் அந்த ஆயிரம் பேர்களையுங் கொன்றார்கள் அவர்கள் இறந்துபோனதும் அம்மன் தவசுபண்ணுகிறதும் பாதத்தைவணங்கித் தூதர்கள் மகிடாசுரனுக்குத்தெரிவித்தார்கள்—என்றவாறு... ... ... • ... (௬)

போற்றியங்கவர்கள்சொல்லப்புகைநகைபிறந்ததங்கி... ...*
தூற்றியவிருகணண்டகோளமுஞ்சுழன்றதங்கே .. ... *
நாற்றிபதிசையின்மேவுறநடுங்கியதிமையோர்கூட்டம்... .... ...*
கூற்றமுங்கரந்ததால காலமுங்குளிர்ந்த தன்றே ... ... ... *

(இதன்பொருள்.)

தூதர்கள்வணங்கித் தெரிவித்த அளவில் புகையுண்டாகும்படி கோபநகையுண்டானது இரண்டுகண்களும் நெருப்புக்களைப் பறக்கவிசியதுகள் அண்டகோளமும் கிறுகிறென்றுசுழன்றது அஷ்டதிக்கிலிருக்கின்ற யானைகளும் தலையைத் தொங்கப் போட்டதுகள் தேவர்கூட்டம் நடுக்கத்தை யடைந்தது யமனும் ஒளித்துக்கொண்டான் ஆலகாலவிஷமுங்குளிர்ச்சியை யடைந்தது—எ-று... (எ)

அப்படிமகிடன் சீறுமளவினி லிருசும்பனென்பான்... ...*
செப்பிடுமுனதுகோபம்பொறுப்பரோசிறியரென்றே... ... *
முப்புடையினதீ யொன்றுமூலைச்சியாழ் வனத்துளாளைக் .. ...*
கைப்படையதனாற் கொலைசெய் வனெனச் சொலிக்கடிது போனான்*

(இதன்பொருள்.)

அந்தப்பிரகாரம் மகிடாசுரன் கோபிக்குமளவில் நிசும்பாசுரனென்கிற படைத்தலைவன் வாருமையாராசனே உம்முடையகோபத்தை அற்பமாகியவர்களா பொறுப்பார்கள் என்று சொல்லித் தென்னிலாநீரொத்த தனத்தையுடைய பார்ப்பதிதவஞ்செய்கின்ற வனத்திலிருப்போளைக் கையிலிருக்கிறவாளால் கொன்றுவருகிறேனென்றுசீக்கிரத்தில்புறப்பட்டுப்போனான்—எ-று... ... ... (அ)

குடதிசைக்கடலைச்சீறிக் குணதிசைக்கடல் சென்றென்ன... *
நெடியதேர்கரிமாசேனை யெழுந்தன நிசும்பனென் போன் ...*
வடகிரிதனக்குங்கும்ப யாமுனிமலைக்கு நேரோ... .. .. ...*
இடையொருகரியமேரு வெழுந்ததா மெனச்சென்றான் • *

(இதன்பொருள்.)

மேற்குச் சமுத்திரத்தைமேற் கோபித்துக் கிழக்குக்கடல் சண்டைசெய்யப் புறப்பட்டதுபோல் பெரியதேர்களும் யானைகளும் குதிரைகளுங் காலாள்களும் புறப்பட்டதுகள் நிசும்பாசுர முனைஉ

ன்மகாமேருவுக்கும் அகஸ்தியரிருக்கின்ற பொதியமாமலைக்கு மத்தியிலே நிறைந்த ஒருபெரியமேகம் எழுந்ததென்றுசொல்லும்படியாகப்போனான்—என்றவாறு. (௯)

[வேறு,அறுசீரடி ஆசிரிய விருத்தம்.]

எழுந்தவனுமரகதநேர் துரகதமாயிரம்பூண்டவிரதமேறி ... *
வழித்தகரி மதக்கடலையெழுந்தது க ளடைகவுமைவனத்திற் சென்றான், கொழுந்துவிடுங்கனலனையார் வரவுகண்டுபல கோடிகுன்றம்விசித்,தனழ்ந்தபடைத்தாக்கணங்கு நோக்கணங்கும்பொருதெதிரோதுடுத்தாரன்றே............................................... *

(இதன் பொருள்.)

இந்தப்பிரகாரம் நிரும்பாசுரன் பச்சைக்குதிரையாயிரம் கட்டிய தேரிலேறிக்கொண்டு அப்பொழுது எழும்பியசிறு அணுக்கள்முன்போகாநின்ற யானைகளின் மதசலம் சமுத்திரமாகத் தேங்கியிருப்பதைவற்றச்செய்ய பார்ப்பதிதவஞ்செய்யும் வனத்திற்குப்போனான் கொழுந்துவிட்டெரியு நெருப்பொத்த அசுரப்படைகள் அநேகமலைகள் விட்டெறிய இவர்கள்வருகிறதுகண்டு அம்மனிடத்திலிருக்கிற தாக்கணங்கு நோக்கணங்கு என்னுமிருவரும்ஆயுதபாணிகளாகப்போய் எதிரோதவித்தார்கள்—என்றவாறு. (௰)

சண்டனுருத்திரன்சோமன் கபாலிநிகர்சங்கரன் கோதண்டன்வீதன்,னெண்டரியசித்திராங் கதனென்னுமெயிரவாக ளிருநால்வோரு, மண்டமுகடுடையநகைத் தானைகளைத் தொலைத்திட்ட வரிகள்போலக், கண்டகனுஞ் சாரதியுந் தேருமன்றிச் சேனையெல்லாங் கணத்திற் சாய்த்தார்... ... ... ... .... .... *

(இதன் பொருள்)

சண்டன், ருத்திரன், சோமன், கபாலி, தனக்குத்தானே ஒத்தசங்கரன், கோதண்டன், வீதன், சித்திராங்கதன், இந்த எட்டுவயிரவர்களும் அண்டகோளமுடைபட யானைகளைக்கொல்லுகின்ற சிங்கங்கள்போலக்கர்ச்சித்து நிரும்பாசுரனும் அவனுடையசாரதியுந்தேருந்தவிர மற்றைச் சேனைகளையெல்லாம் நொடிப்பொழுதிலேகொன்றார்கள்—என்றவாறு. (௰௧)

அட்டவயிரவர்படையா லணங்குகளாற் றனதுபடை யழிதனோக்கி,வட்டநெடுந் தேர்முடுக்கித் தாக்கணங்கின் முகத்திலெண்ணிலிவ்வாளி கோத்தான், விட்டகணை களைவிலங்கித் தேருருட்டுஞ் சாரதியை வீழ்த்திவாளி, தொட்டகாங் களைப்பிடுங்கி யவனுயிரைக் குடித்த தத்தச் சூரமாது... ... ... ... ... *

(இதன் பொருள்)

எட்டு[illegible]ஆயுதங்களினாலும் இரண்டுபெண்களாலும் [illegible] இறந்துபோகின்றதைப் பார்த்து

நிசும்பாசுரன் வட்டமாகிய நெடியதேரைவிட்டுக்கொண்டு தாக்கணங்கென்பவளுடைய முகத்திலேகணக்கில்லாத பாணங்களை விட்டான் அந்தப்பாணங்களை விலக்கித் தேர்நடத்துகிற சாரதியைக் கொன்று அம்புதொடுத்த கைகளை அறுத்துஅவனுடைய தலையையறுத்துக்கொன்றாள் தாக்கணங்கு—என்று... ..... .. ...(௰௨)

ஓடினசெங் குருதிநதி யுடலிழந்து விடுமவுண ருயிர்கள்போல, வாடினவெங் குறைத்தலைக ளனுதினமு மருந்துகின்ற வலகைபோலச், சூடினர்கள் வயிரவருந் தாக்கணங்கு நோக்கணங்குந் தும்பைவாகை, வீடினர்க ளவுணரெனமகிடமுகற் குறைத்தனர்போய்விளைந்துதூதர் ... ..... ..... ..... ..... ,.... *

(இதன்பொருள்)

வயிரவர்களாலும் இந்த இரண்டுபேர்களாலும் தேகமறுபட்டுச் சீக்கிரத்திற்போகும்அசுரருயிர்போய் ரத்தநதியானது ஓடியது கவந்தங்கள் கூத்தாடியதுகள் நித்தியம் மாமிசத்தைத் தின்றுகூத்தாடுகிறபேய்போல் வயிரவர் முதலாகியவர்கள் தும்பை வாகைமாலை சூடிக்கொண்டார்கள் அசுரர்களிறந்துபோனார்களென்று மகிடாசுரனுக்குத் தூதர் சீக்கிரத்திற்போய்ச் சொன்னார்கள்-என்றவாறு . ..... ... .... .. (௰௩)

கேட்டனனின் மகிடமுகன் கயிடவன்றன் முகநோக்கிக்கிளர்ந்தவானோர், காட்டிலுறை சிறுபேயுங் கணங்களுநம் பெரும்படையைக்கடிந்தவென்றால், நாட்டனுதலயனரியு மெனக்கினிமேற்றிறைகொடுக்க நாணுவாரோன், நீட்டிதனைபுரிந்தெழுந்தா னென்றன்னாருயிரங்கரிசூழ்ரதமீதில் .... .. .... ..... ... *

(இதன்பொருள்.)

மகிடாசுரன் இந்தவார்த்தையைக் கேட்ட அளவில் தன்னருகிலிருக்கும் கயிடவன்முகத்தைப் பார்த்துச் சொல்வான் ஒருகாட்டிற் சஞ்சரிக்கின்ற சிறியபேய்களும் கணங்களும் நம்முடைய பெரிய சேனைகளைக் கொன்றதுகளென்றால்,சிவனை, பிரமா, விஷ்ணு, முதலானவர்கள் சொன்னபடி கேட்பார்களென்று அதிசயமாகிய நகைகொண்டு எழுந்திருந்து ஆயிரம்யானைகளைகட்டிய தேரின்மேலேறிக்கொண்டான்—என்று . ... ... .... ... (௰௪)

[அறுசீரடி ஆசிரிய[illegible]ருத்தம்.]

பதினொருகோடியானைப்பலத்தராங்கா நதனிலன்..... *
முதுகரன்குருதியண்டனீசகன்சண்டன்முண்டன் .... *
மதுகயிடவன்றீக்கண்ணன்புகைக்கணன்மாலியென்றந்..... *
அதுகொளாயிரண்டுபேருந் தேர்[redacted]றார்— *

(இதன்பொருள்)

மகிடாசுரன் தேரிலேறினவுடனே பதினொருகோடி யானைப்பலத்தையுடையவராகிய, நீலன், முதுகரன், குருதி, அண்டன், நீசகன், சண்டன், முண்ணடன், மது, கயிடவன், தீக்கண்ணன், புகைக்கண்ணன், மாலியென்று துதிக்கப்பட்ட பன்னிருவரும் தங்கள் தங்கள் ரதங்களை நடத்திக்கொண்டுபோனார்கள் — எ-று (௯கூ)

கரிமுகத்தவர் நிவாதகவசர்கள்காலகேயர் ... ..... .. *
பரிமுகத்தவுணர்மேதிப் பணைமுகத்தவர்கள்பற்றி .... *
எரிமுகத்தவுணர்சீறியெழும்புலிமுகத்துகளவ .. .... *
ரரிமுகத்தவுணர்வெள்ளத்தாயிரஞ்சென்றவன்றே ... *

(இதன்பொருள்)

யானைமுகத்தையுடையவர்கள் நிவாதகவசர்கள் காலகேயர்களுள் குதிரைமுகத்தையுடையவர்கள் எருமைமாட்டுமுகத்தையுடையவர்கள் நெருப்பெரிந்துகொண்டிருக்கிற முகத்தை யுடையவர்கள் புலிமுகத்தையுடையவர்கள்சிங்கமுகத்தையுடையவர்களாகிய அசுரர்கூடிய ஆயிரம்வெள்ளம்நடந்தார்கள் — எ-று ... .. . ... (௯கூ)

பாய்பரியதனிற்பாதிபரிகளிற்கரிகள்பாதி .. ..... *
காய்மரியதனிற்பாதிகடும்பரிக்கொடிந்தேர்செல்லப் *
பேய்கருங்கொடிகளாடப்பிணங்கிவெண்கொடிகளாட . *
வேய்களப்பறைகளார்ப்பக் குறுகினன்விந்தைகானில். *

(இதன்பொருள்)

அப்பாற்ஆயிரம் வெள்ளம் காலாள்புறப்பட்ட வுடனே ஐந்நூறு வெள்ளம் குதிரையும் இருநூற்றைம்பது வெள்ளம் யானையும் நூற்றிருபத்தைந்துவெள்ளம் தேரும்நடக்கப் பேய்களும் காக்கைக்கூட்டமும் விருத்தகப்படுமென்றுகளிக்கத் துவண்டுகொண்டுவெள்ளைக்கொடிகளாடப் புள்ளாங்குழல் பேரிகை முதலானதுகள் முழங்க மகிடாசுரன் அம்மனிருக்கிற காட்டில்வந்துசேர்ந்தான் — எ - று()

அடலவன்வரக்கணடஞ்சியமரர்துமைக்கபயமென்று ... *
படருமுனிவர் கூறவுமையவள்பயங்கடீர்த்து. .... *
விடலுடனருகுநின்றவிந்தையைவிரும்பிநோக்கிக் . *
கடகம்கொண்டடுவாயென்றாள் விடைகொடுபெயர்ந்தாள்கன்னி

(இதன்பொருள்)

வல்லமைபொருந்தியமகி[illegible]சுரன் வரப்பார்த்துப்பயப்பட்டுஓடிவந்துபார்ப்பதிக்கு அபயமென்று முனிவர்கள் முறையிட்டுச்சொல்ல அம்மனானவள் அவர்களுடைய பயங்களைத்தீர்த்து பெருமைபொருந்திய தம்சமீபத்திலநின்ற துர்க்கையைப்பார்த்து உன்னுடைய [illegible] அசுரனைக்கொன்று விடென்றுசொல்ல உத்[illegible] துர்க்கை — என்றவாறு (௯அ)

(இதன்பொருள்)

துர்க்கையானவள் அம்மனே துணையென்றபோது அறுபத்து நான்குகோடியோகினிகள் ஆகாயத்திலார்ப்பரித்தெழுந்து நெருப்புமழையையும் இடிமழையையும் சொரிந்தபடியினாலே மகிடாசுரனுடைய சேனைகளெரிந்துபோனதுகள், அப்பொழுதுசேனைத்தலைவர்கள் கோபித்துச் சண்டைசெய்தார்கள்—என்றவாறு. (௨௨)

[கலிவிருத்தம்]

அருசி கன்றனைச் செறன ளாரணி .. .... ..... .... *
மருவு காந்தனை மாய்த்தனள் வாரணி ... ..... *
காரனை வென்றனள் வேலுடைக் காரணி ... ... *
நரக னுருயி ருண்டன ணாரணி. ... ... ...*

[இ-ள்] அப்படி மகிடாசுரனுடையசேனைத்தலைவர்கள் எதிர்த்தவுடனே அபிராமியென்பவள் அருசிகனென்பவனைக்கொன்றாள், வாரணியென்பவள் காந்தனென்பவனைக் கொன்றாள், சண்முகியென்பவள் காரனென்னும் அசுரனைக்கொன்றாள், நாரணி நாகனென்னும் அசுரனைக்கொன்றாள்—என்றவாறு. (௨௩)

சூலபாணி தொலைத் தனள் பிண்டனைக் ..... *
கோல மாமுகி சண்டனைக் கொன்றன ..... ..... *
ளால ஆணி மதுவை யழித்தன .. ..... ..... .... *
ணீல னுருயி ரிந்திரை நீக்கினாள்... ... ... ... *

(இதன்பொருள்.)

சூலக்கையாளென்பவள் பிண்டனென்பவனையும், வராகிசண்டனென்பவனையும், திலகன்னிமதுவென்னுமசுரனையும், இந்திரை நீலனென்பவனையும், கொன்றார்கள்—எ-று (௨௪)

துந்து மிக்கொடி சோணித னூணனைக் ... ..... ..... ... *
கந்து மிக்கும் படிக்கதைகாட்டினாள் ... ... ..... ... *
நந்து மிக்க நிகர்த்தரு ணாசலை ... ... ..... ... ..... *
வந்துமிழ்கெரிக்கண்ணனைவாட்டினாள் .. .... ..... .. *

(இதன் பொருள்)

துந்துமிக்கொடியையுடையவள்சோணி தநூணனென்பவனைத்தலையறும்படி தண்டாயுதத்தாலடித்தாள், சங்கத்தைக் கையிலேதரித்தஅருணாசலையென்கிறசத்தி அக்கினிக்கண்ணனைக் கொன்றாள்—என்றவாறு. (௨௫)

கயிடவன் புதைக் கண்ண னிருவருஞ் .. ..... *
செயிரின் மாளுறச் சிந்தினள் சுந்தரி... ..... ..... *
தெயிமி மிக்க நிணமிழ் வேலினன்... ... .... *
மயிட வன்முகங் கண்டெதிர் வந்தனன்... ... *

(இதன்பொருள்.)

சுந்தரி யென்கிற சத்தி கயிடவனையும், புகைக் கண்ணனையும், ம த்தத்திலேகொன்றாள், நெய்யைப் பொழிகின்ற நிணங்கள் பொருந் திய வேலாயுதத்தை யேந்திய துர்க்கையாலவள் மகிடாசுரனைக்கண் டு எதிர்த்துவந்தாள்—எ-று                                        (உக)

வெங் கடாமுகன் மேவது மாதர்கள்... ... ... *
தங்களாயுதங்கொண்டு தடுத்தனர் ... ... ... *
சிங்க வூர்தி யவனெதிர் சென்றுகைச் .. ... *
சங்கை யூதின ண் மேரு சலிக்கவே ... ... ... *

(இதன்பொருள்,)

வெப்பம்பொருந்திய எருமைக்கடாமுகத்தையுடையஅசுரன் யுத்தத்துக்கு நேரிட்ட அளவில சத்தமாதர்களும் தங்களாயுதங்களி னாலே அவன் விட்ட ஆயுதங்கள் விலக்கினார்கள் - அங்கேவேயில் சிங் கவாகனத்தி மேலிருந்த துர்க்கையானவள் அவனுக்கெதிரேபோய்த் தன்கையிலிருக்கிற சங்கத்தைமகாமேரு அசையும்படி வாயில்வை த்து ஊதினாள்—என்றவாறு                                        (உஎ)

செருவி லங்கவள் சங்கொலி செய்திட.... ..... ... *
ஒருவ ரின்றி யவுண ருறங்கினர்... ..... ... *
பெருவ ரங்களிற் பெற்ற சரங்களை... ... *
யிருவருஞ்சொரிந் தார்மழை யென்னவே... ... *

[இதன்பொருள்.]

வல்லமைபொருந்திய சிங்கவாகனத்தை யுடைய துர்க்கை சங்கத் தொனிசெய்ய அசுரர்களி லொருவராவது இல்லாமல் மயக்கத்தைய டைந்தார்கள் அருமையாகியவரத்தினாலேபெற்றுக்கொண்டபாணங் களை இரண்டுபேரும் மழைபோலச்சொரிந்தார்கள்—என்றவாறு ()

எத்த வெந்தக்கணையிவ ளேவிலும் ... ... .. *
அந்த வந்தக்கணையா லறுத்தனன்... ..... ... *
வித்தை மீண்டிரு வெம்பிறை வாய்க்கணை ... ... *
சித்தினளவன் சென்னி யழுந்தவே ... ..... *

(இதன்பொருள்)

எத்த எத்த பாணங்களைத் துர்க்கையானவள்விட்டாலும் அது களை அந்தந்தபாணங்களினாலேமகிடாசுரன்அறுத்துத்தள்ளினான்அ தன்பிறகு இரண்டு அர்த்தசந்திர பாணங்களை அவனுடைய சிரசில் அழுந்தும்படியாக விட்டாள் — என்றவாறு..... ...(உகூ)

வெப்புசெய்புனல் வெள்ள முருக்கிய .... ... *
செப்பு போலச் சிதற விபிங்கணை... ..... ... *
ப்புபோல விருக்கிறு மாங்கவன் .... ..... .. *
கொம்பு போல விளங்கின கோடியே... ..... .... *

(இதன்பொருள்)

ரத்தவெள்ளமானது உருக்கின செம்புபோல்சிதறிவிழ விட்ட அர்த்தசந்திரபாணங்கள் அம்பாக இருந்தாலும் அசுரன் தலையிலே முளைத்திருந்த கொம்பிரண்டுபோல் தலையிலேதைத்தழுந்திவளை ந்துதோன்றினவைகள்—என்றவாறு (௫௰)

வெற்றி கொண்டவள் வில்லிறுத்தன ... ..... ...*
ஒற்ற வம்பிற் சிலைநுத லாயிழாள் .... ..... ..... *
கொற்றவம்பின் குலங்கள்விடுத்தவ ..... .. *
னெற்றியிற்கண் ணழலி னிமிர்த்தவே ..... ....*

(இதன்பொருள்)

ஜெயங்கொண்டவளாகிய துர்க்கைகையிலிருந்தவில்லை இரண்டாகமுறித்தாள், அந்தவில்லினாலே அசுரனுடையநெற்றியிலே அடித்தாள், அநேகப்பலம்பொருந்திய அம்புகளைவிட்ட வணங்கிய அந்தமகிடாசுரனெற்றியிலே சுவாமியினுடையகண்ணக்கினிபோல் சுழுக்கென்றுதாக்கியது—என்றவாறு (௫௧)

சாப வெஞ்சிலை போகத் தரிப்பளோ ..... *
கோபம் விஞ்சிக் கொதித்தெழு கூற்றத்திற் ..... .. *
றீபமன்னத் திகிரியொன் றேவியே .. ..... .. *
பாப காரி தலைவிழப் பண்ணினாள் ... ... *

(இதன்பொருள்)

துர்க்கையானவள் வில்லொடிந்ததும்பொறுக்காமல் அதிகோபங்கொண்டு கொதித்தெழும்பாநின்ற யமன்போல் பிரகாசிக்கின்ற ஒரு சக்கிராயுதத்தைவிட்டுப் பாவியாகிய மகிடாசுரனுடைய தலையறும்படிசெய்தாள்—என்றவாறு (௫௨)

கன்னி யாழி யெறியக் கடாமுகன் .... ..... ... *
சின்ன பின்னங்க ளாயுஞ் சிதைந்திலன் ..... *
முன்னை மாதவத் துண்மையின் மும்மதத் .... ... *
துன்னு மால்கரி யாயெதிர் தோன்றினான் ..... ...*

(இதன்பொருள்)

துர்க்கையானவள் சக்கிராயுதத்தைவிட்டெறிய மகிடாசுரன் தேகஞ்சின்னபின்னமாகியுஞ்சாகாதவனாகிப் பூர்வகாலத்துமேல்செய்த தபோபலத்தினாலே மும்மதங்களைப் பொழியாநின்றபெரிய யானையுருவங்கொண்டு எதிராகவந்தெதிர்த்தான—என்றவாறு (௫௩)

யானை யேறுசெலா றங்கவ னுசகியின் . ... *
மூளைவாரி முகர்நதது மொய்ம்பினான் . ..... *
மீளவுங் கதை மொண்டு திர்வீசினான்... ... ...*
கூளி நாயகி கூடவே மேலயினான்... ..... ...*

(இதன்பொருள்.)

அப்படி யானையுருவங் கொண்டெதிர்த்த அளவில் துர்க்கையா றுஇன்ற யாளியானதுபோய் அந்தயானைஉச்சியிலிருக்கின்ற மூளையைக்கையினாலே அறைந்து தோண்டி எடுத்துத்தின்றது அதனாலே யுஞ்சாகாமற் கையினாலேதிரும்பியுந் தண்டாயுதங்கொண்டெதிர்ந்தான் பேய்களுக்கதிகாரியாயிருக்கின்ற துர்க்கை கூர்மை பொருந்திய வேலாயுதத்தைவிட்டாள்—என்றவாறு. (௬௪)

விடர்ந்த தும்பிய வேல்பட வெஞ்சமர்க்... ..... ... *
கிடைந்த தும்பி முகனு மிறந்தன ... ..... *
னடைந்த தும்பிக ளாயிர மாயிரங் .. ... *
குடைந்த தும்பி மரமெனக் குன்றியே... ... *

(இதன்பொருள்.)

விஷத்தைக்கக்கிக் கொண்டிருக்கிற வேலாயுதம் பாய்ந்தவுடனே யுத்தத்தில் அதைச்சயிக்கமாட்டாமல்இறந்துவிட்டான், அநேகம் ஆயிரம்வண்டுகள்குடைய உள்ளேயொன்றுமில்லாமற்றுளையோடுகூடிய அத்திமரம்போல்—என்றவாறு (௬௫)

வீழ்ந்தபின்பரி வேடமதாயெதிர்... ... ... ... *
போந்து வெங்கதை கொண்டு புடைத்தனன் .. ..... *
சேர்ந்த வன்கதை யும்மவன் சென்னியு ... ... *
நார்ந்த கங்கொண்டறுத்தன ளாரணி . ... ..... *

(இதன்பொருள்)

அப்படி விழுந்திறந்து போனவுடனே குதிரைமுக அசுரனானவனெதிரேவந்துதண்டாயுதத்தினாலே அடித்தான்அடித்ததண்டாயுதத்தையும் அந்த அசுரனுடையதலையையும் கத்தியினாலே அறுத்துத்தள்ளினாள் துர்க்கை—என்றவாறு . (௬௬)

அங்க தன்பினழலுரு வாயினன் ... ..... ... *
கங்கை யாயினன்காரிரு ளாயினன் .... .... .. *
பங்கை யாசன னாயினன் பங்கய ... .... .... *
மங்கை நாயக னாயினன் மாயையால்... ... ... *

(இ-ள்)அதின்பின்பு அசுரன் நெருப்பு ரூபங்கொண்டுவந்தான் அதின்பின்பு சலப்பிரளயரூபங்கொண்டும் அந்தகாரமாகியும் தாமரைப் புஷ்பத்திலிருக்கிற பிரமாவாகியும் லட்சுமிபுருஷனாகிய விஷ்ணுவாகியும் எதிர்த்தான் மாயையினாலே—என்றவாறு .. ..... (௬௭)

ஈதுகண்டவ ளென்செய்வன் மாயையால் ... ..... *
வாதைசெய்தீன னென்றுதளர்ந்துமை .... ... *
பாதநெஞ்சினிற் பற்றினள் பற்றிய ... .... .. *
போதுமேலார்மொழி விண்ணிற் புகன்றதே ... *

(இதன்பொருள்)

அப்படிஅசுரன் பலபல ரூபங்கொண்டவுடனே பார்த்தும்ம லையினாலே துன்பப்படுத்துகிறான் என்னவுபாயஞ் செய்தாலுஞ் சாகிறதில்லைஇதற்கென்னசெய்வேனென்று துர்க்கையானவள்பார்ப் பதிதேவியினுடைய இரண்டுபாதத்தையும் மனதினாலே தியானித் தாள் அப்படித் தியானித்தவுடனே ஆகாயத்தில்நின்றும் அசரீரி ஒருவாக்கிடஞ்சொல்லியது—என்றவாறு. ..... ..... .... (கூஅ)

மாயவேடங்களன்றிமகிடமே ... ... ... ...*
யாயபோதிலவன்றலைதள்ளியே ..... ..... ..... *
தூயதாளின்மிதிக்கத்தொலைந்திடும் , ..... *
தீயமாயையெனச்சொலத்தேறினாள் ..... ..... ...*

(இதன்பொருள்.)

அனேகவிதமானமாய வேஷங்களெல்லாமல் சுபாவமான எருமை முகரூபங்கொண்டபோதுஅவன் தலையையறுத்துக் கீழேதள்ளி உ ன்னுடைய பரிசுத்தமாகியகாலினாலே மிதித்தால் தீமைபொருந்தி யமாயை தொலைந்துபோமென்று சொல்லத் துர்க்கையம்மன்தே றினாள்—என்றவாறு. .... .... .... (ஈக)

மட்டின்மாயை வடிவின்மலைந்தபின் ... ..... ..... *
னெட்டிலைதலைச் சூலத்தினீக்கினள் .... ... ..... .... *
துட்டன்மேதிய தாய்ப்படைதொட்டனன் ..... .. *
வெட்டிவீழ்த்தியடியின் மிதித்தனள் ..... ..... *

(இதன்பொருள்.)

அளவில்லாத மாயரூபங்கொண்டுவர நெடுமைபொருந்திய கவ ருடைடசூலத்தினாலே குத்திக்கொன்றாள் பின்புஅந்தத் துஷ்டன் பழைய எருமைக்கடா முகத்தை யுடையவனாகி ஆயுதங்களைப் பிர யோகஞ்செய்த அளவில்அதுகளைவிலக்கி வாளாயுதத்தால்தலையை வெட்டிதள்ளிக் காலினாலே மிதித்துக்கொன்றாள் துர்க்காதேவி —என்றவாறு ..... ... ... ... (சய)

ஒப்பிலாப்பத மூன்றிமிதித்திடில்... ... ..... ... ... *
தப்பின்மாயை தவிர்ப்பது பாரமோ .... ..... .... ... *
வப்பதத்தை நினைக்கினுமாணவஞ்... ..... ..... .... *
செப்புகாமியமாலையுந்தீர்க்குமே... .... ... .... *

(இதன்பொருள்.)

துர்க்கையம்மன் பாதத்தை நினைத்தாலும் அதை நினைத்தவ ருடைய ஆணவ மாயை காமிய மென்கிறமும்மலங் களையும் நீக் கிவிடும் அப்படிப்பட்ட ஒப்பில்லாத பாதம் பரிசமாகும்படி ஊ ன்றி மிதித்தால் பொய்யாகிய மாயையை மாத்திரந் தவிர்ப்பது பெரிதோ—என்றவாறு (சக)

போதவானவர்பூமழைபெய்தனர் ..... ..... ... ... , *
மேதிமாமுகன் மெய்க்கதியுற்றனன் .... ..... ..... ...*
தீதிலாவவன் செங்களத்தன்னிலோர் ..... ..... *
சோதிலிங்கமிருந்ததுதோன்றவே ..... ..... *

(இதன்பொருள்)

தேவர்கள்மிகவும் புஷ்பவருஷம் பொழிந்தார்கள்மகிஷாசுரனும் அம்மன் கையினாலிறந்ததனாலே மெய்ம்மையான மோட்சத்தைச் சேர்ந்தான யாதொருகுற்றமில்லாதஅவனது சிவப்பாகிய கண்டத்திலேஒருபடிகலிங்கமிருந்தது—என்றவாறு (௪௨)

கண்டமட்டிலக் கைக்கொளக் கார்தவ ..... ..... ...*
கண்டமட்டிற்புரந்த கடாமுகன் ..... ... ...*
கண்டமட்டிலிருந்தகடவுளைக் ... ... ..... *
கண்டமட்டிலெடுத்தனள் கன்னியே ..... ..... *

(இதன்பொருள்.)

நவகண்டமட்டும்ஆண்ட மகிடாசுரனுடைய கழுத்தை இலக்காவைத்துத்துர்க்காதேவி அறுக்க அந்தக்கழுத்தி லிருந்தபடிகலிங்கத்தைக்கண்டபோதே கையிலெடுத்தாள்— என்றவாறு. (௪௩)

கொண்டு சென்றுமை கோகன கப்பதங் ... ..... *
கண்டுபோற்றிக்கடவுளையீந்தனள் ..... ..... . *
வண்டுவார்குழல் வாங்கினள்செங்கையை ..... .... *
அண்டர்நாயகன் விட்டில னாசையால்... .... ... *

[இதன்பொருள் ]

அப்படிப்பட்ட படிகலிங்கத்தை யெடுத்துக் கொண்டுபோய் உமாதேவியினது பாதங்களைத்தொழுது நடந்தகாரிய மெல்லாஞ் சொல்லிச் சுவாமியைக்கொடுத்தாள் வண்டுகள்சூழ்ந்திருக்கிற கூந்தலையுடைய பார்ப்பதியுங்கையினாலேவாங்கினாள் தேவர்களுக்கெல்லாந்தாதராகவிருக்கின்ற சுவாமியும்அம்மன்மேல் வைத்திருக்கிற ஆசையினாலேகையைவிடாமற்கெட்டியாகஇருந்தார் என்றவாறு-(௪௪)

தாயுமங்கதுகண்டுமகிழ்ந்திறை ..... ..... ... *
யைய வென்கரம்பற்றியதேதென ... ... ..... *
வாயை யாங்கைபுதைத்துமகபதிக் .... ... *
காயிரங்கண் ணளித்தவன்கூறுவான் .... ..... *

(இதன்பொருள் )

பார்ப்பதியானவள் அந்தஆச்சரியத்தைப்பார்த்துமகிழ்ச்சியடைந்து சுவாமியானவர் என்கையை விடாமலிருந்தது எதனாலேஎன்றுகேட்கத் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்கொடுத்த கௌதமரானவர் வாயைக கையினாலே பொத்திக்கொண்டு அம்மனுக்குச் சொல்லத்தொடங்கினார்—என்றவாறு (௪௫)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

முன்னமகத்தியன்முதலா முனிவர்களைம்பதின்மர்வர முனியாற்
செல்ல,வன்னவன்றன் றவமதிப்பா லவமதிப்பா யிருந்திடவு மவ
னைநோக்கிப், பொன்னனையதவமுனிவர் வெகுண்டிளைப்பாரெமை
யிகழ்ந்தபுன்மையாலே, யுன்னரியகருங்கடவா யினிப்பிறக்கக் கட
வாயினிப்பிறக்கக்கடவாயென் றிளையச்சொன்னார் ..... .. *

(இதன்பொருள்)

முற்காலத்திலே அகஸ்தியர் முதலான ஐம்பதுரிஷிகள்கூடி வர
முனியென்பவருடையஆசிரமத்திற்குப்போனார்கள்அந்தவரமுனி
யானவர் தம்முடைய தபோபலத்தினாலேமரியாதையாக உபசாரஞ்
செய்யாமலிருந்தார் அப்போது அவரைப்பார்த்துப் பொன்போ
லும் அரியதவத்தையுடைய எல்லாமுனிகளுங்கோபித்து எங்களுக்கு
அவமரியாதைசெய்தபடியினாலே யாவராலுங்குறைவுசொல்லப்பட்
ட, கரிய எருமைக்கடாவாகப் பிறப்பாயென்று அவர்கள் வருந்தச்
சபித்தார்கள்—என்றவாறு (௪௬)

அருந்தவரைம்பதின்மருமன் றுரைத்த மொழிக்கொடுமையைக்க
ண்டச்சமாகி, யிருந்தவனுமெழுந்துபணித் தெனதுபிழைபொறு
த்தருள்வீ ரென்றுரைத்தப், பெருந்தவ ரன்புட னுரைப்பார் மகிட
முகத் தவுணனெனப் பிறந்துபின்னர், திருந்தவரனிடம்வேண்டித்
தவம்புரியு முமைகணத்திற் றீர்ப்பாளென்றார் ... ... *

(இதன்பொருள்)

அரியதவத்தினையுடைய ஐம்பதுமுனிவர்களும்அன் றுசொல்லிய
சாபத்தின் குரூரத்தைக்கேட்டுப் பயப்பட்டுப் பெருமைபொருந்
திய தவஞ்செய்தவரமுனியும் எழுந்து வந்தனஞ்செய்து முனிவர்க
ளை தெரியாமல் நான்செய்த பிழை பொறுத்துக்கொள்ளுங்களெ
ன்றார் அதற்குமுனிவர்கள் நீர் எருமைமுகம்பொருந்தியஅசுரனாகி
அரசாளுங்காலத்தில் சுவாமி இடப்பாகத்தைப் பெறும்படி தவஞ்
செய்து கொண்டிருக்கிற அம்மனானவள்உம்முடையசாபத்தைதொ
டிப்பொழுதில் தீர்ப்பாளென்றுசொன்னார்கள்—என்றவாறு (௪௭)

ஆங்கவர்சொற்படியிலவ னசுரர்பெருங்குலத்திலுதித் தரசனாகி,
யோங்கியபேர்மகிடனெனக் கொடுங்கோன்மைபுரிந்தநுமொருநா
ள்வேட்டைக்,கிங்குசெய வனத்திலடைந் தழர்பசியா லிளைத்தோ
டித் திரிந்தானங்கே, நீங்கரியவஞ்சனைசெய் மன்னத னென் றொரு
முனிவ னேர்ப்பட்டானே... .... .... .... *

(இதன் பொருள்.)

அந்தமுனிவர்கள் சொன்னபிரகாரம் வரமுனி அசுரகுலத்திற்பிற
ந்து ராஜாவாகி மகிடாசுரனென்கிறபேராயடைந்து கொடுங்கோல
ரசுசெய்துகொண்டு வருகையில் ஒருநாள் வேட்டையாடும் படியா

கவந்திவ்வந்துமிருந்தபசியினுலே இரையொன்றும் அகப்படாமல் ஓடித் திரிந்துகொண்டிருந்தான் அவ்விடத்தில் நீங்குதற்கரியதவஞ்செய்கின்ற மன்னதரிஷியென்கிறவன் எதிர்ப்பட்டான் (௪௮)

மன்னரிஷியையவனையிவன் கரத்திலிங்கத்துடன்விழுங்கி மகிழ்ந்துபோனான் - பின்னதனு லவன்மிடற்றிற் சிவனுருவமிருந்ததந்தப்பெருமையாலே - புன்னதமாயினன்சிவனு ருருத்தரித்த வுடனுமிறை யுருவமன்றோ - வன்னதனுல் வினையடைந்ததனுவிரும்பிநவதீர்த்த மாடிலென்ருன்... ... ... ... ... *

(இதன்பொருள்)

எதிர்ப்பட்டஅந்தமன்னதனென்கிற ரிஷியைக் கையிலிருக்கும் லிங்கத்தோடேஇந்தமகிடாசுரன் எடுத்துவிழுங்கி விட்டுப்போனுன் பின்பு அவன்கண்டத்திற்சிக்கிக் கொண்டு படிகலிங்கமிருந்தபடியினுலேயிருந்தபெருமையையடைந்தான், அந்தலிங்கமிருந்தகண்டத்தையுடையவனும் சிவசொரூபமன்றோ அவனைக் கொன்றபடியினுலே பாவம் சம்பவித்ததுநீ நவதீர்த்தங்களாடினுல் அந்தப்பாவம்போகுமென்ருர்கௌதமர்—என்றவாறு (௪௯)

அன்புறுமுனி யுரைப்பளவி லொருமொழியந் தரத்திலெழுந்தரிய தீர்த்த, மொன்பதுமிவ்விடத்திலுரு மவைவருமா றியற்றுமெனவுமையும்வித்தை, தன்பதும முகமேநாக்கி புனதுகைவா ளெறிந்துகங்கைதருவா யென்ருள், வன்பணிலமெடுத்தாளுந் தொழுதுகைவாணிலத்தெறிந்துவாங்கும்போதில்... .... ..... *

(இதன் பொருள்)

மிகவும்பத்தியுடைய கௌதமர் இந்தப்பிரகாரஞ்சொன்னவளவில்பாவந்தீர ஆடுதற்கு ஒன்பதுதீர்த்தமும் இவ்விடத்தில் வரும்படிசெய்யென்று ஆகாயத்திலிருந்துஒருவார்த்தை பிறந்ததுஅதைக்கேட்டுப்பார்ப்பதியுந்துர்க்கையினதுமலர்போன்ற முகத்தைப்பார்த்துஉன்னுடைய கையிலிருக்கிற வாளினுலே பூமியைப்பிளந்து கங்கைவரும்படிசெய்யென்றுசொல்ல ஜயசங்கை கையிற்றரித்ததுர்க்கையும்வணங்கி வாளாயுதத்தால் பூமியிலேவீசி யெடுத்தபோது என்றவாறு. (௫௰)

நவநதியும்பிறவுள நன்னதிகளுமச்சோகர்திர் நல்தான ...*

சுவையதிக முதவுபுல்தடங்களுமங் கெழுந்தவந்தச் சுனையினூடேபவமகல வொருமாத முழுகியிருந்தாள்கரத்தைப் பற்றிநீங் காச் *

சிவவடிவுமகன்றதுதன்னுளமகிழ்ந்துகரையில்வந்தாம்டவர்போற்ற

(இதன்பொருள்)

ஒன்பது தீர்த்தங்களும் மற்றுமுள்ளநதிகளும் விடாயாறும்படி உதவிசெய்யும் நல்லருசியைக்கொடுக்கின்ற அநேகந்தடாகங்களும் உண்டானதுகள் அந்தநதிகளில் ஒருமாதம்வரைக்கும் அம்மன் குறி

றநீங்கும்படி ஸ்நானஞ்செய்துகொண்டிருந்தான் - கையைப்பற்றி க்கொண்டு விடாமலிருந்த லிங்கமும்நீங்கியது - அப்போதுதேவர்கள்போற்றும்படி மனதுசந்தோஷித்து அம்மன்கரையில்வந்து சேர்ந்தான்—என்றவாறு... (௫௧)

உருவுருவா மொருசிவனை யதன்கரைமேற் புறத்திருத்தியருச் சித்தாணம், மிருவினையுந் தவிர்ப்பானுக் கெம்பாவந் தீர்த்தானெ ன், றியற்பேரிட்டான், றிருமருவும் பெருஞ்சுனைக்கு மினியகட்கதீ ர்த்தமெனத் திருப்பேரிட்டான், குருமணியை யருணகிரிப் பெரு மானைத் தொழக் கனகக் கோயில்சார்ந்தான்.... ... ... *

(இதன்பொருள்.)

அருவமாகியும், உருவமாகியும், விளங்குகின்ற ஒப்பற்ற சிவனை அந்தநதிக்கரையிலே எழுந்தருளச்செய்து அர்ச்சனைசெய்தான் தம்முடைய நல்வினைதீவினையிரண்டும் நீக்குகின்ற சுவாமிக்கு எம்பாவந் தீர்த்தானென்று பெயரைத்தரித்து அழகுபொருந்தியசுந்தச்சுனைக்குக் கட்கதீர்த்தமென்று பெயரிட்டான், நிறம்பொருந்திய மணியொத்தவரா அருணாசலத்தில் எழுந்தருளிருக்கின்றபரமசிவனை வணங்கும்படியாகப் பொன்மயமாகிய கோயிலுக்குப்போனான்—என்றவாறு (௫௨)

முருகுமல ரயன்றடத்திற் படிந்துவெண்ணீ றணிந்துசெங் கை முடியிற்கூப்பி, யருகுவருங் கோதமன்சொற் படிதொழுதுட் புகுந்துத்தண் ணமுதைக்கண்ணுற், பருகிநில முறவிழுந்து பணிந் தெழுந்து பரவசமாய்ப்பாடியாடி, யுருகியுவந் தழுதயிர்த்து வல ம்புரிந்து தனதுகுறை யுரைத்துப்போற்றி... ... ... *

(இதன் பொருள்.)

வாசனைபொருந்திய தாமரைமலரி லிருக்கிற பிர்ம்மாவி னுடைய தீர்த்தத்தில்முழுகி விபூதிதரித்துச்சிவந்தகைகளைச்சிரசில்வைத்துக் கும்பிட்டுத் தன்னருகேவருகின்ற கௌதமர்சொன்ன பிரகாரம் உள்ளேபோய்க் குளிர்ச்சிபொருந்திய அமிர்தம்போன்ற சுவாமியைக் கண்ணாலேதரிசித்துப் பூமியிலேதேகம்பொருந்தநமஸ்காரஞ்செய்து எழுந்திருந்து பரவசமாகிப்பாடியாடி உருக்கமடைந்துகளித்து ஆனந்தக்கண்ணீர்பெருக்கிப் பெருமூச்செறிந்து வலமாகவந்து தன்னுடையகுறையைச்சொல்லி வணங்கினான்—என்றவாறு ()

கார்த்திகைத்திங் களிற்றிருநாளாகமத்தின் படிநடத்திக் கணத் தன்னுனைத், தோத்திரம்பண்ணுநலு மொருசுடர்மன்மே லெழுந்த தந்தச்சுடரினூடே, யத்தரியபலகோடி யிரவிமென வொருசோதி யெழுந்துமின்னே, வாய்த்தமலை வலமாகநடத்தியென வுரைத்துட னே மறைந்ததன்றே... ... ... ... *

(இதன்பொருள்)

கார்த்திகைமாதத்தில் ஆகமப்பிரகாரம் திருநாள்செய்து நெருப்புக்கண்களையுடைய சிவனைப்பணிந்த அளவில்மலைமேலேஒருபிரகாசமுண்டாகி அதிலே சொல்லுதற்கரிய பலகோடிசூரியப்பிரகாசமாய்ச் சுவாமியெழுந்து பெண்ணே யிந்தமலையை வலமாகநடந்துவாவென்றுசொல்லிமறைந்துவிட்டார்—எ,று (சஎ)

நாரிதனைச் சிலையாக்குமுனிவனுமப் படிவலமா நடத்தியென்றான் *
வாரி யென மறைபுகழக் காரிகையுநடந்தனடன்மலர்க்கைகூட்டிப் *
பேரிகையுங்காளமுஞ்சல்லரியுமல்லரியும்பெரியவானிற் ... *
றாரியமுந் துந்துமியு மத்தளமுங்குடமுழவும் துவைத்தவன்றே

(இதன்பொருள்)

அகலிகை யாகியபெண்ணைக் கல்லாகிய கௌதமரிஷியும்அம்மா அப்படியே வலமாகப்போ வென்று சொல்லச் சமுத்திரம் போல் வேதகோஷ முழங்கவும்,பேரிகை, காளம்,சல்லரி,-மல்லரி, ஆகாயத்தில்-முரசு, துந்துமி,மத்தளம், குடமுழா, முதலான வாத்தியங்களுமுழங்கவும் பார்ப்பதி இரண்டுகையுங் கூட்டிக் கொண்டுநடந்தாள்—எ,று (சஅ)

அரம்பையுருப் பசிமுதலாமகபதிநாட்டரிவையர்க ளாடல்காட்டக், குரும்பையென நெருங்குமுலைவரையரமங்கையர்மலரின்குப்பைகூட்டிக், கரும்புகனிந் தனையமொழிப் புனலரமங்கையரிரட்டிங்கவரிநாட்ட, விருப்புருகதலைகபுரியு மரவமின்னார் மணிவிளக்கமெடுத்துநீட்ட.... ... ..... ..... ,*

(இதன்பொருள்)

இந்தப் பிரகாரம் பார்ப்பதிவலம்வரும்போது,ரம்பை,ஊர்வசி, முதலாகியதெய்வலோகத்துப்பெண்கள்நாட்டியமாடத் தென்னங்குரும்பையொத்த தனத்தையுடைய மலையரமகளிர்அம்மன்நடந்துவரும்போது பாதம்பூமியிலேபட்டு உறுத்தாம லிருக்கப் புஷ்பங்களைக்குப்பையாகக்கொட்டக் கரும்பஞ்சாறுபோலும் வார்த்தையையுடைய நீரரமங்கையர்சாமரமெடுத்துவீச,இருப்புகூடவுருகும்படிநகைசெய்கின்ற நாகலோகத்துப்பெண்கள் ரத்தினதீபங்கையிலெடுத்துக்கொண்டுவர—எ-று (சகூ)

முண்டகமண்டபமியிலும் புலோமிசையுநறுந்தவளமுளரிமானுங் *
கண்டகமும் வழிபாலு மொழித்துவர நிலமகடன் கைகணீட்ட *
அண்டர்குலமடந்தையரு முனிவர்குல வனிதையருமருவிப்பூந்தேன் *
வண்டலிடுஞ்சேறகற்றமலரினறுந் துகள்சொரிந்துவழிகளாக ,*

(இதன்பொருள்)

தாமரைப்புஷ்பமாகியமண்டபத்திலிருக்கிற லட்சுமியும் இந்திராணியும் வெண்தாமரைப் பூவிலிருக்கிறசரஸ்வதியும் போகிறவழி

விருக்கிற முள்ளுகளேயும் கல்லுக்களேயும் தள்ளிக்கொண்டுவர பூமிதேவிகைகளை நீட்டிச் சாக்கிரதையாகத் தாங்கத்,தேவஸ்திரீகளும் முனிவர்களுடையஸ்திரீகளும் புஷ்பத்திலிருக்கிற தேனருவியினலே வழிசேறுக்கிக் கிடந்ததைப் புஷ்பத்தாற் குவ்லேயிருக்கிற பராகப்பொடிகளேக்கொட்டி நல்வழியாகச்செய்ய—என்றவாறு (௩௭)

கன்றின துன் விருசரணம் பொறுத்தருள்வா னெனவங்கைகக்கைகூப்பி, மன்றனலத்திசை யணுகியழற்கிரியை யெதிர்முகமாவணங்கிப்போற்ற, தென்றிசையு நிருதிபெருந் திசையினையுங் கடந்துகுட திசையிற்சென்ருள் - குன்றரிய புகழரனுமழ விடைமீதினிற்காட்சிகொடுத்துப்போனன் *

(இதன்பொருள்)

கங்கையானவள் அம்மாபார்ப்பதி உன்பாத மிரண்டுபூமியிலேபட்டுக்கன்றிப்போய்விட்டது பொறுக்கவேண்டு மென்றுஇரண்டுகையுங்கூப்ப, அழகிய அக்கினிதிசையிலேவந்து அக்கினிமலையையெதிர்முகமாகத்தொழுது தெற்குத்திக்கும்நிருதிமூலேயும்தாண்டி மேற்குத்திக்கிற்போனள் குறைவில்லாதகீர்த்தியையுடைய சுவாமியும் இளமைதங்கிய ரிஷபவாகனத்தில் எழுந்தருளி வந்துதரிசனங்கொடுத்துநடந்தார்—எ-று (௩அ)

நாற்றிசையும் போற்றிசையும் புகழணி யண்ணுமலை யானடுந்தாள்போற்றி- மேற்றிசையுங் காற்றிசையுங் கடந்துவட திசையணுகிவிரும்பியேத்தி- எற்றிசையுமிறைதிசையு மகிழ்ந் தருணை திசையடைந்தாளிமையவெற்பிற், சேற்றிகையுமணவழலை வலம்புரிந்த செயல்போலச்செறிந்ததன்றே ... ... ... ..... ... *

(இதன்பொருள்)

நாலுதிக்கும் வணங்குகின்ற- கீர்த்தியையுடைய அருணசலேசுரருடைய நடனத்தைச்செய்கின்ற பாதத்தை வணங்கி மேற்குத்திக்கும்வாயுதிக்குந்தாண்டிவடதிசையில் மறுபடியுந்தொழுது ஏருதிலேறுகின்ற ஈசானனுடையதிக்கைக் கடந்துகிழக்குத் திசைக்குவந்தாள் அப்படிவந்தது இமவத்பருவதத்தில்சுவாமி கலியாணஞ்செய்தபோது ஓமாக்கினியைவலம்வந்ததுபோலிருந்தது—எ-று .... (௩௯)

[கலிவிருத்தம்]

பானுகம்பர் கைச்சங்கொலிநெடியமால்பணிதுல்... ...*
தாலகம்பலே நாரதாவீணை யினரவம் .. ..... ... *
வானதுந்துபி கம்பலே திசையெலாமறைத்த .... ..... *
மீதணிமைந்திடு மலர்மழையிமையவர்சிதற... ... *

(இதன்பொருள்)

பானு[illegible]ன்னுடைய ஆயிரங்கைகளிலுஞ் சங்கத்தை[illegible] விஷ்ணுவானவர் தமதுசங்கத்தை

வாயில்வைத்து ஊதுகிறசத்தமும்- நாரதர்வீணை வாசிக்கிறசத்தமும்- ஆகாயதுந்துமியினுடைய சத்தமும்- திக்குகளெல்லாஞ் செவிடுபடச் செய்ததுகள் தேனிறைந்த புஷ்பவருஷங்களைத்தேவர்கள் சொரிய—என்றவாறு. (௬௰)

கற்றை வார்சடையிளம்பிறை நெடுநிலாக் கமழப்... ... *
புற்றராமணி யிளவெயில்விரிதரிடப்புவியைப்.. ... *
பெற்றமாதினுக் கொருபுறமளித்திடப்பிடித்த ... ...*
வெற்று நூலெனப் புரிமுநூன் மார்பகத்திலங்க... ... *

(இதன்பொருள்)

கற்றையாகிய நீண்டசடையில் தரிக்கப்பட்ட இளமையாகியபிறையினது நெடுங்கிரணம்பொருந்தியசந்திரிகைபிரகாசிக்கவும் பூரணமாகிய புற்றிலிருக்கின்ற சர்ப்பத்தின் தலையிலிருக்கிற மணிகாந்தியை விரிக்கவும், உலகமாதாவாகிய பார்ப்பதிக்குப்பாதிசரீரந்தைக்கொடுக்கிறதற்காக மத்தியாகப்பிடித்த எற்றுநூல்போல் புரியாகியபூணூலானதுமார்பிற்பிரகாசிக்கவும்—என்றவாறு (௬௧)

பிறப்பிலாமுதன்மறையெலாமளவிடாப்பெரியோ .. *
னிறப்பிலாவிறை விடையின்மேலினிதெழுந்தருள... *
வறத்திருவடியடி பணிந்திறைஞ்சினளனைத்துந் ... *
துறக்குமண்ணலுமவளுடனிவையிவைசொல்லும்... *

(இதன்பொருள்)

பிறப்பில்லாத மூர்த்தி அனேகவேதங்களாலும் அறியப்படாதர் இறப்பில்லாதபரமசிவன் ரிஷபவாகனத்தி லெழுந்தருளத்தர்மம்வளர்க்கிற பார்ப்பதி அந்தச் சுவாமிபாதத்தைத் தொழுதுவணங்கினாள் எல்லாவற்றையும் நீங்கிய கடவுளானவர் அந்த அம்மனோடு சொல்வார்—என்றவாறு (௬௨)

பெண்ணுமாணுமாயுலகுயிர்ப்பொருளெலாம்பிரித்தோ... *
மண்ணிதாகிய பீடமுமிலிங்கமுமானோ... ... ...*
மெண்ணுநீயெனநாமெனவிரண்டிலேமரமு... ... *
முண்ணிலாவியவயிரமு நிகர்த்துடனுறைவோம்... ...*

(இதன்பொருள்)

வாரா யுமையே நீயும் நாமும் பெண்ணு மாணுமாகி உலகஇல் அனேகம் ஜீவராசிகளை வேறுவேறு உண்டாக்கினோம் சமீபமாய் ஆவிடையாளும் லிங்கமுமானோம் நீயென்று நாமென்றும்பேதமில்லை மரமும்அதற்குள்ளே யிருக்கிறவயிரமும்போல் ஒன்றாய்ச்சேர்ந்திருப்போம்—என்றவாறு (௬௩)

அங்கம்யாவுதம்பொருட்டு விட்டிழையவெற்பண்டீந்த ... *
யிங்குநாமுனக்கொருபுற மளிப்ப[redacted] *
[redacted]

மங்கையேநம திடப்புறத்துறைகவெனமகிழ்வுத் .... *
தங்கையாலணைத்தருளினனுருகியொன்றுனர் ... ..*

(இதன்பொருள்.)

தேகத்தைவிட்டு நம்பொருட்டாக இமவற்பர்வதத்திலே வந்து பிறந்தாய் இவ்விடத்தில்நாம் உனக்கு ஒருபாகங்கொடுப்பதுசபாவமே பெண்ணே நம்முடைய இடப்பாகத்திற்சேர்ந்திருவென்றுசந்தோஷித்தையடைந்து கையினாலே அணைத்துக் கொண்டார் இரண்டுதேகமும் உருகி ஒருதேகமானார்கள் அம்மனும் சுவாமியும் —என்றவாறு (௬௪)

அமைத்தசெஞ்சடையொருபுறமொருபுறமளகந்... ..... *
தொடுத்தகோனறையோர் புறமொருபுறநறுந்தொடையல் *
வடித்தசூலமோர் புறமொரு புறமலர்க்குவளை... ... *
இடத்திலார்கழ லொருபுறமொருபுறஞ்சிலம்பு .. .. .. *

(இதன்பொருள்)

அப்படியிருவரும் உருகிச் சுவாமியினுடையபாதியும், அம்மனுடையபாதியும், ஒருதேகமானபோது ? ஒருபக்கத்திற்சிவந்தசடையும், ஒருபக்கம் கூந்தலும், ஒருபக்கம் கொன்றைமாலையும், ஒருபக்கம் புஷ்பமாலையும், ஒருபக்கம் சூலமும், ஒருபக்கம் நீலோற்பலபுஷ்படமும், ஒருபக்கம் வீரகண்டாமணியும், ஒருபக்கம் சிலம்பும், தோல் நிபதுகள்—என்றவாறு. (௬௫)

பசலைவண்ணமுற்றொருபுறமொருபுறம்பவளங்... ... *
கச்சுலாமுலையொருபுறமொருபுறங்கவின்மா ... -*
ரச்சநீக்கியவரதமொன்றபயமொன்றங்கை ... ...*
யிச்சையாமிவருறுதல்கண்டிறைஞ்சினரிமையோர் ...*

(இதன்பொருள்)

ஒருபுறம் பச்சைநிறமும், ஒருபுறம்பவளநிறமும், ஒருபுறம்ரவிக்கையணிந்தஸ்தனமும், ஒருபுறம்அழகுபொருந்தியமார்பும், ஒருபுறம், அபயமும், ஒருபுறம்வரதமுமாகியஆசையோடு இருவரும்பொருந்துதலைப்பார்த்துத் தேவரும்வணங்கினர்கள்—என்றவாறு (௬௬)

இந்தமாக்கதைபடித்தவர் செவிகளிற்கேட்டோர்... ...*
சந்தருசலமுனியினிற் றமிழ்க்கடல்கடப்பார் ... ...*
மைந்தரோமுதற்கிளையுடனுலகினில்வாழ்வார்... ...-*
பந்தபாசமற் றழிவிலாப்பரகதிபெறுவார் .... .... .. *

(இதன்பொருள்)

இந்தக்கதையைப்படித்தவர்களும், காதினாலேகேட்டவர்களும், சந்தனவிட்சங்கள் சூழ்ந்தபொதியமாமலையிலிருக்கின்ற அகத்தியர்போ[illegible]ர்கள் சந்தானபாக்கியத்தோடும், சுற்ற[illegible] வாழ்வார்கள் தங்களைப் பந்தமாகச்

ளுந்நது கொண்டிருக்கிற தீவினையைத் தள்ளி மோட்சம்பெறுவார்கள்—என்றவாறு, (௬௭)

முனிவனேயெனைப்பயந்தவனுரைத்ததிம்முறையென்... *
நினையமாமுனிக்குரைத்தலு மவனெழுந்திறைஞ்சிக்... *
கனகவச்சிராங்கதனுயர் கதிபெறுங்கதையை... *
வினவினன்முனி வினவலு மகிழ்ந்திலைவிளம்பும்... *

(இதன்பொருள்)

நந்திகேசுரர் மார்க்கண்டேயரைப் பார்த்து என்னைப்பெற்ற பரமசிவன் சொன்ன சரித்திரத்தின்முறை இதுவென்றுஅவருக்குச் சொல்ல அந்த மார்க்கண்டேய ரிஷி எழுந்து தெண்டஞ்செய்து பின்பு சுவாமி வச்சிராங்கத பாண்டியன் உயர்வாகிய மோட்சம் அடைந்த கதையைச் சொல்லுங்களென்று கேட்க நந்திகேசுரர்சந்தோஷித்தையடைந்துசொல்லத்தொடங்கினார்—என்றவாறு. (௬௮)



ஐந்தாவது

பாகம்பெற்றசருக்கம்

முற்றுப்பெற்றது.



ஆ திருவிருத்தம்—௬௱.



சிவமயம்.

# வச்சிராங்கதபாண்டியன்

## சருக்கம்.



[கலிவிருத்தம்.]

தோடுகமழ்சந்தன வனத்திடைதுளைந்தே... ... *
நீடுதமிழின்சுவை யளைந்துநெடுநாளா... ... ... *
யாடுமயிலன்னவர்க ளன்னநடைபோலே... ... *
வாடைமிசைதென்றல்புகும்வையைவளநாடு... ... ... *

[இதன்பொருள்.]

புஷ்பவிதழ்மணக்கும் சந்தனவனத்தின் மத்தியிலே சஞ்சரித்து நீட்சியாகிய தமிழினது மாதுரியத்தை அளைந்து நெடுநாளாக ஆடாநின்ற மயில்போன்ற பெண்களுடையநடைபோல வாடைக்காற்றில் சம்பந்தமாக தென்றற்காற்று வாராநின்ற வையையாறுபொருந்திய பாண்டிநாடு— என்றவாறு. (க)

வெவ்விழியினாரிடையை மின்னென மருண்டே... ...*
செவ்விபெறுகேதகைசெறிந்தலருந்தாம்... ... *
நவ்வினையாரளக நள்ளிருளதென்றே. ..... ..... *
மவ்வலருகேயலரும் வையைவளநாடு... ..... ... *

(இதன்பொருள்,)

வெப்[illegible]தைச்செய்யுங்கண்களையுடைய பெண்களிடையைப்பார்த்து மின்னலென்று மயங்கி அழகுபொருந்திய தாழைகள் புஷ்பிக்கும்தாம் மான்போன்றமாதர்கள் கூந்தலைப்பார்த்து இருளென்று நண்ணது முல்லைச்செடிகள் கரையிலே புஷ்பிக்கும் வையைவளம்பொருந்திய பாண்டிநாடு— என்றவாறு. (உ)

அறுதவளநாடர்பெரு மானரசர்கோமா... ..... ...*
னிந்திரன்முடிக்கிடை யெறிந்தவளைவீர ..... ..... *
னிந்தையறுதென்கயிலை நெற்றிவிழிபோலே ... *
முத்துமணிசக்கரிமுகத்தெழுதிவைத்தோய்... : *

(இதன்பொருள்.)

அத்தன்மையாகிய பாண்டிநாட்டாருக்கு ராசன் அரசர்க்கரசனானவன் தேவேந்திரன் முடிசிதறும்படியாகவளையென்னும்ஆயுதத்தைப்பிரயோகித்தவன், குற்றமற்றதென்கைலாயத்துக்குநேற்றிக்கண்போல அஷ்ட-திக்கிலு மிருக்கிறயானைகள் முகத்திலே, தன்னுடைய மீனக்கொடியையெழுதிவைத்தவன்—என்றவாறு. (௫)

[கலிவிருத்தம்]

ஆகமாதி மதனி னழகினு ..... ..... ..... ..... *
னாகமாதி தெளிந்த வறிவினன் ..... ..... ..... *
பாகநாரியர். பத்தியினன்மொழிப் ..... ..... *
பாகநாரியர் பற்றியதோளினன் ..... ..... *

(இதன்பொருள்.)

தேகத்தினதியந்தமாக மன்மதன்போ லழகுள்ளவன், ஆகமமுழுவதும் தெரிந்தவிவேகத்தையுடையவன்பாகத்திலேபார்ப்பதியையுடைய சிவன்மேல்பக்தியுடையவன்- பாகுபோல்மதுரமாகிய சொற்களையுடைய ஸ்திரிகள் விரும்பாநின்ற தோளையுடையவன்—என்றவாறு. ..... (௬)

வானகத்திலு மண்ணிலுமெண்ணிம .... ..... *
வானகத்திலும்வைத்தபுகழினன் .. ..... ..... .... *
கான கத்தொளி யார்சடைக்கண்ணிதன் ..... ... *
கானகத்தொளியாமனக்காப்பவன் ..... ..... .. *

(இதன்பொருள்)

தெய்வலோகத்திலும் பூமியிலும்எண்ணம்பொருந்திய இமவற்பர்வதத்தினிடத்திலும் தன்கீர்த்தியை நாட்டினவன், சுவாமிதரிகின்றசடைக்காட்டினிடத்தில் பிரகாசிக்கின்ற ஆத்திமாலையினதுவாசனையைத்தன்மனதிலே நினைத்துக்கொண்டு பூமியைக்காக்கின்றவன்—என்றவாறு ..... ..... ..... .. (௭)

தங்கணாயகனைத் தலைசூடிய ..... ..... ..... *
வெங்க ணாதராடித்தலை யேத்தினன் ..... ... *
பொங்கு நீன்றி யறிந்தது போற்றுவா .. .. *
ரிங் கிவற்கிணை யாவரு மில்லையே .... .... .. *

(இதன்பொருள்)

தங்கள்குலத்துக்குத் தலைவனாகிய சந்திரனைச்சிரசிற்றரித்தஎங்கள் நாதராது பாதங்களைத் தலையின்மேல வணங்கினவன்மிகுந்தநன்றியையறிந்து அதைப் பாதுகாக்கின்றவர்களில் இவனுக்குச்சமானமாயொருவருமில்லை—என்றவாறு ..... ..... .... (௮)

பத்து வார்திசை மீதும் படர்புகழ் ..... ...*
வித்து வாரியின்றக்கின்ற மேன்மையபோ ..... .. *

னத்து வாரியில் வாரினர் நல்கிய ... ... *
மூத்துவாரி யிறைத்திடு மூன்றிலான் ... ... *

(இதன்பொருள்)

நீண்டபத்துத்திக்கிலும்பரவக் கீர்த்தியாகிய விளையவாரி யிறைக்கின்ற தன்மைபோல் சங்கங்கள்தவழாநின்ற சமூத்திரத்தில் குளித்து வாரிவந்தவர்கள் கொடுத்தமூத்துக்கள் இறைந்து கிடக்கா நின்ற மூற்றத்தையுடையவன்—என்றவாறு ... ... (எ)

ஆடலர்ந்த வரசன் புகழ்க் கடற் ... ... *
கோடுகின்ற கலங்கதிரோட்டுதேர் ... ... *
கூடுசெக்கர் பவளக்கொடிகளோ ... ... ... *
நீடுதிக்கினர் நீரின்மனிதரோ ... ... ... *

(இதன்பொருள்)

வெற்றிபொருந்தியஅரசனது கீர்த்தியாகியசமூத்திரத்திலோ கின்றகப்பல்சூரியனேடுகிறதேர் -அக்கடலிற்படர்ந்தபவளக்கொ டிகளோ செக்கர்வானம் அந்தக்கப்பலிலிருக்கிறவர்கள் எட்டுத்திக்கி லுமுள்ள மனிதர்களாம்- இதினால் திக்கெட்டிலும் அவனதுபுகழ் விளங்குகின்றது—என்றவாறு (அ)

எச்ச ராசர மூங்களிப் பெய்தவே ... ... *
நச்ச ராவுலகாளுநலத்தினன் ... ... ... *
கச்சராவு கழற்பொலி காலினன் ... ... *
வச்சிராங்கத னென்றொரு மன்னவன் ... *

(இதன் பொருள்.)

அசையும்பொருள் அசையாப்பொருள்களாகியஎவையுஞ்சந் தோஷித்தை யடைய ஆதிசேஷன்தாங்கியவுலகத்தைஆளுகின்றநன் மையுடையவன்! கச்சாகஅராவிய வீரகண்டாமணியைத் தரித்தகா லையுடையவன்- வச்சிராங்கத பாண்டியனென் றொருவனிருந் தான்

படையிற் றோற்ற வரசரைப் பல்சிறை .. ...... *
யிடையிற் போட்டன னென்கை வியப்பதோ... ... *
கொடையிற் றோற்றிடுங் கொண்டலை யுஞ்சிறை ... ... *
யிடையிற் போட்டனனென்ப திருக்கவே... ... *

(இதன் பொருள்)

அவன்யுத்தத்திலே தோற்ற ராசாக்களைச்சிறையிலேபோட்டா னென்கிறதென்னஆச்சரியம் தன்கொடைக்குத் தோற்றமேகத்தை யுஞ்சிறையிற் போட்டானென்பதிருக்கும்போது—என்றவாறு (ய)

நாட்டுமவ்வர சன்னொரு நாளிலே... ... ...*
வேட்டை யாடவிரும்பின னாகியே ... ... *
மூட்டுசேனை கரிபரிமொய்த்திட... ... ... *
நூட்டினன்பத் யுத்தரதிக்கிலே... ... ... *

(இதன்பொருள்.)

இப்படிச் செயத்தைநாட்டிய வச்சிராங்கத பாண்டியன் ஒரு நாள்வேட்டையாடும் படியாக மனதிலெண்ணி, யானை, குதிரை, சேனைகள்சூழக் குதிரையை நடத்திக்கொண்டு உத்திரதிக்கில்நடந்தான்—எ-று... ..... ..... ..... .... (௰௧)

துங்க வாம்பரிமீதிவன்றோன்றலு ... ..... *
மங்கை வேழமகன்றகன்றோடின ... ..... ..... ... *
திங்களின்குலச்செல்வனென் றஞ்சியே ... ..... ..... *
யென்குமோடுமிருட்கண மென்னவே .. .... *

(இதன்பொருள்)

சந்திரவமிசத்திலே பிறந்த ராஜாவென்றுபயப்பட்டு ஓடும் இருட்கூட்டப்போலத் தாவாநின்றகுதிரைமேல் ஏறிவந்ததும் தும்பிக்கையையுடையயானைக்கூட்டங்கள் ஓடிப்போயினதுகள்... (௰௨)

வீறு மம்புலியின்குலமேன்மையான் .... ..... .... *
வீறு மம்புலியின்குலம்வீட்டிறு .... ... ..... ... *
றூறி லொன்று கடமைகொண்டாள்பவ..... ..... ... *
றூறிலொன்றுகடமைகொண்டானரோ .... ..... .. *

(இதன்பொருள்)

பெருமைபொருந்திய அம்புலியென்னும்பேருடைய சந்திரகுலத்திற்பிறந்தமேன்மையிலுலேஅம்புலியென்கிற அழகியபுலிகளைக்கொண்டான் ஆறிலொன்றுகடமை வாங்கிக்கொண்டு ஆள்கிறான்மார்க்கத்தில் நேரிட்டகடமை மிருகங்களைக் கொன்றான்—எ-று

சேரமானினத் தன்னைச் சிதைப்பவன் .... ..... *
சேரமானினத் தன்னைச்சிதைத்தனன்... ... *
வாரமாய்கலைச் சங்கம்வளர்த்தவன்..... ... ... *
வாரமாய்கலைச்சங்கம்வளைத்திட்டான் .... ... ..... *

(இதன்பொருள்)

சேரமானென்னும் பேரையுடையசேரனது சேனையைசெயித்தவன், ஒருமிக்க மானினங்களைக்கொன்றான், அன்போடுஆராய்கின்றவித்தியாசங்கத்தை வளர்த்தவன் அனேக கலைமான் கூட்டங்களை வளைத்துக்கொண்டான்—என்றவாறு (௰௩)

சோனை போன்மதமாரிசொரிந்திடும் .... ..... . *
யானை தேர்பரிமான்முதலா கிய .. .... ..... .. *
தானைபின்னிடத் தான்றனிவாசிமேற் .... ... .. *
கானநாவியையககண்டுதொடர்ந்தனன் .. . ..... *

(இதன்பொருள்)

சோனைவருஷம் போல்மதத்தைச் சொரிகின்ற யானை தேர்குதிரை, ஆள்இவர்கள் பின்னிட்டுப்போகத் தானொருவனுகக்குதிரை

மேற்கொண்டவனாகி ஒரு புழுகுபூனையைத்தொடர்ந்தான்—எ-று

அந்த நாவி யகன்றருணாசலத் .... ..... ... ..... *
தந்தியேவல மாய்வினைத்தோடலு .... ..... ....... *
முந்திவாசியதன்பின் முடுக்கினன் .......................... *
சுந்த நாவி விழுந்தது கண்முனே .... .... ..... *

(இதன்பொருள்)

அப்படிராசாவாலே துரத்தப்பட்ட புழுகுபூனையானது சீக்கிரத்திலே அருணாசலத்தை வலமாகச்சுற்றியோடின அளவில்வேகத்தோடுங் குதிரையை நடத்தினன் அந்தப் புழுகுபூனைவந்துகண்முன்னேவிழுந்தது—எ-று .. ... ..... ..... . (௰௬)

பச்சைநாவிபருகினர்போல்விழுந்... ... ..... *
தச்சநாவிதன் னாகம்விடுத்தெழின் .. ..... ... .. *
விச்சைவேந்தர் துதிக்கவிமானமே ... ... *
விச்சைமேனிகொண் டேகியெழுந்ததே ..... ..... *

(இதன்பொருள்)

நாபியாகிய விஷத்தைச் சாப்பிட்டவர்கள்போல் விழுந்துபயத்தையுடைய புழுகுபூனை தன்தேகத்தைவிட்டு வித்தியாதரர்முதலானவர்கள் துதிக்க விமானத்தின்மேல் திவ்வியதேகத்தைப் பெற்றுக்கொண்டெழுந்தது—என்றவாறு ... .... ... (௰௭)

மேவுமந்தவரசன்விழுந்திட .... .... ..... .. *
மாவும்வீழ்ந்துவடிவுதனைத்துறந் ... .... ..... ... *
தோவியர்க்கெழு தாவுருக்கொண்டொரு... .... .. . *
பூவிமானமதேறிப்பொலிந்ததே ....... .... .. ........ ........ *

(இதன்பொருள்)

அதினராசன் விழக் குதிரையானதுஇடறிவிழுந்தது தன்தேகத்தைவிட்டுச் சித்திரகாரருக்கும் எழுதக்கூடாத திவ்வியரூபத்தைப்பெற்றுஒருபுஷ்பவிமானம்ஏறிப்பிரகாசித்தது—என்றவாறு (௰௮)

கைவிலங்கனையான் பரிக்காலின் வீழ்ந் .... .... ........ *
தவ்விலங்கை யரசனைப்போலவே ....................... *
செவ்விலங்க லடியினிற்றேம்பிலன் .................... *
வெவ்விலங்குடனோடில்வீழார்களோ................... *

(இதன்பொருள்)

யானைபோன்ற வச்சிராங்கதபாண்டியன் குதிரைக்காலினருகில்விழுந்து அந்தஇலங்காபுரி ராவணன்போல அருணாசலத்தினடியில் வருந்தினன் மிருகத்தின்பின் ஓடினால் யார்தான் விழார்கள் என்றவாறு .......................... (௰௯)

பாய்ந்தநாவிபரிப்பெயர்போய்ப்பழங்...., ....... *
காந்திகாவிகலாதரப்பேர்படைத் ... ..... ..... *

தாய்ந்தநன்போடருவியங்கண்ணராய் ... ... *
மோர்ந்தணைந்து மகிழ்ச்சியின் மூழ்கினர்... ... *

(இதன்பொருள்)

பாய்ந்துசெல்லாநின்ற, குதிரை, நாவி, என்கிறபேர்போய்ப் பண்டிய காந்திச்சாலி கலாதரனென்கிற பெயரைப்படைத்தவராகி மிகுந்த சிநேகராய் அருவிபோலக் கண்ணிலிருந்துசலம்வர ஒருவருக்கொருவர் கட்டியணைந்து மோந்து சந்தோஷத்தில் மூழ்கினார்கள்—என்றவாறு (௨௰)

அன்னவீரர்களவ்விடைநின்றுழி... ... ... *
பொன்னலார்க்கு முறைத்துய ருற்றிடும் ..... *
மன்னர்மன்னவன் மற்றிதுவந்தவா ... ... .... *
றென்ன வென்னவென் றேங்கியிரங்கினன் ... *

(இதன்பொருள்)

அந்த வீரர்கள் அவ்விடத்தில் நின்றபோது தன் சத்துருக்களுக்குவந்ததுக்கத்திலும் அதிகமாய்வருந்துகின்ற பாண்டியன் இதுவந்தவகையென்னவென்று இரங்கிவருத்தமுற்றான்— என்றவாறு ()

விஞ்சைமன்னர் விமானத்தராகியே ... *
தஞ்சமில்லவன் றன்புடைசூழ்ந்துநீ ... ... *
பஞ்சலஞ்சலென் றங்கையமைத்தனர் ... ... *
பஞ்சவன்மகிழ்வோடிம்பகருவான் ... ..... *

(இதன்பொருள்)

வித்தியாதரர்களாகிய அவ்விருவரும்விமானத்தி லேறிக்கொண்டு தஞ்சமில்லாத பாண்டியனிடத்தில்வந்து நீ பயப்படாதே-பயப்படாதே- என்றுகையமர்த்தினார்கள் அப்போதுபாண்டியன்மிகவும் சந்தோஷத்தோடுசொல்வான்—என்றவாறு. (௨௨)

நீதியாய்வருநீரோவரித்துயர்க் ... ..... *
காதிகாரணமேதிவ்வருந்துயர் ... ... *
போதுமாறெது போதியுமென்றவ ... ..... *
ஞேதவோதக்க லாதரனோதுவான் .. ..... *

[இ-ள்.]நீதிபொருந்திய நீங்களிருவரும் யார் உங்களுக்கு இப்படிவந்த துக்கத்திற்குக் காரண மென்ன அதுபோனது எந்தவிதத்திலே சொல்லுங்களென்றுகேட்கக் கலாதரனென்பவன் சொல்வான் —என்றவாறு, (௨௩)

வாய்ந்தசாலி மதுரையின் மன்னனே... ... .. *
ஏய்ந்த விஞ்சையர் யாங்க ளிவன்பெயர் ..... ..... *
காந்திசாலி கலாதர னென்பெயர் ... ... *
ஆய்ந்தநண்பின ராய்விளையாடினோம் ... ..... *

[இதன்பொருள்.]

நெல்விளையாநின்ற மதுரைக்கு அரசனே நாங்கள் ஒப்பற்றவித்தியாதரர்கள் இவன்பெயர் காந்திசாலி, என்பெயர் கலாதரன், நாங்களிருவரும் மிகுந்த சிநேகராய் விளையாடிக் கொண்டிருந்தோம்—என்றவாறு (௨௪)

மாரவேளும் வசந்தனும் போலவே ... ... *
யாரமேபிரி யாதுறைநாளிலே .... ... *
சேரவூழ்வினை சென்றுதொடர்ந்திட ..... ..... *
மேருமால்வரைச் சாரலின்மேவினோம் ..... ... *

(இதன்பொருள்)

மன்மதனும் அவன்சிநேகனாகிய வசந்தனும் போல் ஒருவரொருவர் பிரியாமல் வாசஞ்செய்கின்ற நாளையிலே முன்செய்த ஊழ்வினை வந்தடைய மகாமேருவின் சாரலிலே போய்ச்சேர்ந்தோம்—என்றவாறு (௨௫)

[வேறு—கலிவிருத்தம்]

மாற்சரியமிக்கதுரு வாசமுனிவாழு ... ... *
மாச்சிரமமேலருகி லந்தமுனிதானே ... ... *
நீர்ச்சொரியநெஞ்சுருகி நின்றமரமெல்லாம் ..... ... *
பூச்சொரியுநந்தவன மீதினிடைபுக்கோம் ... *

(இதன்பொருள்)

கோபமிகுந்த துருவாசரிஷி வாழாநின்ற ஆசிரமத்தினருகிலே அந்தரிஷி மனமுருகித் தண்ணீர்சொரியவளர்ந்த விருட்சங்களெல்லாம் புஷ்பங்களைச்சொரிகின்ற நந்தவனத்திற்புகுந்தோம்—என்றவாறு. (௨௬)

புகவனத்திற்சிறு புதற்களைமிதித்தான் ... .. *
மிக்கவினையேனுமதின் மென்மலர்பறித்தேன் ..... *
அக்கணமுணர்ந்துமுனி யங்கிவிழியாலே ..... ... *
கக்கவொளிமிக்கசடை கட்டவிழவந்தான் ... *

(இதன்பொருள்.)

அப்படிப்புகுந்தவனத்திற் சிறுபுதல்களை இந்தக்காந்திசாலி மிதித்தான், மிகுந்த வினையையுடைய நானும் அதுகளிலிருக்கிற மென்மையாகிய புஷ்பங்களைப்பறித்தேன் அந்தக்ஷணத்திலே துருவாசரிஷி அதிர்ந்து விழிகளாலே நெருப்புகளைக் கொட்டிக்கொண்டு சடைகட்டவிழ்ந்துவிழக் கோபித்துவந்தார்—என்றவாறு (௨௭)

முத்துமணி யாமெனமுகத்தினில் வியர்ப்ப .... *
வித்துருமம்வைத்தனைய மெல்லிதழ்துடிப்ப *
வுத்தரியம்வீழ்வதை யடிக்கடியுயர்த்திச் ..... *
சித்திரவுழற்பொறி தெறிக்கவிவைசொன்னான் .... *

(இதன்பொருள்)

முத்துக்கள்போல் முகத்தில்வேர்வையுண்டாகவும், பவளம்போன்றமென்மையாகிய இதழ்துடிப்பவும், நழுவிப்போகின்றவஸ்திரத்தை அடிக்கடியுயர்த்திக்கொண்டு சித்திரமாகிய அக்கினிப்பொறிதெறிக்க இவைகளைச்சொன்னார்—என்றவாறு . (உஅ)

செந்தபனர்தங்கதிருருறுசிறுகாலு ..... ..... *
நந்துமறுகாலுமொரு காலுமினைதநண்ணு ... .... *
மூத்திமுலையுதிர்ந்துபுல ராதுமுடிவெய்தா ... *
திந்தவனமீதொருவ ரெய்தவெளிதாமோ .. ... *

(இதன்பொருள்)

சிவப்பாகியசூரியகிரணமும் என்னுடையபயத்தினாலே வரமாட்டாது தென்றற்காற்றும் வண்டுகளும் ஒருபோதும் இந்தவனத்தையடையாதுகள் இலையுதிராது வாடாது நாசத்தையடையாது இந்தவனத்தில் ஒருவர்வருகிறதற்கு எளிதோ—என்றவாறு (உ௯)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

சேவினூர்க்கினியபூசைக்கணிமலர்செலுத்துங்காவில் ... *
பாவிகள்புகுந்தெங்கோபக் கனலிடைப்பருசதானீர் .... *
மேவியதுரங்கமாகென் றிவர்க்குறை விடத்தையீந்தான் ... *
நாவியாப்பிறப்பாயென்று ஞண்மலர்பறித்தவென்னை ... *

(இதன் பொருள்.)

இடபவர்கனராகிய சிவனுக்கு இனிமையாகியபூசைக்குச்சாற்றும் புஷ்பங்கள்பொருந்தியசோலையில பாவிகளே நீங்கள்புகுந்து என்னுடைய கோபமாகியநெருப்பினிடத்திலே அகப்பட்டபருசானீர்கள் குதிரையாய்ப் போங்களென்று விஷம்போல் அந்தக் காந்திசாலிக்குச் சாபத்தைக்கொடுத்தார் புஷ்பம்பறித்த என்னைப் புனுகுபூனையாய்ப்போவென்றுசபித்தார் துருவாசரிஷி—எனறவாறு.

கோபமேதவமதாகப் பலித்திடுங்கொடியோனிட்ட ..... *
சாபமேல்வரவேநாங்க ளிருவருந்தளர்ந்து ஞானத் ... *
தீபமே யருளே யன்பர் செல்வமே யெனச்சென் றேத்திப்... *
பாபமே விடுமிச்சாப மொழியுநாள் பகர்கென்றேம் .... .. *

(இதன்பொருள்)

கோபமே தபசாகப்பலித்த பொலலாத ரிஷியிட்டசாபம் எங்கள்மேல்வர நாங்களிருவருந் தளர்ச்சியடைந்து ஞானவிளக்கே கிருபையே பத்தருடைய செல்வமே என்றுவணங்கிப் பாவம் உண்டானதினாலே எங்கள்மேல்வந்த சாபம் ஒழியுநாள் எவ்வளவுக்குச்சொல்லுமென்றுகேட்டோம்—என்றவாறு (௩௧)

முனிவது தவிர்ந்து சாப முனிவனு மொழிவானிந்தத் ..... *
தனிவருஞ்சாபஞ்சோணு சலத்தினை வலஞ்செய்தாற்போ ... *

மணிதருஞ்சாரரும்போற்று மலைவலம் புரிகைத்தானு ... *
பிணிமையாம்பாண்டிநாட்டி னிறைவனுமெய்துமென்றார் ... *

(இதன்பொருள்)

துருவாசரிஷிக்குக் கோபம்நீங்கி நாளிட்ட இந்த ஒப்பற்றசாபமானது திருவண்ணாமலையை வலமாகவந்தாற்போம் மனிதருந்தேவரும்வணங்குகின்ற அந்தமலையைப்பிரதட்சணஞ்செய்தால்சிறந்த பாண்டிதேயத்து, ராஜாவினாலே கிடைக்குமென்றார்— என்றவாறு

என்றொருகதையுஞ்சொல்வா னெரியுருக்கிரியதாக ..... *
நின்றவெம்மிறைவன்முன்னோ னைடுவனக்கடவுளீந்த... ... *
மன்றல்சேர்கனியைத் தன்சேயிருவரும்வருந்திக்கேட்க * [ன்
வின்றுலகனைத்துஞ்சூழ்ந்தோர்க் களிப்பனென் றிறையுஞ்சொன்னு

(இதன்பொருள்)

இப்படிச்சொல்லி ஒருகதையுஞ்சொல்வார் அக்கினிமலையாகிநின்ற சுவாமியானவர் முன்னேவனக்கடவுள்கொடுத்த வாசனைபொருந்திய மாம்பழத்தைத் தம்முடைய பிள்ளைகளாகிய விநாயகர், சுப்பிரமணியர், இருவரும்வருந்திக்கேட்க இன்றைக்குள் உலகமுழுதுஞ்சுற்றிவந்தவர்க்கு இந்தப்பழங்கொடுக்கிறேனென்றுசொன்னார்— என்றவாறு.. (௫௫)

கந்தனுமயிலிலேறிக்கடலுலகனைத்துஞ்சூழ ... *
முந்திடுங்கரியவானை முகத்தவனெழுந்தெல்லோர்க்குந்... *
தந்தையாந்தனதுதாதை தனைவலம்புரிந்தான்றந்தை .... *
மைந்தனைத்தழுவிவேண்டும் வரத்துடன்கனியுமீந்தான் ... *

(இதன்பொருள்)

சுப்பிரமணியரும் மயில்வாகனத்திலேறிக்கொண்டு சமுத்திரஞ்சூழ்ந்த பூமிமுழுதுஞ்சுற்றிவந்தார், யானைமுகத்தையுடைய விநாயகர் எழுந்து [சுவாமிதானே உலகமாகி யிருக்கிறார் அவரைச்சுற்றிவருதல உலகத்தைச்சுற்றிவருதல் ஒக்குமென்று] எல்லார்க்குந்தகப்பனாகிய தன்னுடையதகப்பனைப் பிரதட்சிணஞ்செய்தார் சுவாமி மகனைத்தழுவிக்கொண்டு வேண்டிய வரங்களும் பழமுங்கொடுத்தார்— என்றவாறு (௫௬)

வேலினுன்கடிதுமேவிக் கனிதரவினவத்தம்மைக் ... .. *
காலினல்வலமாயிந்தக் கரிமுகன்வந்தானெழு ... ... *
தாலமேவலஞ்செய்தாலும் பலபலதவஞ்செய்தாலும் .... *
பாலகாநமைச்சூழ்தெய்வப் பலத்தினுக்கிணையோபார்க்கில் .... *

(இதன்பொருள்)

சுப்பிரமணியர் சீக்கிரத்தில் பூமியைச்சுற்றிவந்து பழங்கேட்கச் சுவாமி நம்மை விக்கினேசுரன் சுற்றிவந்தான் ஏழுலகத்தை வலஞ்செய்தாலும் பலபலவாகிய தவத்தைச்செய்தாலும் மகனே நம்மை

சுற்றிவரும் பலனுக்குச்சமானமோபார்க்குமிடத்தில்—என்றவாறு

செம்மலைபுருவாநம்மைத் தினம்வலம்புரிந்தோர்வேதன்...... ✻
நம்பியினுமதிகமாயோன் றனக்குமேததிகம்பார்க்கி .... ✻
னும்பியினுமதிகரிந்த வுமையினுமதிகர்மைந்தா ... ✻
னம்பியினுமதிகமென்று னெவர்க்குமேலதிகமானேன் ... ✻

(இதன் பொருள்)

சிவப்பான மலையுருவாகிய நம்மைத்தினம் வலம்வந்தவர்கள் பிர்மாவினும்அதிகராவர்,விஷ்ணுவினும்அதிகராவர்,பார்க்கில் உம்பினும்அதிகராவர்,பார்ப்பதியினும்அதிகராவர்,மகனே எம்மைப்பார்க்கினும்அதிகராவர்,என்றார்எல்லாருக்குமேலாகியசிவன்—என்றவாறு.

மாசிலாத மனுமேனி வானோதனக்கமரர்தாமும்... ..... ✻
பூசனைபுரியமாட்டா ரதைவலம்புரிந்தபேருக் .... ✻
காசையாயளிக்கும்பூசை நமக்கினிதளிக்கும்பூசை ... ✻
கூசுமாறிழைத்ததீங்கு நமைச்செயுங்கொடுமையாகும்... ✻

(இதன்பொருள்)

குற்றமில்லாதநமது உருவாகியஇந்தமலைக்குத்தேவர்களும்பூசை பண்ணமாட்டார்கள் அதைவலமாகச் சுற்றிவந்தவருக்கு ஆசையுடனேசெய்கிறபூசைநமக்கு இனிதாகச்செய்கிறபூசையேயாகும் அவர்களுக்குக கூசும்படிசெய்ததீமை நமக்குச்செய்ததீமையேயாகுமென்று சுவாமி சுப்பிரமணியருக்கு அருளினார்—என்றவாறு(௫௭)

என்பதுமொழிந்தானந்த னெனச்சொலி முனிவன்போனன் ✻
பின்பதனபடியேதாவி புரவியாப்பிறந்தோமென்று..... ... ✻
தென்புவியுடையாய்நின்றாற் றிருமலைவலமும்பெற்றே .. ✻
மின்பொலிபழையகோலம் படைத்தெழில்விமானத்தானேம்... ✻

(இதன்பொருள்)

இந்தப்பிரகாரம் சுவாமிசொன்னதொன்று துருவாசரிஷிசொல்லிவிட்டுப்போனார் பின்புஅந்தப்படி குதிரையாகவும்நாயியாகவும்பிறந்தோம்இன்றைக்குப்பாண்டிதேயத்தையுடையஅரசனே உன்னால்திருமலையைப்பிரதட்சிணஞ்செய்தோம், மின்னல்போலப்பிரகாசியாநின்ற பழைய உருவைப்பெற்று விமானத்தில் ஏறினவர்களானேம்—என்றவாறு ௫௮

எங்கடம்வரவிதுன்பா லிடுக்கண்வந்தடைந்ததிந்த... ✻
வெங்கனல்வரையைமாவின் மிசைவலம்வருகையாலே ✻
பொங்கியதவும்பூசை புரிந்திடிற்போமென்றேகித் ✻
தங்களோர்புகுந்தார்காந்தி சாலியுத்தரனுமாக... .... ✻

(இதன்பொருள்)

எங்களுடையசரித்திரம் இது அக்கினிசொரூபமாகிய இந்தமலையைகாலினாலே வலஞ்செய்யாமல்குதிரையிலேறிவலஞ்செய்தபடி

யிருலே உனக்குத்துன்பம்வந்துசம்பவித்தது அதுவும் சுவாமியை ப்பூசைசெய்தாற்போமென்று சொல்லிக்காத்திசாலியுங் கலாதரனு ம்தங்களூர்க்குப்போனார்கள்—என்றவாறு. (௬௯)

வேழமும்பரியுந்தேரும் வீரருஞ்சுவடுநாடிச் ... ... *
சூழமந்திரிகளோடுஞ் சூழ்ந்தனர் துயரந்தீர்ந்தான் ..... *
தாழைபின்கமுகின்காடுந் தவளவான்கதிரைத்தீண்டும்... ... *
வாழையின்கரும்பின்சாற்றின் வளர்த்திடும்வளநாடன் ..... *

(இதன்பொருள்.)

அதன்பின்புயானையுங் குதிரையுந் தேருங் காலாட்களும் அடிப ற்றிக்கொண்டு மந்திரிகளுடனே ராசாவைச் சுற்றிக்கொண்டார்கள் அப்பொழுது விசனம்நீங்கினான், தென்னமரங்களுங் கமுகவனமு ஞ் சந்திரனைத்தடவும், வாழைமரங்களுங் கரும்பின்சாற்றி னல்வள ர்த்திடும் பாண்டிநாட்டரசனாகிய வச்சிராங்கதபாண்டியன்— என் றவாறு. (௭௰)

அரதனங்கதனைமைந்தன் றனைக்கடிநகரைப்பித்தாதி .... *
பரதனுமெனவிப்பாரைப்புரவெனப்பகர்ந்தான்சில ... ..... *
விரதனுங்கதனைக்கோவாவதன்முனம் விடைபெற்றானை .. *
யிரதநாண்மருங்குஞ்சூழப் பரிபுகுந்திறைமைசெய்தான் ..... *

(இதன்பொருள்.)

வச்சிராங்கதபாண்டியன தன்பிள்ளையாகிய ரத்தினங்கதபாண் டியனைச்சிங்காசனத்தில் வரவழைத்து முன்னாள் நமதுவமிசத்திற்பிரப லனாகியிருந்தபரதன்போல் ராச்சியத்தைக் காப்பாற்றென்று சொ ன்னான்- அத்தவார்த்தையைக்கேட்பதற்குமுன்னே விடைபெற்று க்கொண்டு மகனனவன் யானை தேர் முதலாகியசேனைகள்சூழ மது ரைக்குப்போய் ராச்சியபாரஞ்செய்தான்—என்றவாறு (௭௧)

முறையினவிறைபின்வந்தகனகமுமுத்துந்தெவ்வர் .. *
திறையினலைந்தபொன்னுந் தினந்தொறுங்களிற்றின்மேலே .. *
இறைவனுந்தனதுதாதைக்களித்திடவிறைவன்வெள்ளிப் .... *
பிறைபினர்க்கினியபூசை திருப்பணிபெரிதுஞ்செய்தான் ... *

(இதன்பொருள்)

நியாயமாக ஆறிலொருகடமைகொண்ட திரவியமும் கடலிற்கு ளித்துவாரிவந்தமுத்துக்களுஞ்சத்துருக்கள்திறையிட்டபொன்னுந் தினந்தோறும் யானையின்மேலேற்றி அரசனாகிய தன்தகப்பனுக்கு அனுப்புவிக்க வச்சிராங்கதபாண்டியன்சடையில் சந்திரனைத்தரித் துசுவாமிக்குஇனிமையாகியபூசை, திருப்பணிபெரிதாகச்செய்தான்.

செய்தபின்றவமதாகிக் கவுதமாச்சிரமத்தோர்பா ..... *
லெய்தியபன்னசாலையியற்றித்தப்பாவந்தீர்க்கு ... *

மைதவழ் மிடற்றார்க் கன்பாய் மலைவலஞ்செயநா ளத்தக்..... *
கைதவத் தெதிரோ வந்தான் கைதவர்க் கெதிரோ வாரான்..... *

[இ-ள்] அருணசலேசுரர்க்குத்திருப்பணியும்பூசைமுதலானவை கள்சிறப்பாகநடாத்தபின்பு தவஞ்செய்கிறதற்கு நினைந்து கௌதமருடைய ஆசிரமத்தி லொருபக்கத்திற்சேர்ந்து பன்னசாலைகட்டிநம்முடைய டாவத்தீர்க்காநின்ற நீலகண்டத்தையுடையசுவாமிக்கு அன்பாகக் கிரிபிரதட்சணஞ் செய்கின்றநாளில் கைதவனெனியபாண்டியனுக் கெதிரோதோன்றினார் வஞ்சம்பொருந்திய மனத்தையுடையவர்களெதிரோ வராதபராபசிவன்—எ-று . .. (௪௩)

அணிச்சிறு பிறையுப்போதவருள்பொழிவிழியநீல .... .. *
மணிக்களை மிட மூநாலுபுயங்களு மலர்க்கை மானும் .... ... *
கணிச்சியுப்விடையின்மீது மிருப்பதுங்கண்டென்பாவப் F *[ன்
பிணைச்சிறைவிம்ப்பமதன்றேவெனச்சொலிப் பெரிதுந்தாழ்ந்தா

(இதன்பொருள்)

அழகுபொருந்திய சிறிய சந்திரனையும் மிகவுங் கருணைபொழியாநின்றகண்களையும் நீலமணிபோல்-பிரகாசியாநின்ற கண்டத்தையும் நான்கு கைகளும் புஷ்பம்போன்றகையில்,மானும்,மழுவையும்,உடையவராகியா ஷிபவாகனத்தின்மேலிருப்பதுபார்த்துஎன்னுடைய பாவப்பிணிப்புஎன்னைவிடுவது என்றைக்கோ என்றுசொல்லிமிகவும் பாண்டியன்வணங்கினன்—எ-று... ..... (௪௪)

[வேறு, அறுசீரடி ஆசிரியவிருத்தம்]

அண்ணாமலையுடையாய்மழ விடையாய்பணிசடைசேர்... *
தண்ணாமலையுடையாயெமையுடையாய் நுதல்தழுவுங்.... *
கண்ணாமலையுடையாய் வினைகடவாரறி வறிதற்... ... *
கொண்ணாடலை யுடையாயுமையுண்ணாமுலை தலைவா... *

(இதன்பொருள்)

அண்ணாமலையென்னும் பெயரையுடையவரே, இளமையாகியரிஷபத்தையுடையவரே, அழகுபொருந்தியசடையிலே குளிர்ச்சிபொருந்தியகங்கையையுடையவரே,எங்களையாட்கொள்ளும் உடையவரே, நெற்றியிற் கண்ணையுடையவரே, பாவிகளறியப்படாத கைலாயத்திலிருக்கின்றவரே,உண்ணாமுலையாகியபார்ப்பதியின தலைவரே—

மையாகிய வினையேனுனை யொருமாவினில்வலமாச்.... .. *
செய்யாதது செய்தேனிது நீரொனறுனை செய்தான் .. ..... *
பொய்யாதவன் மொழிகின்றதுகண்டேயருள்பொழிவுந் .... *
றையானமுடையாய்மழவிடையானிலையருள்வான்....... ..... *

(இதன்பொருள்)

தீவினையையுடையவனாகிய நான் உம்மை ஒருகுதிரையிலேறி வலமாகவந்தது செய்யத்தகாதகாரியம்அதைநான் செய்தபடியினு

லேயொருத்தருளவேண்டுமென்று பொய்யில்லாத பாண்டியன் சொல்ல அதைக்கேட்டு கிருபையுண்டாகி இரண்டைபொருந்தியரிஷ பவாகனராகிய ஐந்துதிருமுகத்தையுடைய பரமசிவன் அருளிச் செய்வார்—என்றவாறு... ... ... ... (சசு)

மன்னுமகபதிநீ பெண்மை மதியாதொருகுலிச ... ... *
மூந்நாள்விடவுற்றூபத னாலேநரர்வடிவா ... ... ... *
யின்னாதன பெற்றாயினி யிமையோரதிபதியாய்ப் .... .... *
பொன்னாடனையென்றேவரம்பொழிந்தேயிறைமறைந்தார் ..... *

(இதன்பொருள்)

வச்சிராங்கதபாண்டியனே நீபூர்வசென்மத்தில் தேவேந்திரனாயிருந்தாய் அந்தநாளில் நம்மை அலட்சியஞ்செய்துவச்சிராயுதத்தைநம்மேல்பிரயோகஞ்செய்தாய் அதனாலேபூமியிலேமனிதனாகப்பிறந்துதுன்பத்தையடைந்தாய்அதன்பின்புநம்மைப்பூசிததுவலம்வந்தபடியினாலே இனிதேவர்களுக்குஅதிபதியாகத்தெய்வலோகத்துக்குப்போவென்று வரங்கொடுத்துச் சுவாமி மறைந்தார்—என்றவாறு... .. ... ... ... .. (சஎ)

அருணைப்பதிவளமிப்படி யருணாபுரிநினைவோர் .... *
மரணத்துக ளடையார்சிவன் வடிவாகுவரொன்றூன்... *
கருணைக்கொரு கடலேபர கதிபெற்றனமென்றே .... *
சரணத்திடைபணிந்தானமன் றணவாட்டியதவத்தோன் ... *

(இதன்பொருள்)

அருணாசலத்தின் வளமிப்படி இத்தலத்தை நினைப்பவர்கள் மரணமாகிய துன்பத்தைப்பொருந்தாமல் சிவனுடைய ரூபம்பெறுவார்களென்றுநந்திகேசுரர்சொல்ல, யமன்வாட்டும்படியாகச்செய்ததவத்தையுடைய மார்க்கண்டேயர்கேட்டுக் கிருபாசமுத்திரமானவரே உம்மாலேபரகதியடைந்தேனென்றுபாதத்திலேவணங்கினார்

இக்காதையின்பொருளானதோரெழுத்தாயினுந்தெளிந்தோர் *
தக்காருடன் படித்தார்சிவசாயுச்சியம்பெறுவார் ... .. *
முக்காலமு மிதுகற்றவர் வினவிப்பொருண்முடிப்பார் .. *
புக்கார்சிவகதியெய்பதுபுதுமைப்பொருளன்றே... ..... *

(இதன்பொருள்)

இந்தகலைதயில் ஒருஎழுத்தினது பொருளாயினும் அறிந்தோர்களும் பெரியோர்களோடு படித்தவர்களும் சிவசாயுச்சியமடைவர் திரிகாலத்திலு மிதுகற்றவர்கள்இதின் அர்த்தத்தைக்கேட்டு முடிப்போர்கள் சிவகதியிற்சேருவார்களென்பது ஆச்சரியமோஎ-று (சஅ)

ஆ ரு வ து

வச்சிராங்கதபாண்டியன் சருக்கம்—முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம்—சாசக.



சிவமயம்.

# தீர்த்தசருக்கம்.



[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

செருமலையுங் களிற்றுமுகப் பிள்ளையிரு பதம்போற்றித் திரை யான்முத்தந், தருமலையு மொருமலையைத் தொலைத்தயலைக கிழவனி ருசரணம் போற்றிப், பொருமலையு மிரங்கலையுமடியாருக் கொழிக்கவழற் பொருப்பாய் நின்றோன், கருமலையுஞ் செம்மலையும் பச்சைமலை மடந்தையையுங் கருத்துட் சேர்ப்பாம்............. .... *

[இதன் பொருள்]

யுத்தஞ் செய்யத்தக்க யானையின்று முகத்தையுடையபிள்ளையாரது இரணபாதத்தையும்வணங்கி அலைகளாலே முத்துக்களைக் கொழிக்குஞ் சமுத்திரத்தையும் கிரவுஞ்சமென்னுமலையையும் அடக்கிய சுப்பிரமணியரது பாதத்தைவணங்கித் துன்பத்தையும் இரங்குதலையும், அடியார்களுக்கு ஒழிக்க அக்கினிமலையாகநின்று என்னுடைய பிறவியைக் கெடுக்குஞ் சிவனையும், மரகதநிறம்பொருந்திய பார்ப்பதியையும் மனதிற் சேர்ப்பாம்—என்றவாறு. (க)

[கலிவிருத்தம்.]

தேங்கு மன்பிற் சிவபுராணத்தனி ... ... *
லோங்கு ருத்திர சங்கிதை யோதினேன் .... ..... *
பாங்கி லிங்க புராணப் பரப்பினு ..... ... *
மீங்கறிந்த படியு மியம்புவேன் .... .... ..... *

(இதன்பொருள்)

பெருகிய அன்பினாலே சிவபுராணத்தில் உயர்ந்திருக்கின்ற ருத்திர சங்கிதையை முன்சொன்னேன் பெருமையாகிய லிங்கபுராணப்பரப்பிலே நானறிந்த தன்மையையுஞ்சொல்வேன்—என்றவாறு (உ)

[மிக]

ஆதிவேத னருளச்சனகனும் ... ..... ..... *
வேதம் வல்ல வியாதனுக் கீந்தனன் ..... ... *
சூத னுக்கவன் சொல்லினன் சூதனு ..... ..... *
மோத மற்ற விருடியர்க் கீந்தனன்... ..... *

(இதன்பொருள்)

ஆதியிலேபிர்மா சனகரிஷிக்குச்சொல்ல, சனகர் வேதவியாசருக்குச்சொல்ல, வியாசர் சூதரிஷிக்குச்சொன்னார். சூதரும் குற்றமற்ற நைமிசாரணியத்து ரிஷிகளுக்குச்சொன்னார்—என்றவாறு (௩)

வன்னி மாமலைத் தோற்றமும் வான்மலைக் *
கன்னி பாகங் கலந்தது முன்னமே ..... ..... *
சொன்ன தாதலி னங்க தொழித்ததன்..... ... *
பின்னருள்ள கதையில் பேசுவாம்.... ..... ..... *

(இதன்பொருள்)

அக்கினிமலையானதுதோன்றினதும் பெருமைபொருந்தியமலைப்பெண்ணை பார்ப்பதிசுவாமியினுடைய பாகம்பெற்றதும் முன்னமேசொன்னபடியினாலே அதைநீக்கிப் பின்னுண்டாகிய சிலசரித்திரங்களைச் சொல்லுவோம்—என்றவாறு. (௪)

தீர்த்தமுமதிற் செய்தருமங்களும் ..... ... *
வாய்த்தவெற்பின் வலமுமிலிங்கமு... .. ..... *
மேத்திடாதவ ரெய்துமிகழ்ச்சியும் ... ..... *
பார்த்தரன்பொருள் கொண்டவர் பாவமும் ..... *

(இதன்பொருள்.)

தீர்த்தங்களின் மகிமையும் அதிற்செய்யப்பட்ட தருமங்களும்கிரிப்பிரதட்சணத்தின் மகிமையும், லிங்கமகத்துவமும், சுவாமியைவணங்காதவர் அடையும் இகழ்வும் அவரடைந்த இகழ்ச்சியைப்பார்த்துச் சுவாமியினது பொருளை அபகரித்தவர்களுக்கு வருகின்ற பாவமும்—என்றவாறு (௫)

பந்த மாயறி யாதுசெய் பாவமுஞ் ..... ..... *
சிந்தை யார வறிந்துசெய் தீமையும்... ... *
முந்தை யோர்க ளொழித்த முறைமையு ... ..... *
மெந்தை தான மகிழ்வு மியம்புவேன்... ... *

(இதன்பொருள்.)

பந்தவசமாய் அறியாமற்செய்த பாவமும் மனதாரஅறிந்துசெய்தபாவமும், முற்காலத்திலுள்ளவர்கள் அப்படிவந்த பாவத்தைத் தீர்த்துக்கொண்ட முறைமையும், சுவாமியினால் மகிழ்ச்சியடைந்த புருகுபூனையின் செய்கையும் சொல்லுகிறேன்—என்றவாறு. (௬)

வேறு-அறுசீரடி ஆசிரியவிருத்தம்,

விருப்பில்கோ தமனரீசன் றிருமுனே வேள்விநாட்டத் ... *
திருப்பொலிசடையோன்றன்றாற் செனித்திடுமறையோனங்கு *
உருப்பொலிகனலோ னென்னவுதித்தன னவனைநோக்கிப் *
பொருப்பிறை யவனைப்பூசை புரியெனப் புகழ்ந்துசொன்னான் *

(இதன்பொருள்)

உலகத்து ஆசையில்லாத கௌதமரிஷி சுவாமியின் சந்நிதிமுன்னே வேள்வியொன்றுசெய்கிறதற்கு எத்தனித்து அக்கினிவளர்க்க அழகுபொருந்திய சடையையுடைய அந்தச்சுவாமியின் கிருபையால்முன்னேதோன்றியிருக்கிற சிவப்பிராமணன் அந்த யாகத்தில் அக்கினிசொரூபம்போல் பிறந்தான் அவனைப்பார்த்துக் கிரிரூபமாகிவிளங்கிய அருணாசலேசுரரைப் பூசைசெய்யென்று புகழ்ச்சியாக வுபசாரஞ்சொன்னார்—என்றவாறு .... ... (எ)

மற்றுமேழ்தருப்பைநீயி லிடுதலுமலர்மா தென்னக் .. *
கற்றையங்குழலேழ் மின்னாருதித்தனர் கனிவமைமாராய் .. *
நிற்றலு மிறைவர் முன்னே நிருத்தமேபுரியுமென்று ... *
னற்றடம் பலவுங்கண்டு நகரமுஞ்சிறப்பஞ்செய்தார்... *

(இதன்பொருள்)

அதன்பின்புகௌதமர் ஏழு தர்ப்பையையெடுத்துக்குண்டத்தின் அக்கினியிலேபோட்டஅளவில் லட்சுமிபோலக் கற்றையாயிருக்கின்ற கூந்தலையுடைய ஏழுபெண்கள்தேவதாசிகளாகப்பிறந்தார்கள்-அவர்களைப்பார்த்துநீங்கள் சுவாமியின் சந்நிதியிலேநாட்டியஞ்செய்துவாருங்களென்றார் அவர்கள்தன்மையாகியதடாகங்கள் பலவுண்டாக்கிஊரைச்சிறப்புசெய்தார்கள்—என்றவாறு .. (அ)

மந்திரம்பரவும்வன்னி மலைதனக்குதித்த கீழ்பா ... .. *
லிந்திர தடமுண்டத்த லிந்திரன் முதலேகண்ட..... *
தந்தரத் தமரர்தாமு மதிந்தினமுழ்கலாலே ... ..... *
சந்தனக் குழம்புநாறு மணக்குமைந்தருவின்மாலை .... *

(இதன்பொருள்)

தேவர்கள் மந்திரங்களாலேதோத்திரம் பண்ணப்பட்ட அக்கினிமலைக்குஉதித்த கிழக்குத்திக்கில்இந்திரதடாகமென்றொன்றுண்டு அதுதேவேந்திரன்முன்உண்டாக்கினது தேவலோகத்திலுள்ளவர்கள் அதில் நித்தியமுழுகுதலாலே சந்தனக்குழம்பின் வாசனையும் கற்பக புஷ்பத்தின் மாலையுமணக்கும்—என்றவாறு .. (கூ)

பாமமா மதிற்றைப்பூசம் படிந்திடிற்பருகிற்கோடி ... *
பிரமபாதகம்போமென்று லதிலைலம் பேசலாமோ... ..., *
சூர்பதிமூழ்கி முன்னே தொடர்ந்தவினைகழிந்தா .. .. *
விரசிபுர் னாவும்வாழவிளமையுவருவகம்பெற்றான்... ...... *

(இதன்பொருள்)

மேன்மைபொருந்திய அந்தத் தேவேந்திரதீர்த்தத்திலே தைப்பூசத்தில்ஸ்நானஞ்செய்து அருணாசலம்ஆசமனஞ்செய்தால் கோடிபிர்மஹத்திதோஷம்போமென்றால் அதன்பெருமையைப் பேசக்கூடுமோ தேவேந்திரன்முன்பு அதில்மூழ்கித் தன்னைப்பற்றியதீவினைகளைத் தீர்த்துக்கொண்டுசூரியனுள்ள அளவும்வாழத்தெய்வலோகத்தையும்பெற்றான்—என்றவாறு... ... .. (௰)

அங்கிதன் பெயராற்றீர்த்தமருணைமால்வரைத்தென்கீழ்பால் *
பொங்கிய ததனின்மீனத்திங்கட்பூரணையின் மூழ்கிற... .. *
செங்கையற்கருங்கட்செவ்வாய்த்திருந்திழையவரால்வந்து *
தங்கிய வினையுந் தீருந் தருமமுந் தவமுஞ்சாரும்... ... *

(இதன்பொருள்)

அருணாசலத்துக்குத் தென்கிழக்கில் அக்கினிதீர்த்தமென்றொன்றுண்டு அதில்பங்குனிமாசப்பௌர்ணிமியில்மூழ்கினால் செம்மைபொருந்தியமீன்போன்ற கரியகண்களையும் சிவப்பாகியவாயையுமுடையமாதர்களாலேவந்து பொருந்தியபாவமுந்தீரும் தர்மமுமதவமுஞ்சேரும்—என்றவாறு ... ... . . (௰௧)

வன்னிமுன் னொருநாளேழுமறைக்குல முனிவர் காதற் *
றுன்னிய மடத்தை மாரைவிரும்பத்தன்சுவாகையந்தப்... *
பன்னியர்வடிவமாகப்புணர்ந்துமேற்படர்ந்தபாவந் ... ..... *
தன்னைத்தான் கண்டவந்தத்தடத்தினிற்படிந்துசாய்த்தான் *

(இதன்பொருள்)

அக்கினிதேவன் முன் ஒருநாள் வேதமுணர்ந்தஏழுமுனிவர்களுடையபத்தினிகளைவிரும்ப அதைத்தனது பெண்சாதியாகியசுவாகாதேவி என்பவளறிந்து அந்த ஸ்திரீகள் ரூபத்தைத்தானெடுக்கப் புணர்ந்து மேலே நினைத்தபாவத்தைத்தீர்க்கத் தன்னாலேஉண்டாக்கப்பட்ட அந்தத்தடாகத்தில் ஸ்நானஞ்செய்து பாவத்தைப் போக்கிக்கொண்டான்—என்றவாறு... ... ... (௰௨)

தென்றிசை தருமதீர்த்த மூலதனிற் செறிந்துமூழ்கிற் *
பொன்றிகழ்வடிவமாஞ்சூடர்ப்பிணிபொடிபட்டோடும் · *
வென்றியிற் காலன்முன்னாள் விதிப்படைதொடரமேனி *
குன்றியசாபந்தீர்த்தானதனிடைக்குளித்துயாதோ..... ... *

(இதன்பொருள்.)

பின்னும்அந்தமலைக்குத் தெற்குப்பக்கத்தில் தருமதீர்த்தமென்றொன்றுண்டு அதில் அடைந்து மூழ்கினால்உடல் பொன்வடிவமாகத் தேகத்திலுள்ள வியாதிபோம் வெற்றிபொருந்திய பிர்மாவினது ஆயுதந்தொடர்ந்து தேகங்குன்றினவதை யமனானவன்அதில்மூழ்கித்தீர்த்துக்கொண்டான்—என்றவாறு... ..... ...(௰௩)

நீங்கரு நிருதிதீர்த்த முளதுமே னிருதி கோணத் ... ...*
தாங்கதின் மூழ்கினோருக் கரும்பகை யனைத்துந் தீரும் ..... *
ஓங்குமத் தடத்தின் முன்னே யுருகியே திருக்மூழ்கி .... *
வீங்கியகனற்கட்பேழ்வா யலகையின் விசயம்பெற்றான் .... *

(இதன்பொருள்)

நீங்குதற்கருதாகியநிருதிதீர்த்தமொன்றுநிருதிமூலையிலிருக்கின்றது அதில்முழுகினவர்களுக்கு அரியபகைகளெல்லாந்திரும்உயர்ந்த அந்ததீர்த்தத்தில் முன்னே முழுகினபலத்தினாலே நிருதியானவன் நெருப்பு நிறம்போன்ற கண்களையும் ஆழமாகியவாயையுமுடைய பேயைத தன் வசமாக்கிக்கொண்டான்—என்றவாறு . (௰௪)

வசையறுமலைக்கு மேல்பால் வைம்பெறு வருணதீர்த்த .... ..*
நசைபெற வதனின் மூழ்கிற் கிரகமொன் பானுநன்றாம் *
இசைபெறக்கிரக மெல்லா முழுகுமவ் விடத்தில் வாயு ..... *
திசையினிற் பவனதீர்த்த முழுகிலெத் துயருந்திரும் ... ...*

(இதன்பொருள்)

குற்றமற்றஅருணகிரிக்குமேற்குத்திசையில்வளம்பொருந்தியவருணதீர்த்தமென்றொன்றுண்டு ஆசையுண்டாக-அதின்முழுகினால் ஒன்பதுகிரகங்களும் நன்மையைக்கொடுப்பார்கள்முன் அந்தஒன்பதுபேரும் அவ்வதங்களிஷ்டத்தையடைய மூழ்குவார்கள் வாயுதிக்கிலே வாயுதீர்த்தமென்றொன்றுண்டு அதில் முழுகினால், எல்லாத்துன்பமும் தீரும்—என்றவாறு ..... ... ... (௰௫)

வடதிசை குபேர தீர்[illegible] முழுகினோர் வறுமைபோமத் *
தடமதிற் குணபாலீசன் [illegible]ருத்திரர் சமைத்ததீர்த்தம் ... *
புடைசெறிந்ததனின்மூழ்கிற்புலையதிற்கடையரேனும் ... .. *
மடைவுடன்வருணநான்கிலதிகராயரனைச்சேர்வார் ... *

(இதன்பொருள்)

வடக்குத்திக்கிலேகுபேரதீர்த்தமென்றொன்றுண்டு அதில்முழுகினவர்களுடைய தரித்திரம்நீங்கிப்போம் அதற்குக்கிழக்கு ஈசானியதிக்கிலே அசுவினிதேவர்களாலே உண்டாக்கப்பட்டதீர்த்தம்இருக்கின்றது அதில்முழுகினால்நீசனைப்பார்க்கிலும் இழிந்தவராயிருந்தாலும்பெருமையோடு நான்குவருணத்திலும்அதிகமாகிப் பரமசிவனைச்சேருவார்கள்—என்றவாறு (௰௬)

அந்தகத்தடத்திற்றென்பாலகத்தியத்தடமுண்டங்கே ... .*
முந்தியகன்னிமாதமூழ்கியுட்கொண்டபேர்கள் ... ...*
சந்திரவதனங்கண்டார்தமிழ்க்கவிக்கரசராவர் ... .....*
செத்திருமயிலுங்கல்விச் செல்வியுஞ்சேருமன்றே ... *

(இதன்பொருள்)

முன்தெற்காகச்சொன்ன யமதீர்த்தத்துக்குத்தெற்காகஅகத்திய

தீர்த்தமென்றொன்றுண்டு அதிற்புரட்டாசிமாதத்தில் மூழ்கியொரு கைசலம்உட்கொண்டபேர்களுடையசத்திரனையொத்த முகத்தைப் பார்த்தவர்கள்தமிழிற்சிறந்தவராவார்கள் லட்சுமியுஞ் சரஸ்வதியும் அவரிடத்திற் சேர்ந்திருப்பார்கள்—என்றவாறு ..... (௰௮)

தனபதிதட்டத்தைச்சேர வசிஷ்டனார்தடமுண்டந்த ... *
முனிவரைப்பசியின்மூழ்கி முனிவரிற்றலைமைபெற்று ... *
ரனையதின்மூழ்கினோர்கட் கங்கமுஞ் செங்கைநெல்லிக் ... *
கனியென விளங்கும் பாவக்கடலதுங் கடப்பரன்றே .... *

(இதன்பொருள்)

முன்சொன்ன குபேரதீர்த்தத்துக்கருகே வசிஷ்டதீர்த்தமென்றொன்றுண்டு அதில் வசிஷ்டர் ஐப்பசிமாதத்தில்மூழ்கிமுனிவர்களுக்கெல்லாமுதன்மையாயிருக்கப்பெற்றார் அப்படிப்பட்டதில்மூழ்கினவர்களுக்குச் சாஸ்திரங்களெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல்விளங்கும்பாவமாகிய கடலையுந்தாண்டுவார்கள்—என்றவாறு.

கங்கைவேற்குமரனானைமுகத்தவன்கதிரோன்வெற்பின் ... *
மங்கையோர்வயிரவன்கன்னி மதியமெண்வசுக்கள்வெள்ளைப் ... *
பங்கடமடந்தைதேவர் குடைந்திடும்பலவுஞ்சூழு ..... *
மங்கதோர்தடத்தின்மேன்மை மறைகளுமறிவுறாதே... .. *

(இதன்பொருள்)

கங்கைவேலாயுதத்தையேந்திய சுப்பிரமணியர், விக்கினேசுரர், சூரியன், பார்ப்பதி, வயிரவர், சத்தகன்னிகள், சந்திரன், அஷ்டவசுக்கள், சரஸ்வதி, மற்றுமுள்ளதேவர்கள்முழுகியதீர்த்தங்கள் அநேகமுண்டு அதுகளில் ஒவ்வொருதீர்த்தத்தின்பெருமையை வேதங்கள்கூடச் சொல்ல அறியாதுகள்—என்றவாறு ... ..... ..... (௰௯)

ஒருநதிதானுமொவ்வாத் திருநதிவடபாலாக ..... .. *
வருநதிமுழுகிப்பூமான் மாயவனுரத்திற்சேர்ந்தா .... *
ளருமறைபரவுஞ்சோணை நன்னதிதென்பாற்றோன்றுஞ் *
சுரநதியமுனைபொன்னி படிந்துதந்துயர்தீர்த்தார் *

(இதன்பொருள்)

ஒருநதியையும் ஒப்புச்சொல்லக்கூடாத திருநதியென்றுஒருநதி அருணாசலத்துக்குவடக்குப்பக்கத்தில் உண்டு அதில் லட்சுமிமுழுகி விஷ்ணுவினுடையமார்பைச்சேர்ந்தாள் நர்மதாநதியெனுஞ்சோணையென்றுஒருநதி அருணாசலத்துக்குத் தென்பாரிசத்திலிருக்கும் அதில்கங்கையமுனை காவேரிமுதலியநதிகள் முழுகித்தங்கள் துன்பத்தைப்போக்கிக்கொண்டார்கள்—என்றவாறு ... [௨௰)

புண்ணியவாறுதெய்வ மலைக்குமேற்றிசையிற்பொங்கு *
தண்ணியபுண்ணியாற்றொன்றுமேர்நகரந்தானும் ... ...*

எண்ணியநதியின் மூழ்கி யீழனென்னரசன் றீங்காம் ... ..... *
பெண்ணியல் வடிவந்தீர்ந்தான் வடிவமும்பேறும் பெற்றான்.... *

(இதன்பொருள்,)

தெய்வீகம் பொருந்திய அந்தமலையின்மேல்பாரிசத்தில்புண்ணியநதியென்று ஒன்றுண்டு அதினருகிலே புண்ணியாற்றூர் என்று ஒருநகரமுண்டு அதில் இருந்த ஈழனென்கிறராசன் தனக்குத்தீங்காக வந்தடைந்த பெண்ணுருவத்தை அந்தநதியில் மூழ்கித்தீர்ந்து நல்ல உருவமும்வேண்டியபேறும்பெற்றான் —என்றவாறு... ...(௨௧)

திருத்துசேயாறு மூஃசொதிருநதி வடபாற்றோன்றும் .... *
பொருந்தவேலெறிந்து செவ்வே ளழைத்தவப் புனிததீர்... *
லருந்திகழுயிலோன் மூழ்கியசுரரைத் தொலைக்குஞ்சீரு .. .... *
மருந்தயிலமரர் சேனை பதியெனும் வரமும்பெற்றான்..... .... *

(இதன்பொருள்)

அழகியசேயாறென்னுநதிமுன் சொன்ன திருநதிக்குவடபாரிசத்திலிருக்கும் அதுமுன்சுப்பிரமணியர் வேலெறிந்து அழைத்ததீர்த்தம் அதில்மிகவும் பிரகாசிக்கின்ற வேலையுடை அந்தச்சுப்பிரமணியரே மூழ்கிஅசுரர்களைக்கொல்லும்வரமும்அமிர்தபானஞ் செய்யுந்தேவர்களுடையசேனாபதியென்கிறபேரும்பெற்றார், என்றவாறு.

திருத்தராலயத்திநுள்ளேசிவதடமொன்றுதித்தங் ..... ... ...*
கருத்தினு னினைத்தால தெய்வகங்கையிற்படித்ததொக்கும் ..... *
உருத்திரர் பலரு மாசிமகத்திலே யுகந்து மூழ்கி... ...... .. *
னருத்தினி லிருந்து தேவரெவரினு மேற்றம் பெற்றார் .... ... *

(இதன்பொருள்)

சுவாமியினது ஆலயத்தில் சிவகங்கையென்றொருதீர்த்த முளது அதைத்தினந்தோறும் தன்மனதிலுலே நினைத்தால்கங்கையில் மூழ்கினபலனுண்டாகும் அநேக ருத்திரர்கள் மாசிமகத்திலேஸ்நானஞ் செய்துரிஷபவாகனரூடராய் எல்லாத்தேவர்களிலும்மேன்மைபெற்றார்கள்—என்றவாறு (௨௫)

சக்கரதீர்த்த மந்தத் தடத்தினிற் குணபாற்றோன்றும் .... *
மைமக்கடலனையமேனி வராகமாய்படிந்ததாகும் ... *
அக்கரை யலமாய் வந்தோர் மூழ்கினோ ரருந்திறலோர்கள் ... *
துக்கசாகரம்விட்டீசன் றுணைப்பதம் பெறுவரன்றே ..... *

(இதன்பொருள்)

சக்கரதீர்த்தமென்றொரு தீர்த்தம் முன்சொன்ன தீர்த்தத்துக்குக்கிழக்கே யிருக்கின்றது அதுமுன்னே சமுத்திரத்தினிறம்போன்றவிஷ்ணுவராகஅவதாரத்தில் மூழ்கிப்பேறு பெற்றதாகும், அந்தத் தீர்த்தத்தை வலமாகவந்தவர்களும் அதில்மூழ்கினவர்களும் அந்தத்

ளைஉட்கொண்டவர்களும், அன்பச்சமுத்திரத்தில் நின்றும் நீங்கிச்சி வனது இரண்டுபாதத்தையும் இடமாகப்பெறுவார்கள்—என்றவாறு

நாயகனமருங்கோயின் மருங்கினி லளினக்கோயிற் .... *
றாயவன்பெயராந்தீர்த்தந் தீயவன் றிசையிற்றோன்றுங் ... *
காயமத்தடத்திற்றோய்ந்தார் பிறவியாங்கடலிற்றோயா... ...*
ராயிரஞ்சனனத் தோறுமடைந்ததீவினையுந்தீர்ப்பார் ..*

(இதன்பொருள்)

அருணாசலேசுரர் எழுந்தருளியிருக்கிற கோயிலுக்குப்பக்கத்தில் அக்கினிதிசையில பிரமதீர்த்தமென்று ஒருதீர்த்தம் உண்டு அதில்மு ழுகினவர்கள் பிறவிச்சமுத்திரத்தில் முழுகார்கள் ஆயிரம்பிறப்புக் கள்தோறுஞ்சேர்ந்ததீவினையைத் தீர்ப்பார்கள்—என்றவாறு (௨௫)

அத்தடமுழுகிச்செம்பொன் னணுவளவளிப்பாராகிற் .*
சத்தசாகரஞ்சூழ்ந்தப்புவியெலாந்தனத்தினாலு ..... *
முத்தணிமணியினாலு நிறைத்தருமுழுதுமீசன் ... *
பத்தர்பாலளிக்குமந்தப் பலத்தினுமதுகமாகும் ... ..... *

(இதன்பொருள்)

அந்தத்தீர்த்தத்தில் முழுகித்தங்கம் ஒரு அணுவளவு கொடுப்பா ராகில்சத்தசமுத்திரஞ்சூழ்ந்தஇந்தப்பூமியெல்லாம்சொர்னத்தினா லுமுத்துமுதலாகிய ரத்தினங்களினாலும் நிறைத்து அவைகளையெ ல்லாம் சுவாமியினுடைய பத்தரிடத்தில் கொடுக்கும் பலனிலுமதிக மாகும்—என்றவாறு (௨௬)

தேனுகுதடத்தின்மூழ்கிச்செப்பவாவீந்தோர்வெள்ளைத் *
தானவாரணஞ்சூழ்செம்பொற் சயிலமேர்விமானத்தேறி .. *
மேனகையரம்பைதூய கவரிக ளிரட்டமேவி *
யாவிமேலார்மயிற்கோர் கற்பமரன்பதத் திருப்பரன்றே ... *

(இதன்பொருள்)

தேன்பொருந்தியபுஷ்பங்களையுடைய அந்தத்தீர்த்தத்தில் முழுகி ச்சிவப்புப்பசுவைத்தானஞ்செய்தவர்கள்மதங்கொண்டவெள்ளையா னைகள்சூழ்ந்து தாங்கப்பட்டமகாமேருபோலுஞ்சொர்ன விமான த்திலேறிக்கொண்டும்மேனகைரம்பை இருவரும்பரிசுத்தமாகிய கவரி வீசப்போய் அப்பசுவினது மயிரொன்றுக்கு ஒருகற்பகாலம் சிவ பதத்தில் இருப்பார்கள்—என்றவாறு. (௨௭)

காலமேயதனின்மூழ்கிக் கரியவானளித்தோர்கோல... *
நீலமால்வரைபோனீலநெருங்கியவிமானத்தேறி .. ..... *
சூலமேபிடித்துட்பூத கணத்தவர்தொடர்ந்துபோற்ற .. *
பாலலோசனர்வாள்கின்றபரபதத்திருப்பரன்றே ..... *

(இதன்பொருள்)

அந்தத்தீர்த்தத்தில் காலமேமுழுகி கறுப்புப்பசுவைத் தானஞ்

செய்தவர்கள் அழகுபொருந்திய நீலமலைபோல்நீலரத்தினமிழை
த்தவிமானத்திலேறிச் சூலாயுதத்தைப்பிடித்துக்கொண்டு பூதகணங்
கள் தொடர்ந்துவணங்க நெற்றிக்கண்ணையுடைய சிவனுடைய
பாசுபதத்தில் இருப்பார்கள்—என்றவாறு .. (௨௮)

வெள்ளையானையளித்தோர்வெள்ளை விடைகளாயிரஞ்சூழ்முத்தின் *
கொள்ளையாம்விமானத்தேறியிமையவர்குழாங்கொண்டேத்த *
வள்ளலார்பதத்திற்சேர்வர்மழைக்குடைசெருப்புத்தந்தோ... *
ரெள்ளரும்பரிமாவீந்தோரிந்திரபதத்திற்சேர்வார் .... .... *

(இதன்பொருள்)

அந்தத்தீர்த்தத்தில்முழுவெள்ளைப்பசுவைத் தானங்கொடுத்த
வர்கள் ஆயிரம்வெள்ளை ரிஷபங்கள்சூழ்ந்த முத்தினால்அலங்கரிக்க
ப்பட்ட விமானத்திலேறிக் கொண்டுதேவர்கள் கூட்டமாகச்சேர்ந்
துவணங்கச்சுவாமியினதுபதத்தில் சேர்வார்கள்மழைக்குக்குடையு
ம்பாதரட்சையுங் கொடுத்தவர்கள் யோக்கியமாகிய குதிரைகொடுத்
தவர்கள் தேவேந்திரபதவியிற்சேர்வார்கள்—என்றவாறு (௨௯)

கன்னியைத் தானமாயக் கரைதனிலளித்தோர்தேவர் ... .. *
பொன்னியலுலகிற்போக பூமியி லளகைநாட்டின்... ... *
மின்றிகழ் மலரோனாட்டில விரும்பின நுகர்ந்து தேவர் .. *
சென்னியால்வணங்கப்போற்றச்சிவபதத்திருப்பரன்றே *

(இதன்பொருள்)

அந்தத்தீர்த்தக்கரையிலே கன்னிகாதானஞ் செய்தவர்கள்தேவ
லோகத்திலும் சுவர்க்கலோகத்திலும் குபேரனுடையஅளகாபுரிப
ட்டணத்திலும் பிரகாசம்பொருந்திய பிரமலோகத்திலும் சிலசில
நாட்களிருந்து விரும்பினவற்றையெல்லாம் அநுபவித்துத்தேவர்
கள்தலையாலேவணங்கஅதின்பின் சிவபதவியிற்சேர்வார்கள்—எ-று

உத்தம தலத்திற்கோடி யருந்தவர்க் குதவு மன்ன .... (௩௰)
நித்தமாங் காசி மீதோ ரவிழ்ப்பலன் றனக்கு நேரா ... ..... *
தத்தலத் தனந்தகோடியருந்தவர்க்குதவுமன்னஞ் ... ..... ...*
சத்திய வருணைநாட்டிலவிழ்ப்பலன் றனக்கொவ்வாதே .... *

(இதன்பொருள்)

உத்தமமாகிய ஸ்தலங்களில்கோடி அருமையாகிய தவசிகளுக்கு
ப்படைத்த அன்னத்தின் பலனானது நித்தியமாயிருக்கிறகாசியில்
பெரியோர்களுக்குப்படைத்தஅன்னத்தில்ஒருசோற்றுப்பருக்கை
ப்பலனுக்கு ஒவ்வாது, அப்படிப்பட்ட காசியில் அநேககோடி த
பசிகளுக்குப்படைத்த அன்னத்தின்பலன் உண்மையாகிய அருணா
சல ஸ்தலத்தில் ஒருசோற்றுப்பருக்கைப்பலனுக்குக்கூட ஒப்பா
காது—என்றவாறு... ..... .... ... .. (௩௧)

ஆவடி யளவுபூமியந்தணர்க்களித்தோ ரீசன் .. *
சேவடி நிழலிற்றங்கள் கிளையுடன்செருக்கிவாழ்வார் ..... *
மாவிடையரற்குவிட்டோர்மற்றொருவிடைமேலேறி... *
மேவிநின்றுசிவலோகத்திற்பவனிபோய்வியப்பரன்றே ... *

(இதன்பொருள்)

பசுவின் குளப்படியளவுபூமிபிராமணர்களுக்குத் தானஞ்செய்தவர்கள் பரமசிவனது பாதநிழலிலேதங்களுடையசுற்றத்தோடுகளித்துவாழ்வார்கள் சுவாமிக்குப்பெருமைபொருந்தியரிஷபங்களைத்தானஞ்செய்தவர்கள் மற்றொரு ரிஷபவாகனத்தி லேறிக்கொண்டு சிவலோகத்தில் பவனியாகப்போய்ச்சந்தோஷித்திருப்பார்கள்—என்றவாறு (௩௨)

சாலைகள்சமைத்தோர்நந்தவனஞ்சமைப்பித்தோர்கேணி... *
கூலமார்தடங்கள்கண்டோர் குலிசனூர்பதத்திற்சேர்வார் ...*
ஆலயமெழுகித்தூர்த்து விளக்கிட்டோரலங்கரித்தோர் ..... *
மேலையினமுவிற்பாற்றன் மெத்தையிற் றுயில்வரன்றே ..... *

(இதன்பொருள்)

அருணாசலத்திலே சாலைவைத்தவர்களும், நந்தவனம்வைத்தவர்களும், கிணறுகள் மனற்குன்றுபொருந்திய குளங்கள்வெட்டினவர்களும்,தேவேந்திரபதவி அடைவார்கள், ஆலயமெழுகிமேடுபள்ளம்நிரவி விளக்கேற்றிவைத்தவர்களும், அலங்காரஞ்செய்தவர்களும், விஷ்ணுவாய்த் திருப்பாற்கடல் மத்தியில் சர்ப்பசயனத்தில் யோகநித்திரைசெய்வார்கள்—என்றவாறு, (௩௩)

மழைப்புனலரிதாநாளின்மருவுநீர்ப்பந்தல்வைத்தோர் ..... *
செழிகருமேற்பதவிதன்னிற் றேவருந்துதிக்கவாழ்வார் ..... *
புழைக்கைமா வுரியரன்பர்க் கணிகலைபுனைவித்தோரோ ... ... *
ரிலைழக்கள விறந்தகால மிறைபதத்திருப்பரன்றே..... ...*

(இதன்பொருள்)

ஜலம் அரிதாகியகோடைக்காலத்தில் தண்ணீர்ப்பந்தல்வைத்தவர்கள் செழுமைபொருந்திய மேலாகியபதவியில் தேவர்களும்வணங்கவாழ்வார்கள். யானையுரிபோர்த்த சிவனுடைய அன்பருக்குவஸ்திரங்கொடுத்தவர்கள் ஒரு இலைழக்கு அளவிறந்தகாலம்சிவபதத்திலிருப்பார்கள்—என்றவாறு (௩௪)

மடஞ்சமைத்தவர்களந்த மடத்திலோர்நாட்கோர்கந்ய ...*
மிடம்பிடித்தழியாவீட்டி லிருப்பர்வேறிறந்தபேர்க்கும் ..... *
விடங்குடித்திறந்தபேர்க்கும் விதியினூலுறுநிவேள்விக் ... -*
கடன்கழித்தவரோலந்தக்குலமெலாங்கதியிற்சேரும் ..... *

(இதன்பொருள்)

இத்தஸ்தலத்தில் ஒருமடங்கட்டினவர்கள் அந்தமடத்திலிருக்கிற

ஒருவர்களுக்கு ஒருகற்பகாலம் கெடுதலில்லாத மோட்சத்தில் நீ
பெற்றிருப்பார்கள்பின்னும்அவச்சாவாயிருந்தவர்களுக்கும்,விஷங்
குடித்திறந்தவர்களுக்கும்,விதியாகஉறுதிபொருந்திய பிதிர் யாகம்
அந்தஸ்தலத்தில் செய்தால் அவர்கள் குலத்தாரெல்லாருங் கதியிற்
சேருவார்கள்—என்றவாறு (௧௫)

காகமுன் பலிபீடத்திற்பலிதன்னைக்கவரும்போதி ... *
லாகமார்சிறையைக்கீழே புடைத்ததா லயத்தினூடே ..... *
ஓங்கியானமதுகோயில் விளக்கியதெனவுட்கொண்டு... ... *
பாகசாதனனு ... மூம் பதியினைப்பாலளித்தான் ..... *

(இதன்பொருள்)

ஒருகாக்கையானது அந்தஸ்தலத்துக்கோயிற் பலிபீடத்தில்வை
த்திருக்கிற பலியன்னத்தைவாயினாற் கிரகிக்கிறபோது தன்னுடை
யசிறையால் கீழேயடித்தது அதைச்சுவாமிபார்த்து ஆலயத்தினுள்
பிரியத்தினால் நம்முடைய கோயிலை விளக்கியதென்று நினைத்துத்
தேவேந்திரன்வாழ்கின்ற உலகத்தை அந்தக் காகத்துக்குக் கொடுத்
தருளினார்—என்றவாறு (௧௬)

மூடிகமொன்றுகோயின் மூலைப்பினைக்கிளறும்போது ..... *
தேடருமணியொன்றங்கே சிதறியோர்விளக்கங்காட்ட ... *
வாடியபெருமான்றீப மளித்ததென்றதற்குநல்ல .. ... *
வீடியர் நெறியுங்காட்டி விரைந்துசாலோகமீந்தான் ... *

(இதன்பொருள்.)

ஒருபெருச்சாளியானது கோயிலில் வளையுண்டாக்கும்போதுதே
டுதற்குஅரியமாணிக்கமணியொன்று அங்கேசிதறிச்சந்நிதியிலே வி
ளக்குப்போலக் காண்பிக்க நடனஞ்செய்தசுவாமியானவர்நமக்குத்
தீபங்கொடுத்ததென்று அதற்கு ஞானமார்க்கத்தைத் தெரிவித்துச்
சாலோக பதவியைக்கொடுத்தார்—என்றவாறு (௧௭)

சிலந்தியொன்றொருநாளந்தத்திருமலையிடத்துநூலைக் ...*
கலந்துடனிழைக்கவீது கலைநமக்களித்ததென்று ..... .... *
நலந்திக ழரசனாக்கி யதற்குநல் லறிவுநல்கி .... .. *
யுலர்ந்தபின் னெடியமாய னுலகினையுதவினானே... ..... *

(இதன்பொருள்)

அந்தமலையில் ஒருநாள் ஒருசிலந்திவாயினாலே பின்னவிட்ட இ
துவஸ்திரம்தெப்துகொடுத்ததென்று அந்தச்சிலந்தியை இராஜாவா
கப்பிறப்பித்து நல்லஞானத்தைக் கொடுத்துத் தேகவியோகமான
பிற்பாடு விஷ்ணுலோகத்தைக்கொடுத்தார்—என்றவாறு. (௧௮)

ஒருமணலைச் சிவனுருவமெனநினைத்தவ் விடத்தில் வைத்தோ
னொருவன்பின்னைப், பரகதிபுக் கடைந்துசிவ னென்னவேற்றுமை

யகன்றபதவிசேர்ந்தான்,பொருவரிய வருணைகிரிப் பதிவளமீ தெ
ளவுரைத்துப் புண்டரீகத், திருமுகமண் டலமலர்ந்தே யிருந்தன
னுன் மறைபுகன்ற செல்வன் றானே. ... ..... (௫௮)

(இதன்பொருள்.)

பின்னும் அந்தஸ்தலத்தில் ஒருவன்மனையைச் சிவனுருவமென்று நினைத்துவைத்ததனால்அவன்மேலாகியகதியைச்சேர்ந்து சிவனென்றும் இவனென்றும் பேதமில்லாமல் இருக்கிறசாரூப்பியபதவியைப்பெற்றான் ஒப்பில்லாதஅருணாசலத்தின்வளம் இதுவென்று தாமரைமலர்போன்ற முகமலர்ந்து சொல்லியிருந்தார் நான்குவேதங்களையும் சொன்ன பிரம்மா—என்றவாறு. (௫௯)



ஏழாவது

தீர்த்தசருக்கம்

முற்றுப்பெற்றது.



ஆக திருவிருத்தம்—௪௱௮௯.







சிவமயம்.

# திருமலை
# வலம்புரிச்சருக்கம்.



[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

கனகமல கனகமலர்த் தடங்களது பெருமையினாற்களித்தேனந்து, வனகமலை வலம்புரியுஞ் செயலினையுந் தெரியவுரைத் தருள்வாயென்று, சனகமுனி யெழுந்துபணிந் துரைக்கவது மனமகிழ்ந்தாங் கிரணக்கோலிற், றினகரனூர்திறந்தடைக்குந் திருக்கோயிற் கடவுளினை செப்பலானான்...........................................................❋

[இதன்பொருள்]

மேன்மைபொருந்தியபிர்மாவே பொன்போன்றநிறத்தையுடைய தாமரைப்புட்பங்கள்சூழ்ந்த தீர்த்தங்களின் பெருமையைச்சொல்லக்கேட்டுச் சந்தோஷித்தேன், பாபாகிதமாகிய கிரியைவலஞ்செய்யும் பெருமையையுந்தெரிய அருள்செய்வாயென்றுசனகரிஷியானவர் எழுந்துவணங்கிச் சொன்னஅளவில் மனதுசந்தோஷித்துச் சூரியன் தனதுகிரணமாகியதிறவுகோலாலேதிறந்துமூடுந்தாமரைமலராகிய கோயிலில் வாசஞ்செய்கிற பிர்மா சொல்லத்தொடங்கினார்—என்றவாறு. (௧)

கற்பமெல்லாமரியதவம் புரிந்தவரு மதின்பெருமை காணமாட்டார், அற்புதவம்புரிந்தவருக் கருணைகிரி வலத்தினல மறியலாமோ, சிற்பரன்றன் புகழ்கேட்கும் விருப்புடையா யெனவுனக்குச்செப்பாநின்றே,னற்புதமிக் கதையமுதைச் செவிவழியேபுகட்டவின்ப மருந்துகென்றான்...........................................................❋

[இதன்பொருள்.]

கற்பகாலம் அரிதாகியதவஞ்செய்தவர்களும்அதன்பெருமையை

அறியமாட்டார்கள், அற்பமான தவத்தைச்செய்தவர்களுக்கு அரு
ணாசலத்தைவலஞ்செய்யும் பெருமையை அறியக்கூடுமோ, பரமசிவ
னுடைய புகழைக்கேட்கும் ஆசையுள்ளவனென்று உனக்குச் சொ
ல்லத்தொடங்கினேன் அற்புதம்பொருந்திய இந்தக்கதையாகிய அமி
ர்தத்தை உன்காதாகிய வாய்வழியிலே புகட்ட இன்பமாகச்சாப்பிடு
என்றுசொன்னார் பிர்மா—என்றவாறு (௨)

சோணகிரிவலப்புரிதல் பிறவியென்னும் பெருங்கடற்குத் தோணி
யாகும், நரகக் குழிபுகுதா தரியமுத்தி வழிக்கேற ஏணியாகும்,
காணரிய தவத்தினுக்கு மறத்தினுக்கு மரும்பொருட்கும் காணியா
கும், வானுதன்மின் னிடத்திருக்குங்கண்ணுதலைமனமுருக்குமகிழ்ச்
சியாகும். ... ... ... ... ... *

(இதன்பொருள்)

அருணாசலத்தை வலஞ்செய்கிறது பிறப்பென்கிற பெரியகடலை
த்தாண்டுகிறதற்கு ஒருதோணியாகும், ஏழுநரகக்குழியிலும் புகுதா
மல் அருமையாகியமுத்திவழிக்கு ஏறுகிறதற்கு ஏணியாகும், காணு
தற்கு அரியதவசுக்கும் தருமத்துக்கும் சம்பத்துக்கும் ஒருகாணி
யாயிருக்கும், ஒளிபொருந்தியநெற்றியையுடைய பார்வதியை இ
டப்பாகத்தில்வைத்திருக்கின்றசுவாமியை மனதையுருக்குஞ்சந்தோ
ஷமாகவும்—என்றவாறு (௩)

காசிமுதற்சிறப்புடையதலங்களிலே யிருந்திறையைக்கற்பகால,
பூசைசெய்யுமொருபலமு நெடுங்காலமரியதவம்புரிகைதானும் *
தேசிகனுரைத்தபடிசமாதியிலே யிருந்துபெறுஞ்சித்திதானும் *
நேசமுடனருணகிரிவலம்வருகென்றுரைப்பதற்குநிகராதாமோ. *

(இதன்பொருள்)

காசிமுதலாகச்சொல்லப்பட்டசிறப்புடைய, ஸ்தலங்களிலேஇருந்
து சுவாமியைக கற்பகாலம் பூசைசெய்தபலமும், அநேககாலந்தவ
சுசெய்தலும், குருசொல்லியமுறைப்படியே சமாதியிலே இருந்
து அடைகின்றசித்திகளும் அருணாசலத்தைவலம்வரவேண்டுமென்
றுசொல்லியபலனுக்குநிகராகுமோஎன்றுசொன்னார்—என்றவாறு

அருணைகிரிவலம்வருகென்றுரைப்பானவிலதிகபிரமத்திநீங்கு, நரு
மதையினளவுமது வருந்துபவம் வருத்திநடுநடுங்கியோடு, மருவு
பெரும் பொருள்கவர்ந்த பழவினையுங் கரங்குவித்து வழிக்கொண்
டோடும், குருபரற்குத் தவறிழைத்த கொடுவினையும் பயந்தகரு
தலையுந்தானே... ... ... ... ... ... *

(இதன்பொருள்)

அருணாசலத்தைவலஞ்செய்யென்றுசொல்லும்அளவில் பிர்மஹத்தி
பாதகம்போய்விடும், தர்மத்தையாற்றுநீரளவு மதுவைப்பானம்பண்
ணியபாவமும் வருத்தமுற்று நடுநடுங்கி யோடிப்போகும், பி

...ருடைய தேகம்பொருள்களைக்களவுசெய்த பழைமையாகிய பாவமும் கைகுவித்துக்கொண்டு ஓடிப்போகும் குருவாகிய சுவாமிக்குத் தவறுசெய்த பாவமும் பயந்து கர்ப்பங்கலைந்து ஓடிப்போகும்

அந்தவினையுடன்படலும் பெருங்காற்றினெரிசுடர்போலவியா
நிற்குந், தந்தைதனைக்கடந்தவினை கருடனிற்றவரவெனவே தளர்ந்
துமாயு, மைந்தரையு மகளிரையுந் தொலைத்தவினைக் கடஞ்சுவரின்
வியவாகு, மெந்தைதபொருள் கவர்ந்தவினை தனக்கிருக்குமிடமே
தென்றிசைக்குந்தானே ... ... ... ... ... *

(இதன்பொருள்)

இறுதியைக்கொடுக்கும்பாவமும் அருணாசலத்தைவலஞ் செய்யவேண்டுமென்று நினைத்த அளவில் சூறைககாற்றினெதிராகஇருக்குந்தீபம்போல் அவிந்துபோகும் தகப்பனைக்கொன்ற பாவமும், கருடனைக்கண்டபாப்புபோல் நடுக்கத்தையடைந்து ஓடிப்போம்பிள்ளைகளையும் ஸ்திரீகளையுங்கொன்றபாவமாகியகடலும்வற்றிப்போகும் எம்முடைய சுவாமியினது திரவியத்தைத்திருடின பாவமும் நானிருக்குமிடமெங்கேயென்று ஓடிப்போகும்—என்றவாறு()

[வேறு, அறுசீரடியாசிரியவிருத்தம்]

ஓரடிக்கியாகஞ்செய்த பலத்தினையுதவாநிற்கு ..... *
மீரடியிராசசூய பலந்தருமினியமூன்று .. ..... *
நேரடிபரிமேதத்தின் பலத்தினைநிறைக்குநாலு ..... *
பாரடியிடுவார்க்கியாகப் பலனெலாம்பலிக்குந்தானே ... *

(இதன்பொருள்)

அருணாசலத்தைவலஞ்செய்யவேண்டுமென்று நினைத்து ஓரடி எடுத்துவைத்தவருக்கு யாகஞ்செய்தபலன்சித்திக்கும், இரண்டடிக்கு ராசசூய யாகபலன்சித்திக்கும், மூன்று அடிக்கு அசுவமேத பலன் உண்டாகும், நான்கடிக்கு எல்லா யாகத்தின்பலனும் சித்திக்கும்—என்றவாறு. (எ)

வலங்கொளோரடியேபூமி வலஞ்செயும்பலத்தைநல்கும்... *
அலங்குமீரடியேதீர்த்த மாடியபலன்களியுந் ... *
நலங்கொண்மூன்றடிகளீரெண் டானத்தின்பலத்தைநல்கு *
மிலங்குநாலடிக்கியோகத் தெண்வகைப்பலத்தைநல்கும்... *

(இதன்பொருள்)

பிரதட்சணஞ்செய்யும்போது தூக்கிவைத்த ஓரடியின்பலன் பூமியைப் பிரதட்சணஞ்செய்தபலனை உண்டாக்கும், இரண்டடியின்பலன் சர்வதீர்த்தமாடியபலன்களைக் கொடுக்கும், மூன்றடியின் பலன் ஷோடசதானபலனைக்கொடுக்கும், நாலடியின்பலன் அட்டாங்கயோகஞ்செய்த பலனைக் கொடுக்கும்—என்றவாறு. (அ)

வைத்தவோரடியேபூசைப் பலனெலாம்வழங்குமங்கே ... *
உய்த்தவீரடியே லிங்கந்தாபித்த வுறுதிநல்கு .... *
மெத்தவேயடிமூன்றிட்டபலன்சொலில்விமானங்கோடி... *
யெத்தனைதூபிக்கோயில் சமைத்தபேறெல்லாநல்கும் ..... *

(இதன்பொருள்)

அதுவல்லாமலும் வலமாகவைத்த ஓரடிக்குப் பூசாபலன்களெல்லாம் பலிக்கும், இரண்டடிக்கு லிங்கப் பிரதிஷ்டை செய்தபலனைக் கொடுக்கும், மூன்றடிக்குக் கோடிவிமான ஸ்தூபிகளையுடையகோயில்களைக்கட்டிய பேறுகொடுக்கும்—என்றவாறு (௯)

[வேறு—அறுசீரடி ஆசிரியவிருத்தம்]

நீடருணகிரிவலத்தோரடியிட்டோ ருருத்திரர்வாழ்விலகைக்கொண்டோர், நாடியிரண்டடியிட்டார் மகேசுரர்தம்பதத்தடைந்தாரநியுங்கூடி, ஆடரவப்புனைந்தமலை வலமாகவெழுந்தொருமூன்றடியிட்டார்க்கே, கோடிதலை முறையவரைச் சிவலோகந் தன்னிற்கொண்டு *
போய்க் குடிவைத்தாரே... ... ... ... *

(இதன் பொருள்)

நீண்ட அருணாசலத்தை வலஞ்செய்ய வேண்டுமென்று ஓரடி வைத்தவர்கள் ருத்திரபதவியையடைவார்கள், இரண்டடிவைத்தவர்கள் மகேசுரர்பதவியை யடைவார்கள், மூன்றடி வைத்தவர்களுக்குக் கோடிதலைமுறையிலுள்ள மனிதரையுமப்பதவியிற்கொண்டுபோய்ச்சேர்க்கும்—என்றவாறு (௰)

நன்றிதரு மருணகிரிவலமாகச்சிறிதுவழிநடந்தபேர்க்குத், தன்றுநெருங்கிரணவெள்ளிக் கயிலைமலைவழிமங்கித்தொலையாநிற்கு. *
மன்றியுமம் மலைவலமாய் நடந்தவழிப் பாதுறுத்து மழற்சியாலே, கன்றியகா லனைக்காணிற் கன்றியகாலனாட்போலக் காணும் *
பாவம் ... ... ... ... ... *

(இதன்பொருள்)

நன்றியைக்கொடுக்கும் அருணாசலத்தை வலமாகக் கொஞ்சதூரம் நடந்தவர்களுக்கு நெருங்கிய கிரணத்தைவீசுகின்ற வெள்ளிமலையாகியகைலாயத்துக்குப்போகிறவழி சீக்கிரத்தில்தொலையும் அல்லாமலும்அந்தமலையைவலமாகப்போகிறபோது, பருக்கைக்கல்லுகளாலும் அழற்சியினாலும் கன்றிப்போன காலையுடையவரைக்கண்டால் யமனென்றுபயந்து பாவங்கள் ஓடிப்போகும்—என்றவாறு (௰௧)

வன்னிமலை வலம்புரிந்தோர்பதத்துகளொன் றொருவாயுவசத்தினாலே, புன்னரசமனையவிடப்புகுதிலது கயிலையெனப்புனிதமாகு, மின்னுமவர் பதத்துகளோர் மனிதருடற் செறியிலவ ரிறப்புநீங்குந், துன்னுமவர் பிறப்பொழியும் வலம்புரிந்தோர் பெருமையைநான்சொல்லுவேனோ... ... ... ... ... *

(இதன்பொருள்.)

அக்கினிமலையைவலம்வந்தவர்கள் பாதத்திலொட்டிய தூசொன்று எத்திறத்திலே நரகத்தையொத்தஇடங்களிலேசேர்ந்தால அதுவுங் கைலாயம்போலப் பரிசுத்தமாகும், இன்னும் வலம்வந்தவர்கள் பாதத்துகளிலே ஒன்று மனிதனது தேகத்திற்பட்டால் இறப்பும், அவர்களைப்பின்பற்றிவருகிறபிறப்பும் நீங்கும், அப்படி யாகும்போது பிரதக்ஷணஞ்செய்தவர்களுடைய பெருமைகளை என்னசொல்லோம்—என்றவாறு. (௰௨)

அந்தமலை வலம்புரிந்தோர் சிவனிருக்குங் கயிலையினி லணுகும் போதிற், சந்திரன்வெண் குடைபிடிக்க ரவிவிளக் கெடுக்குமங் கைதருமந்தாங்கும், மந்திரமே லிந்திரனுர் வழிக்குமலர் பரப்பிடு வா னளகைக்கோமான், வந்தனைசெய் தருகுவருங் கந்தமலர் மழை சொரிவர் வசுக்கடாமே... ... ... ... ... *

(இதன்பொருள்)

அந்த அருணாசலத்தை வலஞ்செய்தவர்கள், பரமசிவன்வாசஞ்செய்கின்ற கைலாயமலையைச் சேரும்போது சந்திரன்வெள்ளைக்குடை பிடிப்பான், சூரியன் விளக்கெடுப்பான், தருமதேவதை கைதாங்கி வரும் தேவேந்திரன் வருகிறவழியில் புஷ்பங்களைப் பரப்புவான், குபேரன் தண்டஞ்செய்து சமீபத்தில்வருவான், அஷ்டவசுக்கள் புட்பவருஷங்களைப்பொழிவார்கள்—என்றவாறு (௰௩)

மேனகையும் ரம்பையுட னுருப்பசியுந் திலோத்தமையும வீணை யார்க்குங், கானநடம் புரிவர்கங்கா நதியுடனே யமுனைநதி கவரிவீசும், போனகவின் னமுதுமலைத் துகிலுமுகி லெடுத்தெதிரே போதும்போது, நானமுங்கொண் டலர்மடந்தை நணுகுமுன்னே மறைபுகழ்ந்து நடக்குந்தாமே... ... ... ... *

(இதன்பொருள்)

மேனகையும், ரம்பையும், ஊர்வசியும், திலோத்தமையும், வீணை வாத்தியத்துடனே சங்கீதம்பாடி நடனஞ்செய்துகொண்டுவருவார்கள், கங்கையும், யமுனையும், சாமரம்வீசிக்கொண்டுவருவார்கள், சாப்பிடத்தகுந்த அமிர்தத்தையும், மலையளவுவஸ்திரங்களையும், மேகமெடுத்துக்கொண்டு எதிரேவரும், லட்சுமி பூவும் கஸ்தூரியும் கொண்டுவருமுன்னே சதுர்வேதங்களுமபுகழ்ந்துகொண்டுவரும்—வறு

[வேறு—அறுசீரடி யாசிரியவிருத்தம்.]

சேற்பொதிந் துறுகங்கங்கைபடிவதுஞ்சிறந்ததானம்... *
பார்ப்பது மிகுபாகத்தாலே வருதலும் பலமொவ்வாதால் ... *
ஆர்ப்பொலிசடையான்சோணு சலத்தினைவலமாய்ச்சூழல் ... *
காற்பல னென்றெண்ணுமே முழுப்பலங் கருதுங்காலை..

(இதன்பொருள்)

சேற்கெண்டைகுதித்துவிளையாடுகின்ற கங்கைமுதலாகிய,தீர்த்தங்களிலாடியபலனும்,சிறந்த சிவஸ்தலங்களைத் தரிசனஞ்செய்த பலனும், யோகஞ்செய்தலினாலே வந்தபலனும் ஒப்பாகாது, ஆத்திமாலையைத் தரித்த சடையையுடைய சிவசொரூபமாகிய அருணாசலத்தை வலஞ்செய்தல் காற்பல மென்றெண்ணாமல் முழுப்பலமாக நினைக்கும்போது—என்றவாறு (௰௫)

நிரந்தர மிமையோர்போற்றுநெடியமால்வரையைச்சூழ்வோர்,
பரந்திடும்வழியிற்றோன்றும் பரலினாற்சிவந்தபாதம் ... *
வரங்கொளவணங்கும்வானோர் மகுடகோடிகளிற்றைத்து... *
விரிந்தசெம்மணிகடாக்கி மீளவுஞ்சிவக்குமாதோ ... ..... *

(இதன்பொருள்)

எப்பொழுதும் தேவர்கள்வணங்கும் பெருமைபொருந்திய அருணாசலத்தை வலஞ்செய்வோர்களுடைய வழியிற் கிடக்கின்றபாறுக்களை மிதித்துச்சிவந்தபாதம் பின்பு வரத்தைப்பெறுகிறதற்கு வணங்கும் தேவர்களுடைய மகுடகோடிகளிற் பதித்துப்பிரகாசிக்கின்ற ரத்தினங்கள்தாக்கி மறுபடியுஞ்சிவக்கும்—என்றவாறு (௰௬)

காலுடை கொடுக்கப் பெற்றென் கரியகண் பெரியபெற்றென்
மானிடப் பிறவி யுற்றென் மலைவலம் புரியா மாந்த ..... .... *
ரூனுடைப் புழுக்கூடேறி நரகிடை யுசலாடி ... ..... *
தானிடரிற் படுவதல்லா லுய்கிலர் சனகவென்றார் ..... .. *

(இதன்பொருள்)

அப்படிப்பட்டஅருணாசலத்தை வலஞ்செய்யாதவர்கள் கால் நடையுண்டாய் நடந்துதிரியப்பெற்றென்ன பிரயோசனம், காணுதவர்கள் கண்பெற்று என்னபிரயோசனம், அரியமானிடப் பிறப்பாகப் பிறந்தென்ன பிரயோசனம்,மாமிசந் திரண்டபுழுக்களையுடையதேகத்திலேசேர்ந்துநரகத்தில்வீழ்ந்து அலைந்துதுன்பப்படுவதல்லாமல்பிழைக்கமாட்டார்கள்சனகனே என்றார்,பிர்மா-என்றவாறு

மஞ்சியர் புணர்ச்சிவேண்டின் மன்னர்கை வசமாய்வேண்டி *
லஞ்சியபகைமையெல்லா மக்கணத்தகற்றவேண்டிற்... ..... *
பிஞ்சிளமதிபோனல்ல புதல்வரைப்பெறுதல்வேண்டிற் ..... *
சஞ்சித முதலாமூன்றுகருமமுந்தவிர்க்கவேண்டில் ..... *

(இதன்பொருள்)

அழகெல்லாமனும்நல்ல ஸ்திரீகளுடையபோகம்வேண்டினால்,அரசர்கள் கைவசமாக வேண்டுமானால் அஞ்சத்தகுந்த பகையையெல்லாம் அந்தட்சணத்திலே நீக்கவேண்டுமானால்,பாலசந்திரன்போல நல்லபிள்ளைகளைப் பெறவேண்டுமானால், ஆகாமிய சஞ்சிதபிராரத்துவங்களென்னுமூன்றுவினைகளையும் நீக்கவேண்டினால்—என்றவாறு.(௰௭)

முயலக னல்லைபூத கணங்களை முனியவேண்டிற் .... .... *
றுயருறு பிணியுமாகச் சோகமுந் தவிர்க்கவேண்டி .... .. *
லியலிசை யறிவுவேண்டி லெழுதருங்கோலம்வேண்டின் ... *
மயலறு புகழைவேண்டின் மலைவலம்புரிவார்வல்லார் .... .... *

(இதன்பொருள்)

முயலகன்போன்ற ராட்சதனையும், பசாசுகளையும், பூதகூட்டங்களையும் கோபிக்கவேண்டினால், துன்பத்தைச்செய்யும்வியாதியையும் தேகத்திலவரும், சோகத்தையும்நீக்கவேண்டினால், இயலிசைமுதலாகியகல்வியைவேண்டினால், அழகைவேண்டினால், குற்றமற்றகீர்த்தியைவேண்டினால் அந்தமலையை வலஞ்செய்வார்கள் பெரியோர்கள்—என்றவாறு (௰௬)

வரந்தரு மருக்கவார மலைவலம்புரிந்தோர் வெய்யோன் .... *
தெரித்தமண்டலத்தைக்கிறிச் சிவகதி பதியாச்சேர்வார் .... *
திரத்தருஞ் சோமவாரந் திருமலைவலமாய்வந்தோர் ... *
புரந்தர னெனவேழ் பாரும் புரந்தரன் றம்மைபூண்பார் ... *

(இதன்பொருள்,)

சிரேஷ்டமாகிய ஆதிவாரத்தில் அந்தமலையை வலஞ்செய்தவர்கள் சூரியமண்டலத்தைப்பிளந்து சிவபதத்தைச்சேர்வார்கள், ஸ்திரமாகிய சோமவாரத்தில் வலமாய்வந்தவர்கள் தேவேந்திரன்போல் ஏழுலகத்தையும்ஆண்டுசிவசாரூப்பியத்தையடைவார்கள்என்றவாறு

மங்கல தினத்திற் சூழ்வோர் கடனுடன் வறுமைநீங்கிச் .. .. *
சங்கிலித் தொடரா மேழு பிறப்பையுந் தவிர்ப்பார்புந்திக் .... *
கெங்கணு மகலா சூழ்வோ ரிருங்கலை மறைக ளுலா... ... *
றங்கமுந் தெளிந்து முத்திக் கருகரா யமர ராவார் .... ... *

(இதன்பொருள்)

மங்களவாரத்தில் கிரியைவலஞ்செய்வோர்கள் தங்களுக்குண்டாகிய கடனையும் தரித்திரத்தையும்நீங்கிச் சங்கிலிக்கட்டுப்போல் தம்மைவிடாத ஏழுபிறப்பையுநீக்குவார்கள், புதவாரத்தில் சுவாமியைப்பிரதட்சிணஞ்செய்வோர் நாலுவேதங்களும் ஆறுசாஸ்திரங்களும் அறுபத்துநாலுகலைகளும் தெரிந்து முத்திக்கு நெருங்கினவராய்த் தேவர்களாவார்கள்—என்றவாறு (௰௭)

மாவியாழந்திற்செய்ய மணிவரைவலமாச்சூழ்வோர் ... *
மூவரும்புகழத்தேவர் முனிவர்தங்குரவராவர் ... *
தாவிலா வெள்ளிவாரந் தனிவலம்புரிந்தோர்கஞ்சப் ..... *
பூவையைப்புணரும்பூவைப் புணருமால்புரத்துற்சேர்வார் .. *

(இதன்பொருள்)

பெருமைபொருந்திய குருவாரத்திலே அந்தமலையைவலஞ்
செய்தவர்கள் திரிமூர்த்திகளும் புகழும்படியாகத்தேவர்களு

ளுக்கு பசமானராவார்கள்குறைவில்லாத சுக்கிரவாரத்தில்வலஞ்செய்தவர்கள் தாமரை மலரிலிருக்கின்ற லட்சுமியைச்சேரும் விஷ்ணு பதத்திற்சேர்வார்கள்—என்றவாறு. (௨௨)

உதயமே சனிநாட்சூழ்வோர்க் கொன்பதுகிரகநன்றாய்ப் ..... *
பதினோராமிடத்திற்றாயபலன்களைப்பலியாநிற்கு ..... *
மதியணிசிவனிராவும் வருடம்வந் துதிக்குநாளும் ..... *
அதிகமா மதிகமாகு மைப்பசி முதலாமூன்றும்... ..... *

[இதன்பொருள்]

சனிவார உதயத்தில் பிரதட்சணஞ்செய்வோர்களுக்குநவக்கிரகங்களும் பதினோராமிடத்திலிருந்தபலனைக்கொடுப்பார்கள், சிவராத்திரியிலும் வருஷப்பிறப்பினன்றும், ஐப்பசிமுதலாகிய மூன்றுமாதமும் வலஞ்செய்தவர்களுக்கு மேற்சொன்ன பலங்களிலும் அதிக பலனிருக்கும்—என்றவாறு (௨௩)

அயனசங் கிராமமாசி மகத்திலர்த் தோதயத்தில் ... . *
வெயிலுறுங் கதிரைப் பாம்பு விழுங்குநாள் விதிபாதத்திற் ... *
பயனுறவலஞ்செய் வார்க்குப் பலன்களிற்கோடியாகும் ... *
அயர்வறத் தினஞ்சூழ்வார் பேற்றையா ரறியவல்லார் ..... *

(இதன்பொருள்.)

உத்தராயணத்திலும், தட்சணாயனத்திலும், மாசிமகத்திலும், அர்த்தோதயத்திலும், சூரியகிரணகாலத்திலும், விதிபாதத்திலும், இஷ்டசித்தியை அடையவிரும்பி வலஞ்செய்தவர்களுக்குக் கோடிபங்கு அதிகமாகப் பலன் கிடைக்கும் தளர்ச்சியடையாமல் தினந்தோறும் வலஞ் செய்கிறவர்களுக்கு உண்டாகும்பலனை யார் அறிந்துசொல்லுதற்குவல்லவர்—என்றவாறு. (௨௪)

காரிகை யவரை யற்றைக் கனவிலும் புணர்ந்திடாம .. ...*
நீரினில் மூழ்கித்தூய துகிற்றுவெண் ணீறுசாத்தி .... .... *
பாரிடமுறையேதானமளித்துத்தானவைகொள்ளாமற் ... *
பாரிடைநடந்துசூழ்ந்த தேவரைப்பணிந்துபோற்றி ... *

(இதன்பொருள்.)

அப்படி அதிகபலனைத் தரப்படாநின்ற அருணாசலத்தை வலஞ்செய்யும்விதம் எப்படியெனில், பிரதட்சணஞ்செய்யும் அன்றைக்குப் பெண்களைச் சொற்பனத்திலுநினையாமல் சலத்தில் ஸ்நானஞ்செய்துபரிசுத்தமாகிய வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டு விபூதிதரித்து அந்த இடத்திலே தானம் கிரமமாகக்கொடுத்துத் தாம் ஒருவரிடத்தில் தானம்வாங்காமல் பூமியிலே காலினாலே நடந்து கிரியைச் சுற்றிஇருக்கிறதேவர்களைப்பணிந்துவணங்கி—என்றவாறு (௨௫)

கஞ்சுகம் போர்வை நீத்துக் கவிகையுஞ் செருப்பு நீத்தே... *
குஞ்சுதல் வெகுளிசோக மக்கணத்த தகற்றி வாசி... ... *

குஞ்சர முதலா யுள்ள வாகனங்குறுகிடாமல் .... ..... *
விஞ்சியவடைக்காயுண்டி வழியிடைவெறுப்பதாகி... ....*

(உ௫)

அங்கத்தில் தரிக்குஞ்சட்டையையும் போர்வையையும்நீக்கிக்கு டைபிடித்துக்கொள்ளாமல் கால்களுக்குச்செருப்பு போட்டுக்கொள்ளாமல் பயமுங்கோபமும் சோகமுந்நீக்கிக் குதிரை யானை முதலாகிய வாகனங்களிலேறாமல்தாம்பூலந்தரிக்காமல் போசனத்தையும்வெறுத்து—என்றவாறு .... ..... .... (உ௫)

செங்கைவீசாமற் சோரா துவகையாற் சிரத்திற்கூப்பி..... *
மங்கையர்பக்தர்நீச ருறுப்பிலாவடிவுநோக்கா .... ... *
சங்குறுமடியினோசைசெவிப்புகாதராசர்மாதர் ... ..... *
திங்களை யிரண்டுஞ்சென்று நடந்திடுஞ்செயல்போற்சென்று *

(இதன்பொருள்)

கைகளைவீசிக்கொண்டு போகாமல் சோர்வுஇல்லாமல்—சந்தோஷித்தோடு சிரசிற்கைவைத்துக் கூப்பிக்கொண்டு ஸ்திரீகளையும்பாவிகளையும் நீசரையும் அவயவஹீனரையும் பாராமல் நடக்கிறபோது அடியினுடையசத்தம் காதிற்குக்கேட்காமல் மெள்ளமாகஸ்திரீகள்நடந்துபோசத்துக்கர்ப்பத்தோடுநடக்கிறதுபோலநடந்து எ—று

இருவினையற்று மந்தமலையையெண்டிசையும்வீழ்ந்து .. *
பரவியங்கதனைச்சூழ்ந்த கடவுளர்ப்பணிந்துபோற்றி ...*
பருவமாய் வலமாஞ்சித்தராமராமனத்தாற்போற்றி ... *
புருகியங்கவர்மேற்கைகாற் பயமென வொதுங்கிச்சென்று ... *

(இதன்பொருள்)

நல்வினை தீவினையாகிய இரண்டையுநீக்கும் அந்தக்கிரியையைத் தித்திக்கும்வணங்கி, அந்தத்திக்கிலிருக்கிற சுவாமிகளையும்வணங்கி, உருவம்தெரியாமல்வலஞ்செய்துகொண்டுவருகிறசித்தர்களையும்தேவர்களையும் மனதினாலே வந்தனஞ்செய்து— அவர்கள்மேலேதங்கள்கைகால்கள்படுமென்றுபயந்து வழியினின்றும் ஒதுங்கிச்சென்று—என்றவாறு .. ... .... ... ..(உ௬)

வானமார்மலையைப்பொன்னிற்படிகரன்மணியாயெண்ணி ... *
மோனமாய்நடக்கவல்ல திறைபுகழ்மொழியைக்கேட்க... .... *
வானவிச்செயலினாலேவலஞ்செய்தாலயத்தினண்ணி ... ... *
யேனமுன்னறியான்றனைப்பணிந்துதன் னிருக்கையெய்தி... . *

(இதன்பொருள்)

ஆகாயமட்டும்அளாவிய அந்தமலையைப்பொன்போலவும் படிகம்போலவும் ரத்தினம்போலவும் நினைத்துமவுனமாய் நடக்கவேண்டியது, அல்லது சுவாமியின் ஸ்துதிகளைக்கேட்கவேண்டியது இப்படிப்பட்டதன்மையாகவலம்வந்து கோயிலுட்சென்றுவிஷ்ணுவ

யெயன்றியறியாத சுவாமியினது பாதங்களை வணங்கித்தாங்களிருக்கும்இடத்துக்குவந்து—என்றவாறு .. ... ......(௨௯)

குன்றெனுங்குணத்தார்சூழவிருந்துதீங்கனியால்கொள்க... *
வன்றியேபுலவுநீத்த வடிசிலையுண்கநீதி .. .. ..... *
நின்றவத்தலத்தோர் செய்யு நிலைமையீததிதூரத்திற்... ...*
சென்றவர் வருத்தமாவெவ்வகைவலஞ்செயினுஞ்சீராம் ... *

(இதன்பொருள்)

மலைபோலுயர்ந்தகுணத்தையுடையவராகியசிவபத்தர்கள்சூழ்ந்திருந்து மதுரமாகியபழங்களும் பாலுஞ்சாப்பிடக்கடவர் அப்படியில்லாவிட்டால் மாமிசபதார்த்தம் இல்லாமல் அன்னத்தைப்புசிக்கக்கடவர் இப்படிப்பட்ட செய்கைகளை நீதிபொருந்திய அந்தத்தலத்திலிருக்கிறவர்கள்செய்ய வேண்டியது அதிகதூரத்தில்நின்றும் வந்தவர்கள் தங்களுடைய வருத்தத்தினாலே எவ்விதமாக வலஞ்செய்தாலும் நன்மையாகும்—என்றவாறு ... ..... ..... (௩௰)

நண்ணுத லிலாதஞானச்சனகவிச்சயிலஞ்சூழ... ..... .... *
வெண்டிசைபுரப்போர்தம்பே ரினிற்சிவவுருவங்கண்டார் .... *
வண்டிசைபெருகுமோதிமலைமகண்மலையின்கீழ்பால் . ..... *
கண்டனள் பவளவெற்பிற்கயிலைவெற்பிறைவன்காட்சி ... ... *

(இதன்பொருள்)

கெடுதலில்லாதஞானத்தையுடைய சனகரிஷியேஇந்தமலையினெட்டுத்திக்கிலுந்திக்குப்பாலகர் எட்டுப்பேரும் தங்கள்பேரினாலேலிங்கங்களை ஸ்தாபித்துப்பூசித்திருக்கிறார்கள் வண்டுகளினது ஒலிபொருந்திய கூந்தலையுடைய பார்ப்பதியானவள் கிழக்குத் திக்கில் பவள மலைமேல் ஒரு லிங்கத்தை ஸ்தாபித்துப் பூசித்தாள் —என்றவாறு .... ... ... .. .. .. . (௩௧)

மணிவரைபரியிற்சூழ்ந்த வச்சிராங்கதனப்போது ..... ... *
புணர்பவந்தவிர்க்கத்தென்பால் புழுகணியிறையைக்கண்டான் *
துணியிலாவினைக ணீக்கத் தமியனேன்மலையின்மேல்பால் ... .....
அணியண்ணாமலையானென்னு மருவுரு விறையைக்கண்டேன் *

(இதன்பொருள்)

அருணாசலத்தனிடத்தில் குதிரையிலேறிக்கொண்டுவந்தவச்சிராங்கதபாண்டியன் அந்தக்காலத்தில் தன்னையடைந்தபாவத்தை தீர்க்கத்தென்திக்கில் புழுகணியிறைவரென்று ஒருலிங்கத்தைஸ்தாபித்துப்பூசித்தான் தணியாதபாவங்களை நீக்கிக் கொள்ளநானும் அந்தமலையின் மேற்குத்திக்கில் அணியண்ணாமலையானென்கிற பேரிட்டுஒருலிங்கத்தைஸ்தாபித்துப்பூசைசெய்தேன்—என்றவாறு... (௩௨)

வாலவெங்கதிர்மேற்சேரணவனாகடந்தொருநாட்பாய்ந்து ...... *
சாலுமத் துயரந்தீரத்தனதுபேரிறையைக்கண்டா ... ..... *

ஞாலய முழுதுந்தேவராவநர்ட் டேனையோர்சித்தர் ... *
சீலமா முனிவர்கண்ட சிவனுருத்தெரிக்கொணுதே ..... .... *

(இதன்பொருள்)

சூரியனானவன் அருணாசலத்தைத்தாண்டிப்போனநிழல்வந்தபாவந்திரத் தன்பேரிட்டு ஒருலிங்கத்தைஸ்தாபித்துபூசைசெய்தான், அதுவல்லாமல் அந்தமலையிலிருக்கிற கோயில்கள்முழுதும், தேவர்கள் நாகலோகத்தார், சித்தர்கள், முனிவர்கள், இவர்களாலே ஸ்தாபித்துப்பூசைசெய்யப்பட்டசிவலிங்கங்களை இவ்வளவென்று சொல்லக்கூடாது—என்றவாறு. (௫௬)

ஈசனார் வடிவமான லிலிங்கமவ் வெல்லைசூழ .. ..... *
யோசனை மூன்றுஞ்சேரநெருங்கும்வா னுமீக்கள்போலப் ... *
பேசவதெவமேவந்தத் தலத்தினிற்பெருமைவேலன் ... *
தேசுறுங்கவுரியானை முகத்தனுந் தெரிக்கொணுதே .. ... *

(இதன்பொருள்)

பரமசிவரூபமான அநேகலிங்கங்கள் அந்த எல்லை சுற்றுமூன்று காதவழிமட்டும்ஆகாயத்தில் நட்சத்திரங்கள்போல நெருங்கியிருக்கும், அப்படியிருக்கிறபோது அந்தஸ்தலத்தினதுபெருமை, என்றுசொல்லப்படும்பிரமா, சுப்பிரமணியர், பார்ப்பதி, விநாயகர், இவர்களாலேயே சொல்லக்கூடாமலிருக்கிறபோது—என்றவாறு (௫௭)

தாதவிழ்மலரோனிவ்வா றுரைத்தலுஞ் சனகன்போற்றி ... *
வேதனேபிறவிதீர்க்கும் விமலனேவிமலனான .... ... *
வாதியைப்பழித்தோர்செம்பொன் கவர்ந்தபேரடையுந்தீங்கும் *
பாதகந்தவிருமாறும் பகரெனப்பதுமன்கூறும்... ... *

(இதன்பொருள்)

தாதுவிரிந்த தாமரைமலரிலிருக்கின்ற பிர்ம்மா இத்தப்பிரகாரஞ்சொன்னதும், சனகரிஷியானவர்வணங்கி வேதமுழுதுங்கற்றுணர்ந்தவரே, பிறப்பைநீக்குபரிசுத்தரே, மலரகிதராஸசிவனைப்பழித்தவர்களுக்குவந்தபாவமும், அவர்தனத்தைஅபகரித்தவர்கள் அடையும்பாவமும், அவைகள்நீங்குவ்வகையும், சொல்லுமென்று கேட்கப் பிரமர்சொல்லுகிறார்—என்றவாறு (௫௮)



எட்டாவது
திருமலைவலம்புரிச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம்— ௲௱௨௪.



பசூரியனே உனக்குளந்தவதையினாலும் ஒருகாலத்துங் கதி கிடைக்காது அப்படியிருந்தாலும் ஒருதொழிலினாலே கிடைக்கலாம் அது யாதென்றால் தெளிவுள்ளவர்க்கு மெய்ம்மையாகிய அருணாசலத்தை வலஞ்செய்துகொண்டு வாவென்றுசொல்லித் திரும்பினனென்றார் பிர்மா—என்றவாறு (௯)

போதித்தபடியேசென்று பொன்மலைவலமாய்முன்னஞ் ... *
சார்ந்தவருக்கன்சோணா சலத்தினைவலமாய்வந்தான் ... *
வாதிக்குமழுவினானு மழவிடைமீதிற்கோடி ... *
யாதித்தனெனவேதோன்றி யாதித்தற்கருளிப்போனான் ... *

(இதன்பொருள்)

பிர்மாவானவர் அநுக்கிரகஞ்செய்தபடியே மகாமேருகிரியைமுன்னேவலமசவருகின்ற சூரியன் அருணாசலத்தைவலஞ்செய்துகொண்டுவந்தான், அந்தச்சூரியனுக்கெதிரே வாதித்துச் சத்துருக்களைக்கொல்லுகின்ற மழுவையேந்தியபரமசிவன் இளமையாகிய ரிஷபத்தின்மேல் கோடி சூரியர்போலத்தோன்றி அநுக்கிரகஞ்செய்து, கைலாயத்துக்கு எழுந்தருளினார்—என்றவாறு. (௰)

பன்னிருமாதந்தோறும் பரிதிமுற்பயத்தினாலே ... *
வன்னிபின்வடிவதான மலையினைவலமாய்ச்செல்வான் ... *
சென்னியினெல்லைசெல்லா னிடப்புறஞ்செல்லன்றன்றேர் *
அந்நிலைவரும்போதேத்தி யலர்சொரிந்தேகுமென்றான் ...*

(இதன் பொருள்)

சித்திரைமுதற்பங்குனியீறாகச்சொல்லப்பட்ட பன்னிரண்டு மாதமுஞ்சூரியன்முன்னே தனக்கு உண்டான பயத்தினாலே அக்கினிச்சொரூபமாகிய மலையைவலஞ்செய்துகொண்டுபோவான், அந்தமலையினுடைய உச்சியின்மேலும்போகான், இடப்புறமாகவும்போகான், அந்தமலைக்குச் சமீபத்தில்வரும்போது ஸ்தோத்திரஞ்செய்து புஷ்பமாரிபொழிந்து செல்வானென்றுசொன்னார்பிர்மா—என்றவாறு. (௰௧)

ஒன்பதாவது
ஆதித்தசருக்கம்
முற்றுப்பெற்றது.

ஆ-டி திருவிருத்தம்—௫௱௧௪.





சிவமயம்.

# பிரதத்தசருக்கம்

[எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

அருணைவாழிறைவன் திரவியமணுவுமட்டாயினுங்கரந்தபேருடனே, மரணமாய்நமனட்டழலிலேகுளிப்பர்வச்சிரவுலக்கையான் மறிவ, ரிருணிறைநரகமிருபத்தெண்கோடி யிடத்திலுமடைவிலேயிருப்பர், தரணியிற்புழுவாய்ப்பிறப்பர்கள்களவு தனக்கிசைந்தவருமத்தகையர்..........................................*

[இதன்பொருள்]

அருணாசலேசுரரது திரவியத்தில அணுவளவாவது திருடினவர்கள் உடனேமரணமடைந்து யமலோகத்திற்போய் அக்கினிக்குழியிலேவிழுந்து அவஸ்தைபடுவார்கள்வச்சிரத்தினாற்செய்த உலக்கையால் அடிபடுவார்கள் இருள்நிறைந்தஇருபத்தெட்டுக்கோடி நரகங்களிலும் அடைவாகவிழுந்துகிடப்பார்கள். மறுபடிபூமியிலேவந்து புழுவாய்ப்பிறப்பார்கள், அந்தத்திருட்டுக்குடன்பட்டுஇருந்தவர்களும் அப்படிப்பட்டதுன்பத்தை அடைவார்கள்—என்றவாறு. (க)

ஓங்கியதலாயுளிசைத்தபொன்னைநோயுற்றபேருடலையுமொழிக்குந், தேங்கியகருணையருணைநாயகர்போற் செய்கையப்படியினிற்கரந்து, வாங்கியபேயனைக்கிளையுடன்சிதைக்குமலையினுங்கடலினுமொளித்து, நீங்கியபொழுதுந் தொடர்ந்திடும் விடுமோதிருவெனைத்தாடருமெற்றிலத்தும் ......................................*

[இதன்பொருள்]

திருவடிப்பூமியினுள் ஒளித்துவைக்கப்பட்டபொன்னானது அந்த நாட்டின்மேல் வந்தவருடையதேகத்தையுங்கண்டிக்கும் அப்படி ஒளிக்கப்பட்டிருந்தகிருபையுடைய அருணாசலேசுரருடையதிரவியத்தைத் திருடியாய், அந்தப்பூமியில் ஒளித்துவைத்து எடுத்துக்

கொண்டவரையோவென்றால் அவர்களுறவோடுகெடுக்கும், மலையிலுங்கடலிலும்மொளித்துக்கொண்ட பொழுதுந்தொடர்ந்து வருந்தும்விடமாட்டாது எவ்விடத்திற்போனாலும் நிழல்போலத்தொடரும்—என்றவாறு ... ... ... ... (உ)

கடிக்கலாஞ்சிலையை விழுங்கலாநெருப்பைக்கவிடக்குழைத்தி
ழைத்தெடுத்துக், குடிக்கலாமிரும்பை யருந்தலாங்கழும்பாற்கொ
ள்ளலாமருந்தினாற்குணத்தால், மூடிக்கலாம்பகையை யருணைநாயக
ர்பொன் விழுங்கினான் மிடற்றிலேபிடிக்கும்,உடற்குளே கனலும்
புகையுமவ்வுளத்தோ டுயிரையு முளத்தையுமொறுக்கும் .. .... *

(இதன் பொருள்.)

பின்னுஞ்சொல்வார் பிர்மா- கல்லைக்கடிக்கலாம் நெருப்பையெடுத்துவிழுங்கிவிடலாம்விஷத்தோடுகொல்லும்படியான வஸ்துக்களைச்சோத்துக்குழைத்தெடுத்துச்சாப்பிடலாம் இரும்பைப்புசிக்கலாம்கள்ளிப்பால்முதலியவற்றையுங்குடிக்கலாம் இவைகள் உபத்திரவஞ்செய்யவொட்டாமல் நல்லமருந்துகளாலே நிவர்த்தி பண்ணிக்கொள்ளலாம் அருணாசலேசுரர் திரவியத்தைச்சாப்பிட்ட வுடனே தொண்டையைப்பிடித்துக்கொள்ளும் தேகத்துக்குள்ளே நெருப்பாகக்கனற்றும் புகையுண்டாகும் அவ்வளவுதான்செய்யுமோவென்றால்அவர்கள்உயிரையுங்கொன்றுஉள்ளத்தையுங்கெடுக்கும் —எ-று

முக்கணார்பொருளைக்கவர்ந்தபேரிருக்கமுயன்றபேர் நினைத்
தபேர்முதலாயக்கலைதழிவரவர்களுமிருக்கவடியவாம்பொருள்கவ
ர்ந்தலைக்கத்,தக்கது நினைத்தார்கெடுவனென்றுரைத்துச் சத்தியம்பல
பல சாற்றிச்,செக்கருங்கருகவொளிவிடுமணிப்பூட் டிசைமுகனொ
ருகதை செப்பும் ..... .. .. — ... *

(இதன்பொருள்)

மூன்றுகண்களையுடைய அருணாசலேசுரரதுதிரவியத்தைத் திருடினவர்கள்படுகின்ற துன்பம் இப்படிப்பட்டது அது இருக்கட்டும்அந்தப்பொருளைத் திருடுகிறதற்கு முயற்சிசெய்தவர்கள்திருடநினைத்தவர்கள் இவர்கள் அந்தட்சணத்திலேயழிவார்கள்அவர்களுமிருக்கட்டும்சிவபத்தர்களுடைய பொருளைத்திருடி அவர்களைத் துன்பப்படுத்தநினைத்தபேர்களும் கெடுவர்கள் என்றுபலபல சத்தியத்தோடு சொல்லிச்செவ்வானமும் கருகும்படிஒளிவிடுகின்றாததிலபரணங்களைத்தரித்தபிர்மாவானவர் ஒருகதைசொல்லத்தொடங்கினார்—என்றவாறு ..... ..... .... (௩)

முன்னமேயொருநாள் வடதிசைக்கிறைவன் முழுமணிக்கங்கை
நீர்த்துறைவன்,இந்நிலத்திழிந்த விந்திரனேனையா ளுண்டகைமுருக
வேணிகர்வான், மன்னவர் நிரைத்தமகுடகோடிகளின்வயிரநாயகங்

ளாற் றேய்ந்த, பொன்னவிர்கழலான் றருமமூங்கழலான் புகழ்ப்
பெயர்பிரதத்தனென்பான் ... ..... ...*

(இதன்பொருள்)

பிரமாசொல்லுகிறார், முன்காலத்தில் ஒருநாள் வடதேயத்துக்கு ராசாவாயிருக்கிறவன் விலையுயர்ந்த முத்துக்களுக்கிருப்பிடமாகிய கங்காநதித்துறையுடையவன் தெய்வலோகத்தினின்றும் பூமியி லிறங்கியதேவேந்திரன்போன்றவன், ஆண்மைகுணத்தில் சுப்பிரமணியருக்குச்சமமானவன், ராசாக்கள் பணியும்போது அவர்களாலே நிரைநிரையாகத் தாழ்த்தப்பட்ட கிரீடகோடிகளில் இழைக்கப்பட்டிருக்கிற உயர்ந்தவயிரங்களாலே தேய்வுற்ற பொன்னாற்செய்யப்பட்ட வீரகழலுடையைத் தரித்தவன் தருமமென்பதை இடைவிடாது செய்கிறவன் கீர்த்திபொருந்திய பிரதத்தனென்னும் பெயரையுடையவன்—என்றவாறு (௫)

காலனோர்விழியார் முகமெனவிளங்கிக் களங்குடைத்தொழுக்கிய மதிபோல், நீலமாமணிக்காம்பமைந்த வெண்கவிகைநெடு நிலாப் பரப்பெலாநிகழ்த்தச், சாலவேபணியாவரசர்களிவன்பொற் சரணமேபடிந்துயிர் பெறுமென், றேலவேயழைக்குந் தருமதேவதைபோ லிரண்டுசாமரைகளார்த்திடவே ... .... ..... *

(இதன்பொருள்)

யமன்போலக்கொடுமையைச்செய்கின்றகண்களையுடைய பெண்களுடைய முகம்போலவிளங்கி களங்கத்தையுடைத்து ஒழுகவிட்ட சந்திரன்போல நீலரத்நமிழைத்திருக்கிற காம்பையுடைய வெள்ளைக்குடையானது நிலாவாகிய சந்திரிகையைப் பூமியின்பரப்பெல்லாம் நிகழ்த்தவும் மிகுந்தமரியாதையோடு பணியாத சத்துரு ராசாக்களைப்பார்த்து இந்த ராசனுடைய அழகியபாதங்களைவணங்கி உங்களுயிரை இறவாமற்பெற்றுக்கொள்ளுங்களென்று பொருந்தஅழைக்குந்தருமதேவதைபோல இரண்டுசாமரங்கள்வீசவும்—என்றவாறு

வருணமண்டலத்திற் புரவிபோற்கிளர்ந்தமரகதக்குரகதம்வயங்க, அருணமண்டலத்தையளாவிநீங் கொடித்தேரடவிகள்புடவியையடைப்ப, கிரணசிந்துரத்துப் புகர்முகமருப்பிற் கிம்புரிககரிநிரைகிளரத், தரணிபர்நயங்க மந்திரிகணத்தோ டெழுந்தனன் றண்டையாத்திரையே. ..... ... .... ...... .... *

(இதன்பொருள்.)

வருணமண்டலத்தில் விளங்குங் குதிரைகள்போல் உயர்வாகியமரகதநிறத்தையுடைய குதிரைகள்பிரகாசிக்கவும், சூரியமண்டலத்தை அளாவிய கொடிகள்கட்டியதேர்க்காடுகள் பூமியையடைக்கவும் கிரணம்பொருந்திய சித்திரந்தீட்டிய புள்ளிகளையுடைய முகத்தையு

ம்பூண்கட்டிய தந்தங்களையுமுடைய யானைகள் திசைகள்தோறும் பிரகாசிக்கவும், சத்துரு மன்னர்பயப்பட மந்திரிகூட்டத்தோடு ம்சேனைகளோடும் பிரயாணப் பட்டான் யாத்திரையாகப் பிரதத்த ராசன்—என்றவாறு . ... .. ... . (எ)

அங்கர்பூற்றேறயவனர்வெற்படையவந்தியர் விற்பிணங்கொள
ச்,சங்கிலித்தொடக்காட்பற்றுமண்டலிகர் தப்பிறை தாங்களேகு
மகச், சிங்கவேறனைவே சோழநாடணைவான் திருநதிகடந்துவிந
ன்றுனைக், கங்கைவாழ்சடையான் கோயிலிற்புகுந்தான் கங்கையு
ங்காசியுப்புரப்பான் .... ... ..... . .... *

(இதன்பொருள்)

இந்தப்பிரதத்தராசன் பிரயாணப்பட்டபோது அங்கதேயத்தாசர் பயந்து பற்றிலேறிக்கொள்ளவும், யவனதேயத்துராஜாக்கள் மலையிலொளித்துக்கொள்ளவும், அவந்திதேயத்தார் வில்லிலிருக்கிற நாணியைக் கவ்விக்கொள்ளவும், மற்றுமுள்ளதேயத்துராஜாக்கள் சங்கிலிபோலத்தொடர்ந்து நின்று தாங்கள் கட்டவேண்டியகப்பங்களைத்தாங்களேசுமந்துவரவும், ஆண் சிங்கம்போலச்சோழநாட்டிற்குப்போகும்படியாகப் புறப்பட்டு திருநதியைத்தாண்டி அழகிய அருணசலஸ்தலத்துச்சேர்ந்து கங்கையைத் தரித்த சடையையுடைய பரமசிவனது கோயிலிற்புகுந்தான், கங்காநதியையும் காசிதேயத்தையும் ஆளுகிற பிரதத்தராசன்—என்றவாறு (அ)

அருப்பவிழ் மலர்கொண்டருச்சனைபுரிய வருணைநாயகர் திருக்
கோயில், விரும்பியுட்புகுந்துபணியுமவ்விடத்தில் விடத்திலுங்
கொடிய கூர்விழியாள், இருபதையுமுருக்கு மிசையிழுமொருத்தி
யிலங்கிழையாருடனிறைபாவ், கரும்படுமொழியாற்பாடுதல்கே
ட்டான்கணைமலர்வளைத்தவேள்கரும்பனை..... . .. *

(இதன்பொருள்)

காசிதேயத்துராஜாவாகிய பிரதத்தன், அரும்புகள் மலர்ந்த புஷ்பங்களைக்கொண்டு அர்ச்சனைபண்ணுகிறதற்காக அருணாசலேசுரர் வீற்றிருக்கும திருக்கோயிலுள் பக்தியோடேபோய் வந்தனஞ்செய்யும்போது அவ்விடத்திலே விஷத்திலுங் கொடுமைசெய்கின்ற கூர்மையாகியகண்களையுடையவள் இருபாதங்கட உருகும்படிசெய்யும் சங்கீதவித்தையை யுடையவளாகிய ஒரு தாசிப்பெண் பிரகாசிக்கின்ற ஆபரணங்களைத்தரித்த சிலபெண்களோடுநின்று சுவைநிறைந்தயாழும் கரும்பின் ரசமும்போன்ற மொழியினாலே பாடுகிறதைக் கேட்டான் அந்தச்சமயத்திலே தாமரைமலர்மதன் வளைத்த கரும்புவில்லையுங் கண்டான்காமவிகாரங்கொண்டபிரதத்தராசன்—என்றவாறு .. (கூ)

அன்னமோ கிளியோ மயிலதோ திருவோ வடிதயல நமரு
க்கவிதை, வன்னமோ கிளியோ விரதியோ பிரமன்மனத்திருக்கு ம

குத்தமேனகையோ,என்னமோகமதாய்த் தனதுநாட்டினிற் கொண்டேகுவா னினைந்தனனதற்கு, முன்னமேகுரங்கு முகமதாயிருந் தான்மூவனுலாயினதேவர்முகமும் ... ... ..... *

(இதன்பொருள்)

காசிதேயத்து பிரதத்தராஜனென்பவன் அந்தத்தாசிப்பெண்ணைப் பார்த்துச்சொல்வான், இவள்அன்னமோ,கிளியோ,தேவாமிர்தமோ, லட்சுமியோ, அசுரரைக்கொன்று அமிர்தத்தை முன்காலத்தில்தேவருக்குக்கொடுத்த அழகாகியமோகினியோ,ரதிதேவியோ,பிர்மதேவன் மனத்தினால்சிருஷ்டித்த மேனகையோ,என்று நினைத்துமோகத்தோடுதன்னுடைய தேயத்துக்கு அந்தப்பெண்ணைக்கொண்டு போகிறதற்கு நினைத்தான், அந்தநினைப்பு உண்டாகு முன்னமே தானேகுரங்குமுகத்தையுடையவனாயிருந்தான் அதைக்கண்டேஎல்லாரும்நகைத்தார்கள்—என்றவாறு ..... ..... (௰)

மந்திரிக்கிழவராசனை வினவிமன்னவா நினைத்தவாறதனால்- வந்தவித்துயரந் தவிர்ந்திடமலைமேன்மருந்தினைப்பணிமெனவுன்னுஞ், சிந்துரக்குவடுங் கவனவாம் பரியுஞ் செழுமணிச் சிவிகையுந்தேரும், சந்தனமணியுந் தனத்தினார்பலருந் தமணியக் கோயின் முன்விடுத்தான் .... ... ... ... ...*

(இதன்பொருள்)

மந்திரிமார்கள் பிரதத்தராசனைப்பார்த்துக் குரங்குமுகம்வந்ததற்சக் காரணங்கேட்டறிந்துகொண்டு அரசனேதீமையாகிய உனது நினைப்பினால் அடைந்த இத்துன்பம் நீங்கும்படி மலைமேலே மருந்தாகிய அருணாசலேசுரனைவணங்கென்று சொல்லஅந்தராசனும்மலைபோத்தயானைகளையும் வேகமாகத்தாவுகின்ற குதிரைகளையும்- நல்லரத்தினங்களால் இழைக்கப்பட்டிருக்கிற பல்லக்குகளையும்-தேர்களையும்,சந்தனக்குழம்பைப் பூசுகின்றஸ்தனங்களை யுடையபெண்களையும் பொற்பிரகாசம் பொருந்தியஅந்தக்கோயிலுக்குமுன்காணிக்கையாகக்கொடுத்துவிட்டான—எ,று... ... (௰௧)

பன்னரு மனந்தம் பூசனைபுரிந் தான்பரமனு மவற்கருள் புரிந்தான்,மென்மொழியாள்விருப்பினாலடைந்த கிலேசவானரமுகமொழிந்தான்,நன்னரமுகம்பெற்றிறையுநாடணைந்தானுதலாலரன் பொருட்கவர,வுன்னியபாவம்பதின்மடங்கரும்பொன் னுதவினுற் றவிருமென்றுரைத்தான்... ..... ... ..... *

(இதன்பொருள்)

பிரதத்தராசன் சுவாமிக்குச்சொல்லுதற்கரிய அனந்தம் அருமையான பூசைகள் செய்தான் ,அப்பொழுதுசுவாமியும் அந்தராசனு

க்குக்கிருபைசெய்தார், வீணையினிசைபோலும்வார்த்தையையுடையபெண்மேற்கொண்டஆசையினால்அடைந்ததுன்பம்பொருந்தியகுரங்குமுகத்தையொழிந்தான், நல்லமானிடமுகத்தையடைந்து அந்தராசன்தன்னுடையநாட்டுக்குப்போய்ச்சேர்ந்தான் ஆனபடியினாலேஅருணாசலேசுரருடைய பொருளைத்திருட நினைத்ததனாலுண்டாகியபாவம அப்பொருளுக்குப் பதின்மடங்கு திரவியங்கொடுத்தால் தீருமென்று சொன்னார்பிர்மா—என்றவாறு. (௰௨)

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

மாதவனையருணகிரி வலமிதுதானெனத்திருவாய்மலர்ந்தானந்தப், போதனையங்கடிபணிந்துன்போதனையான் மகிழ்ந்தனமிப்புவியினமீதே, கோதமுடன்றிந்துசெய்த பவந்தவிருங் கதையினையுங்கூறுகென்றான், மூதறிவா யினனாலு முகத்தினுமா யிரமுகமாய்மொழியலுற்றான். ..... ... ..... ..... *

(இதன்பொருள்)

மகத்தாகிய தவத்தையுடையசனகரிஷியே அருணாசலத்தினது வலம் இதுதானென்றுசொன்னார் அந்தப்பிர்மாவை அவ்விடத்தில்சனகரிஷியானவர் வந்தனஞ்செய்து உம்முடையபோதனையினாலே ஆனந்தத்தையடைந்தேன், இந்தலோகத்தில் குற்றமாகஅறிந்துசெய்தபாவம் நீங்கும்படியானகதையையும் அருள்செய்யவேண்டுமென்றார், பேரறிவுகொண்டபிர்மாவானவர் தம்முடைய வாய் நான்கும் ஆயிரம்வாயாகச் சொல்லத்தொடங்கினார்— என்றவாறு, (௰௩)

பத்தாவது

பிரதத்தசருக்

முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம் — ௪௱௪





சிவமயம்

# பாவந்தீர்த்தசருக்கம்



[கலிவிருத்தம்.]

வாக்கினல்வடிவினன் மனத்தினல்பவந் ........ *
தாக்கினோ ரருணைமாசயிலநோக்கினு ........ *
நீக்கினரென்பதுநிசமந்திநான்மறை ........ *
தேக்கினன்சிலகதைசெப்பலாயினன் ........ *

[இதன்பொருள்.]

வாக்கினாலும், தேகத்தினாலும், மனத்தினாலும், தூர்விஷயங்களைச்சொல்லியும் செய்தும் நினைத்தும் பாவத்தையடைந்தவர்கள். திருவண்ணாமலையைத் தரிசனஞ்செய்தால் அப்பொழுதே தங்கள்பாவத்தை நீக்குவார்களென்றுசொல்லி நான்குவேதங்களையுந்தன்னிடத்திலுடைய பிர்மாவானவர் சிலகதைகளைச் சொல்லத் தொடங்கினார்—என்றவாறு. (க)

[அறுசீரடிஆசிரியவிருத்தம்.]

எம்பெரியசபையிடத்திலீருநாலுவசுக்களும்வந் திருந்தார்முன்னை, தம்பெரியதவத்தினையும் புகழினையும்வியந்துரைத்த தகைமை நோக்கிக், கும்பமுனி முதலவர்களிடையிலுமை வியந்துரைத்தகொள்கையாலே, அட்டவியல்வினைமூத்ததவ டனைத்தினையுமவமாக்கி யகற்றுமென்றேன் ........ *

[இதன்பொருள்.]

என்னுடையபெரியசபையினிடத்தில் அட்டவசுக்களும்முன்னொருகாலத்தில் வந்திருந்தார்கள், அப்பொழுது அவர்கள் தங்களு

டைய தபசின்பெருமையையும், அதனால்வந்தகீர்த்தியையும் கொண்டாடிச் சந்தோஷித்தார்கள், அதைப்பார்த்து அகஸ்தியர் முதலான ரிஷிகள்மத்தியிலே உங்களை நீங்களே புகழ்ந்து சொல்லிய கெறுவத்தினாலே அக்குற்றம் பூமியில்செய்த தவமெல்லாம் அவமாகச் செய்து விடுமென்று சொன்னேன்—என்றவாறு (௨)

உற்றபெருந் தவத்தினையுந் தமதறத்தி னலத்தினையு முரைத்தபேரு, மற்றொருவர் தமையிகழ்ந்த வருந்துயரக் கடன்மூழ்கி மீதிவரொணறேன், சிற்றறிவா கியவசுக்க ளனைவர்களு நயங்கியிது தீருங்காலஞ், சொற்றருளு கெனவுரைத்தா ரானருளாற் றிருமூங்கமியர் தானென்றேன், .....

(இதன்பொருள்)

பெருமைபொருந்திய தம்முடையதவத்தையும், செய்ததருமத்தையும் சொன்னவர்களும், மற்றொருவரை யிகழ்ந்து பேசினவர்களும் துக்கசமுத்திரத்தில்முழுகி மறிபட்டுக் கிடப்பார்களென்றேன் சிற்றறிவையுடைய அட்ட வசுகளும் அந்தவார்த்தையைக்கேட்டு நயங்கி இந்தசாபம் எந்தக்காலத்திலே தீரும் அருள்செய்ய வேண்டுமென்று கேட்டார்கள், பரமசிவன் கிருபை உங்களுக்கு எப்பொழுதுக்கு கிடைக்கிறதோ அன்றைக்குத் தீருமென்றேன்—என்றவாறு

செல்லுமாலும் வசுக்களெலா மெனையகன்று நெடியகங்கைத் துறையிமலங்,எல்லையிலா நெடுங்கால மிறையை நினைந்தரிய தவமியற்றினார்கள், வலவிடங்க னொருநாளின் மழவிடைமே லடைந்துசவும் வரமேதென்றான், அல்லிமலர வன்கொடுத்த கொடுஞ்சாபக் கடவிலெடுத் தருளுகென்றார் .... .... .. ... *

[இ-ள்] அப்படிச்சொன்னவுடனே வசுக்களெல்லாரும்என்னுடைய சபையைவிட்டு நெடுந்தூரஞ்செல்லுகின்ற கங்காநதியினது துறையிற்போய் அளவில்லாத காலம்பரமசிவனை நினைத்து அரிதாகியதவத்தைச்செய்தார்கள் பார்ப்பதியைவாமபாகத்தில் வைத்துக்கொண்ட அந்தச்சுவாமியானவர் ஒருநாள் இளமையுற்ற ரிஷபவாகனத்தில் எழுந்தருளிவந்து நாம் உங்களுக்குக் கொடுக்கவேண்டிய வரமென்னவென்று கேட்டருள்செய்தார் அந்தவசுக்கள் அகவிதழினையுடைய தாமரைமலரிலிருக்கிற பிர்மாவானவர்கொடுத்த கொடியசாபமாகிய கடலில்நின்றும், எங்களை எடுத்தருளவேண்டுமென்றார்கள்—என்றவாறு. (௩)

கருணைமுகின் முகமலர்ந்து வசுக்களுட னுமதுபவங் கடக்கவேண்டில்,தரணியிலே யொருநகரந் தமலச்சுரமென் றிலங்குமகத்தலத்தின்மீதே,அருணகிரிமப்புமலையா யிருக்குமதைப் பணியலுழியசலஞ்சூழ்ந்த,வருணதிசைதொடங்கியெட்டுத்திசைகளிலுமிருந்துதவ மியற்றுமென்றார்.

(இதன்பொருள்)

கிருபாவருஷித்தைப்பொழிகிறமேகமாகியபரமசிவனானவர்திரு வுளமகிழ்ந்து அந்தவசுக்களைப்பார்த்து உங்களுடையபாவத்தைநீங் கள் கடக்கவேண்டினால் பூமியில் தலைச்சரமென்று ஒருதிவ்வியஸ் தலம் விளங்குகின்றது அந்தஸ்தலத்தில்அருணாசலமென்று ஒருமலை யிருக்கும் அந்தஸ்தலத்தையடைந்து அந்தமலையைச்சூழ்ந்த கிழக் குத்திக்குத்தொடங்கி எட்டுத்திக்குகளிலு மிருந்து தவஞ்செய்யுங் களென்றருளிச்செய்தார்—என்றவாறு. (௩)

அன்னவயலருணையில்சி ரியதவமியற்றிமெய்வளவேயுங்கள், மு ன்னரழற்கிரியும்மெட்டு முகமாகவிளங்கியட்டமூர்த்தியாகு, மன்னு மூங்க ளரும்பவமுந் தவிருமென வுரைத்துவெள்ளி மலைபிற்சேர்ந் தான், தன்னையுடைந் தவர்களெலாந் தனைப்போல விருக்கவரந் தருகுவானே... ..... ..... ..... ..... .. .. *

(இதன்பொருள்)

அன்னப்பட்சிகள்தங்கிய வயல்சூழ்ந்தஅருணாசலஸ்தலத்திற்சுட் போய் நீங்கள் அரியதவத்தைச்செய்யுங்கள்அப்படிச்செய்த அளவி லே அக்கினிஸ்வரூபமாய் விளங்கிய ஒப்பற்றஅந்தமலையானதுஉங் களுக்கு முன்பாக எட்டுமுகமாய்க்காட்சிகொடுக்கும் அப்போது நிலைபெற்ற உங்களுடையபாவமும் நீங்குமென்று திருவாய் மலர்ந் து கைலாயத்துக்கு எழுந்தருளினார் தம்மிடத்திலடைந்தவர்களெல் லாரையும் தம்மைப்போல உருவத்தை யடைந்திருக்க வரமருளிச் செய்கிறபரமசிவன்—என்றவாறு (௪)

மூந்தவசுரரையுமவர் புரத்தினையு மெரித்தபிரான் மொழிந்தவா றே, அந்தவசுவனைவருஞ்சென் றருணையிலேயரியதவமியற்றினர்க, ளித்தவசுமதிதழைககலழற்கிரியெட்டுருவாகியிருந்ததங்கே, தந்தவ ஞ்திலேபுகழ்ந்தகொடுஞ்சாபக்கிரிகளெலாந்தள்ளினார்கள்... .. *

(இதன்பொருள்,)

முன்பு அசுரர்களையும் அவர்கள் வாசஞ்செய்து கொண்டிருந்த திரிபுரங்களையும் நகைத்தெரித்த சுவாமியானவர்அருளிச்செய்தபிர காரமேஅந்தஅட்டவசுக்களும்போய் அருணாசலத்தில் அருமையாகி யதவத்தைச்செய்தார்கள் இந்தப்பூமியானது தழைக்கும்படி அக்கி னிமலைஎட்டுமுகமாய்விளங்கியிருந்தது முன்னே தங்களுடைய தவ த்தைப் புகழ்ந்துசொல்லியதனால்வந்தகொடியசாபமென்று சொல் லப்பட்டமலையைத்தாண்டிவிட்டார்கள் அவ்விடத்தில்—என்றவாறு

பூதரஞ்சூழ்திசைகளெலா மிருந்தஷ்டமூர்த்திதனைப்பூசித்தா ர்களாதலின்முற்பழையபடிதமதுபத விகளையடைந்தருள்பெற்றார் க, வேதமறும்படிக்கரிய மறைப்பய னெட்டுருவாகி யிருந்தபோ

று, சிதாஷம்பதங்கிரமத்துடனறியான் முடியெனக்குந் தெரி
ந்ததன்றே ... ... ... ... ...*

[இதன்பொருள்]

அந்தமலையைச் சூழ்ந்தஎட்டுத் திக்குகளிலு மிருந்து வசுக்கள் அஷ்டமூர்த்தமாகிய சுவாமியை பூசித்தபடியினாலேபழையபடி யேதமதுபதவிகளைப்பெற்றுக்கொண்டு சுவாமியினதுகிருபையும் பெற்றார்கள் சுற்றநீங்கும்படி அருமையானவேதப்பொருளாகிய அந்தச சுவாமியானவர் எட்டுமுகமாயிருந்தபோதும் விஷ்ணுவும் இருவழியைக்கிரமத்துடனே அறியாமற்போனார் எனக்கும் முடி தெரியவில்லை—என்றவாறு ... ... (அ)

சன்முகனேயளித்தவைந்து முகத்தவனென்வசுக்கள்செயுந்தவத்
திருமே, என்முகமாயிருந்த துகண்டொருமுகமா யிமையவர்வாழ்த்
தெடுத்தாமென்று, தன்முகத னுடையபிரான்சனகமுனிக ளுனா
தருளச்சாயிலைத்தாமேட, பனைமுகயா ழ்னையமொழித் திலோத்தமை
சேர்கதியினையும் பகரலுற்றான் ... ... *

(இதன்பொருள்.)

சுப்பிரமணியனைப்பெற்ற பரமசிவனானவர் எட்டு வசுக்களுஞ் செய்ததபோபலத்தினாலே எட்டுமுகமாயிருந்ததைப்பார்த்துத்தேவர்களெல்லாரும் ஒன்றாய்க்கூடிவணங்கிப் பல்லாண்டுகூறினார்களென்று கருதிஒருமுகமாக இருந்து பொருந்திய நான்குமுகங்களையுடைய பிர்மாவானவர் சனகரிஷிகளுக்குச்சொல்லி அருள்புரிகின்ற அந்தத்திருமலையில் யாழினது இசைபோன்றவார்த்தையுடைய திலோத்தமையென்பவள் அடைந்தகதையையுஞ்சொல்லதொடங்கினார்—என்றவாறு (க)

[கலிவிருத்தம்]

தேவர்கோன்முன்னமென் னிடத்திற்சேர்ந்துதன் *
பாவனமானதன் பதவிவேண்டியே .... ... *
யாவருமருந்தவ மியற்றிறுரவற் ... ... .... *
காவதுசெய்யென வுரைத்துப்போயினன் *

(இதன்பொருள்)

பிர்மாசொல்வார் தேவேந்திரன் முன்னேயென்னிடத்தில்வந்து தன்னுடைய பரிசுத்தமானபதவியைஇச்சித்துஎல்லாரும் அருமையான தவத்தைச்செய்கிறார்கள் அந்தத்தவசு நிறைவேறாதபடிக்குஏதாவது ஒருவிக்கினத்தைச் செய்யவேண்டுமென்று சொல்லிவிட்டுப்போனான்—என்றவாறு. (உ)

இந்திரன்போனபின் னியக்கமங்கைய ... *
ரந்தரமங்கைய ரரவைநாட்டவர் ... ... *
சுந்தரக்கடற்புவித் தோகைமார்வரா ..... *
மந்தரமுலைச்சிய ரழகுவாரியே ... ..... *

(இதன்பொருள்.)

தேவேந்திரன் போனபிற்பாடு யட்சலோகத்துப்பெண்கள், தெய்வலோகத்துப்பெண்கள், நாகலோகத்துப்பெண்கள், அழகு பொருந்திய கடல்சூழ்ந்த பூலோகத்திலுள்ள பெண்கள், மந்தரகிரி போன்ற முலைகளையுடைய வளையகரமகளிர் இவர்களுடைய அழகு எடுத்துக்கொண்டு—என்றவாறு. (௯௧)

வகுத்தனன் திலோத்தமை யென்னும்வஞ்சியை... ... *
புகுத்தனன் வ்விளையதன் மதியையோட்டினன் ... *
மிகுத்ததோர்கிஞ்சையிற் புலியின்வேட்டுவ ... *
னகத்துடலழித்துட லளிப்பதென்னவே ..... ..... *

(இதன்பொருள்)

குளவியானது தன்னிடத்திலுள்ள ஒருசாமர்த்திய விசேஷத்திலே புழுவினது உடலைக்கெடுத்து அதற்குவேறங்கத்தை கொடுப்பதுபோலத் திலோத்தமையென்னும்பெண்ணை உண்டாக்கினேன் அப்பொழுதே அவள்மேற்கொண்ட ஆசையால என்னுடைய வல்லமையை இழந்தேன் ஞாயத்திற்செல்லுகின்ற என்னுடைய புகழியையுந் துரத்திவிட்டேன்—என்றவாறு, (௯௨)

மன்மதன்கணையினுன் மயங்கிவாடுமென் .. ..... *
றன்மையையறிந்துநான் றனக்குத்தாதையென் ..... *
றென்மனம்பொருந்திலா தெனதுகையுறாண் . ...... *
றுமன்பினியொளிக்கநான் முகமுந்தேடினேன் .... .... *

(இதன்பொருள்)

மன்மதனுடையபாணத்திலலே மயக்கத்தையடைந்து வாடுகிற என்னுடைய இயல்பையறிந்து நான்தனக்குத் தகப்பனென்று என்கருத்துக்கு ஒவ்வாதவளாகியும் நான்பிடிக்கும்போது என்கைக்கு அகப்படாதவளாகியும் எனக்குமுன்னின்றும் ஓரிடத்தில்தானோடி ஒளித்துக்கொள்ள நான்குபக்கங்களிலும் அவளைத்தேடினேன்—என்றவாறு (௯௩)

[அறுசீரடிஆசிரியவிருத்தம்]

கன்னிமானாகச்சென்றாள் கலையதாய்த்தொடர்ந்தேன்பேட்டு ... *
க்கிளியாய்ப்பறந்தாள்சேவல் வடிவமாய்த்தொடர்ந்தேன்மங்கை *
பின்னேயோர்கதியுங்காணாள் பிறங்கலாமருணைநாதன் ... *
றன்னையேயாரக்கண்டாள் சரணமென்றுணைத்துச்சார்ந்தாள் *

(இதன்பொருள்)

அப்படிநான்தேடி அவளைக்கண்டுபிடிக்கும்போது பிடிக்கிறதற்குமுன்னே பெண்மானாகி ஓடினாள் நான் கலைமானாகித்தொடர்ந்தேன், அதன்பின்பெண்கிளியாய்ப்பறந்தாள் நான் ஆண்கிளியாய்ப் பறந்து தொடர்ந்தேன் அந்தத்திலோத்தமையானவள்பிற்பாடுஎன்

கையிலகப்படாமலிருக்கிறதற்குவேறொருகதியுங்காணாமல்வருந்து
ம்போது மலையுருவமாகிய அருணசைலேசுரனைக்கொஞ்சதூரத்திற்க
ண்டு நீயே தஞ்சமென்றுசொல்லி அடைந்தாள்—என்றவாறு (௰௪)

மாயமால்விடையின்பாகர் வடிவிலாவிடையின்பாகர் .... *
காய்மலானமெய்யர் கானகத்தாடுமையர் ... ..... .... *
ஆயுமாரணத்தின்சோதி யடைக்கலமென்று ளையன் ..... *
சேயிளமழலைபோலத்திருச்செவிசாத்தினானே ..... ..... *

(இதன்பொருள்)

மாயஞ்செய்கின்ற விஷ்ணுவாகிய ரிஷபத்தின்மேல்வருகின்றவ
ரோ? கொஞ்சமாவது இடுப்பில்லாத பார்ப்பதியைப்பாகத்தில்வை
த்துக்கொண்டிருக்கிறவரோ? தகிக்கின்றநெருப்புநிறமாகிய சரீரத்
தையுடையவரோ! திருவாலங்காட்டினிடத்தில நடனஞ்செய்த சுவா
மியே? ஆராய்ந்துதேடுகிறவேதத்தையுடையசோதியே? நானடை
க்கலமென்றுசகலரையும் ஆளுகின்ற பரமசிவனது திருச்செவிசாத்தி
சொல்லும்படி குழந்தையினது இளமையாகியகுதலைச்சொல்லைப்
போலச்சொன்னாள்—என்றவாறு ..... .. (௰௫)

முருகலர்க்குழலினுடன் முறையிடுமுறைக்கெண்ணையன் ... *
திருவுருவனைத்துந்தாய செவிகளாயிருந்தபோது ... ... *
வினைவின்மால்வலையைக்கிழி வேட்டுவனாகிநாலு ..... *
சுருதியுஞ்ஞமலியாகத் தோன்றினன் றோகைபாகன் ... ... *

(இதன்பொருள்)

வாசனைபொருந்திய புஷ்பமாலையையணிந்த கூந்தலையுடையதி
லோத்தமையினது முறையிடுதலுக்கு எங்குமாயினது அழகிய
உருவமெல்லாம் செவிகளாயிருந்தன அதனால்சீக்கிரத்தில்மலையை
க்கிழி அதில்நின்றும்தாம்வேடரூபமாகவும் நாலுவேதங்களும் நா
ய்களாகவும் தோன்றினார் பார்ப்பதியையிடப்பாகத்தில்வைத்துக்
கொண்ட பரமசிவன்—என்றவாறு ... .... (௰௬)

சூடகச்செங்கைபாகன் சிலையொடுதோன்றும்போதில் ... *
வாடியமருங்குலாண்மேன்மயக்கமும்வருத்தந்தீர்த்தே .... *
நாடியபெருமானம்மைமுனியுமென்றஞ்சித்தாழ்ந்தேன் .... *
வேடனைப்பறவைகண்டால்வெருவுமோவெருவுறாதோ ... *

(இதன்பொருள்)

வளையலையணிந்த கையையுடைய பார்ப்பதியை ஒருபக்கத்தில்
வைத்துக் கொண்டிருக்கிறபரமசிவன் வேடனாகி வில்லைக்கையிலே
யேந்திக்கொண்டு தோன்றியபோது முன்னேநடனஞ்செய்த சுவா
மியானவர் என்னைக்கோபித்துக் கொள்வாரென்று பயந்து வளைகி
ன்ற இடுப்பினையுடைய திலோத்தமையின்மேலுண்டாகியமையலை
யும்அதனாலுண்டாகிய வருத்தமுந் தீர்த்து அந்தச்சுவாமியையங்ஙனே

ங்கினேன் வேடனைப் பட்சிகண்டால் பயப்படுமோ பயப்படா
தோ—என்றவாறு ... ... ... ... .. (௰எ)

வெற்பெனு மலையா டன்னை விதித்து நீவிரும்புந் தீமை *
கற்பகோடியினுந் தீராதாயினுங் கருணையாமித் ... ...*
தற்பரமலைகண்டாய் யாதலாற்றவிர்த்தோம் பாவென் .... *
றற்புதம் மொழிந்து மீளப்புகுந்தன னருணை வெற்பில் ... *

(இதன்பொருள்)

மலைக்குநிகராகிய ஸ்தனத்தையுடைய திலோத்தமையைப் படை
த்து நீயே விரும்புதலா லுண்டாகிய பாவமானது கற்பகோடிகாலத்
திலுந்தீரமாட்டாது ஆனாலும் அருணருவமாகியுந் தானேபரமாகி
யுமுள்ள இந்தமலையைத் தரிசித்தாயாதலால் அப்படிப்பட்டபாவ
த்தைத் தீர்த்துவிட்டோம் உன்னிடத்திற்குப் போவென்று திருவாய்
மலர்ந்து அம்மலைக்குள் சுவாமியானவர் மறைந்துவிட்டார் என்-று (௰அ)

[கலிவிருத்தம்]

தன்னையறியாமல் வினைசாருமுடருறுந் ... .... *
தென்னருணைசேரிலது தீருவதுதிண்ணை ..... ..... *
மின்னல்வினையற்றதனிலெண்ணியது பெற்றார் ... *
முன்னமுளதொன்றையன் முனிக்குமொழிகின்றான் *

(இதன்பொருள்)

ஒருவனுக்கு அபுத்தி பூர்வமாகவந்தபாவமானது அவன் அழகு
பொருந்திய அருணாசலத்தையடைந்தால் தீரும் அது நிச்சயமே மூ
ன்றுகாலத்திலும் அநேகர் தங்களுடையவினைகளை நீக்கி அந்தஸ்தலத்
தில் தாங்கள் நினைத்தவரத்தைப்பெற்றுக்கொண்டார்களென்று பிர
மாவானவர் சனகரிஷிக்கு ஒருகதைசொல்லுகிறார் என்றவாறு (௰௯)

கற்பமுடிவாயிருள் பெயர்ந்தபுலர்காலத் ..... .. *
தற்பவிருணின்றதுமுன் ஞளி றையினாலே ... ...*
சொற்பரவைமாயனுணராது துயில்கொள்ளச் ..... *
சிற்பரமயோகியர்கள் செம்மலைநினைந்தார் ..... *

(இதன்பொருள்)

முன்காலத்தில் பரமசிவனுடைய திருவிளையாட்டினாலே கற்பகா
லமானது முடிவுற்றுமகத்தாகிய அந்தகாரமானது நீங்கி வெளிச்ச
முண்டாகிறகாலத்தில் அந்த அந்தகாரத்திற் கொஞ்சம் நின்றது அக்
காலத்தில் இதனையறியாமல் விஷ்ணுவானவர் சமுத்திரத்தில் நித்தி
ரைசெய்துகொண்டிருக்க மேன்மை பொருந்திய சின்மயமாகிய
யோகியர்கள் பரமசிவனை நினைத்தார்கள்—என்றவாறு... .... (உ௰)

அத்தனடியார்கடமதாணவமறுக்குஞ் ..... *
சுத்தனழலானதொருசோதிவடிவானோ ..... ... .. *

னைத்தலமுமெத்திசையு மெங்கும்வெளியாநே ... *
றைய்த்தபொறிதம்மிலுள வாயவுலகெல்லாம்... ...*

[இ-ள்] எல்லாச்சிவராசிகளுக்கும்பிதாவாயும், தமதடியார்களுடைய ஆணவமலத்தைக்கெடுக்கின்றகர்த்தாராகியுமிருக்கின்றபரமசிவன்நெருப்புமயமாகிய ஒருஜோதிரூபத்தை யடைந்தார் எந்தஸ்தலங்களிலும் எந்தத்திக்குகளிலும் மற்ற எந்தவிடங்களிலும்ஆகாயமேதமக்குஉருவமாகிய அந்தச்சுவாமியானவர் அப்போதுசிந்தியபொறிகளாலே உலகமெல்லாம் உண்டானதுகள்—என்றவாறு (உக)

ஊழிமுடிவாயிருள் புலர்ந்துமுணராதே ... *
யாழிமிசையிற்றுயிலு மச்சுதனையெய்தி ... *
வாழியெனயோகிய ரொழுப்புதலுமாயன்... ... *
பாழியிலுநின்றதி பயத்துடனெழுந்தான் ... *

[இ-ள்] ஊழிகாலமுடிந்துமகத்தாகிய அந்தகாரம்நீங்கியும்அறியாமல் சமுத்திரத்தில் நித்திரைசெய்கின்ற விஷ்ணுவினிடத்தில்வந்துவாழியென்றுசொல்லி யோகியர்கள்எழுப்புதலும் அந்தவிஷ்ணுவானவர்சர்ப்பசயனத்தில்நின்றும் அதிகபயத்துடனெழுந்திருந்தார்()

வையகமளிக்கமல ரோனையுதவாதே ... ... *
பையரவின்மிக்கதுயில் கொண்டபரிசாலே ... *
வெய்யபுன்வினைத்தொழில் விளைத்தனனெனத்தன் .. *
றையுணர்வுமஞ்சியென தையனைநினைந்தான்... .. *

(இதன்பொருள்)

உலகத்தையுண்டாக்கும்பொருட்டுபிரமாவைச்சிருஷ்டிக்காமல்படத்தையுடையபாம்பின்மேல்நித்திரைசெய்ததன்மையாலேவெம்மையாகிய புண்ணியதீவினையைச் சம்பாதித்துக்கொண்டேனென்று ஐம்பொறியுங்கலங்கிஎன்னுடைய ஆண்டவருகியசுவாமியைநினைத்தார்.

அன்பர்கருதிற்கடுமை யாகியெதிர்வந்தே ... *
துன்பமகல்விக்குமது தூயதொழிலானோன் ..... ...*
வன்படிகவெற்புமிசை மன்னுசுடர்போலே ..... *
மின்படருமேனியுடன் வெள்விடையில்வந்தான்... *

(இதன்பொருள்)

அடியார்கள் நினைத்தால் சீக்கிரத்தில்தானே அவர்களுக்குஎதிராகத்தோன்றித் துன்பத்தைநீக்குவதே தமக்குப்பரிசுத்தமாகியதொழிலாகக்கொண்டபரமசிவனானவர் வலிமையாகிய ஸ்படிகமலையின்மேல்விளங்குகின்றசோதிபோலவெண்மையாகிய ரிஷபத்தின்மேல் மின்போன்றநிறத்தோடு எழுந்தருளிவந்தார்—என்றவாறு. (உச)

பெருக்கெனவெழுந்தடி பணிந்தருள்புகழ்ந்தே ... *
யருக்கியமுதற்புரி யருச்சனையினுமேலே... ..... *.

யுருக்கியென்வினைத்தொடரொழித்தருடியென்று ..... *
னெருக்கணிகுவானிவையெடுத்துமொழிகின்றான்... .... *

(இதன்பொருள்)

அப்படிப்பரமசிவன் ரிஷபவாகனத்தில் எழுந்தருளி வந்தவுடனே விஷ்ணுவானவர் சீக்கிரத்தில் எழுந்து திருவடிக்கமலங்களுக்குவந்தனஞ்செய்து அவருடைய திவ்வியகிருபையைப்புகழ்ந்து அர்க்கியமுதலியபூசைகளினலேசுவாமியினுடைய திருவுள்ளத்தை இளகச்செய்து எனக்குநித்திரையினால் வந்தவினையைநீக்கி அருள்செய்யவேண்டுமென்றார் எருக்கப்பூமாலையைத்தரிக்கின்ற சுவாமியானவர் இவைகளைச் சொல்லத்தொடங்கினர்—என்றவாறு (உ௫)

வாசிமகமேமுதன்மகம்பலசெய் தாலும்... ... ... ...*
பாசமகலாதவினை டற்றறுதலெண்ணித்... ... ... .. *
தேசுமிகு தென் றிசைசெறிந்தருணைதனி ற்... ... ...*
பூசைபுரிவிட்டு வினைபோகுமுனையென்றான்... ... ... *

(இதன்பொருள்)

ஒருவன்றனக்குண்டாகிய பாசவினையை நீக்கும்படியாகநினைத்து அசுவமேத முதலிய பல யாகங்களைச்செய்தாலும் அதுபோகாது அப்படியினலே சோதிமயமாகிய தெற்குத்திசையில்விளங்காநின்ற அருணாசலத்திற்போய் பூசைசெய்தால் உன்னைவிட்டு வினையானது போகும் என்றார்பரமசிவன்—என்றவாறு. (உ௬)

நாறுபொழி ற்நகரு நாமும்வடிவொன்றே .... ..... *
வேறலவதன்பெருமை வேதமுணராதால் . .... *
நீறபுனையோகியர்க ணிவிர்பலர்தொண்ணூற் .... ..... *
றாறுபிரமாவுதி லருச்சனைபுரிந்தீர்... ... ... *

(இதன்பொருள்.)

வாசனையுடைய சோலைகள்சூழ்ந்த அந்த அருணாசலத்திற்கும் எமக்கும்வடிவும் ஒன்றுதான் பேதமன்று அதனுடைய பெருமையை வேதங்கள்கூட அறியாதுகள் விபூதியை முக்கியமாகத்தரிக்கின்ற யோகியர்களும் விஷ்ணுக்களாகிய நீங்கள்பலரும் தொண்ணூற்றாறுபிரமாக்களும் அந்தஸ்தலத்தில்பூசைசெய்தீர்கள்—என்றவாறு()

முற்றிழையுரோகணி முலைக்கிடையின் மூழ்கா .... ... *
மற்றவிருபத்தறுவர் வாழ்வையுமறந்தான்... .... *
கற்றைமதிதக்கனுடல் கன்றுறச்சபித்தான்... ... *
சுற்றமதுயப்பதியி லத்துயரொழித்தான் .... ..... *

[இதன்பொருள்.]

சந்திரனானவன் நன்றாகவேலைதீர்த்த ஆபரணங்களையுடையரோகணியினது ஸ்தனங்களினுடைய போகத்தைவிரும்பி மற்றை இருபத்தாறு நாயகிகளுடைய போக வாழ்வுகளை மறந்துவிட்டான் அ

ளை முன்சொன்ன இருபத்தேழு பெண்களுக்குந்தகப்பனாகிய தக்க
ன்கேள்விப்பட்டு எல்லா நாயகிகளின்மீதும்விருப்பம்வைக்காது ஒ
ருத்திமேல் மாத்திரம் வைத்ததனால் அவனுடல் குன்றிப்போகக்கட
வதென்றுசபித்தான், அந்தச்சாபத்தையடைந்தசந்திரன் அந்த அரு
ணாசலத்தில்வந்து அந்தத்துன்பத்தைநீக்கிக்கொண்டான்—எ-று.()

நினைப்பளவின்முத்திதரு நிலைகாணிற்போய் ... .... *
மனக்குறைதவிர்த்திடுதி யென்றிறைமறைந்தா ... *
னனற்கிரியைநாடியரி யத்திசையினண்ணிச் .. ... *
சுனைக்கமலவாசமிகு சோணகிரிகண்டான்... ..... *

(இதன்பொருள்)

நினைத்தமாத்திரத்தில் முத்தியைக்கொடுக்கின்ற அருணாசலமென்
கிற அந்தஸ்தலத்திற்குப்போய் மனக்குறையை நீக்கிக்கொள்ளென்
றுசுவாமிமறைந்தார் விஷ்ணுவானவர் அக்கினி வடிவாகியமலையை
த்தியானஞ்செய்து அதுவிளங்குந் தெற்குத்திசையையடைந்துசு
னையிலிருக்கிற தாமரைப்புட்பத்தினது வாசனைமிகுந்த அந்தஸ்தல
த்தைக்கண்டார்—என்றவாறு. (௨௧)

ஈசர்வடிவானமலை கண்டினி திறைஞ்சித் ..... *
தேசுமிகுநன்னகர் செறிந்துமகிழ்வாகி... ... .. *
வாசவதடத்திடை படிந்துவலமாகிப்...: .. .. *
பூசனைபுரிந்துவினை போயமலனானான்... ... *

(இதன்பொருள்.)

மலையுருவமாகியசுவாமியைத்தரிசித்துஅன்போடுபணிந்துபிரகாச
ம்பொருந்தியஅந்தஸ்தலத்திற்குப்போய்ச்சந்தோஷத்தையடைந்
துஇந்திரதீர்த்தத்தில்முழுகிக் கிரிபிரதட்சணம்வந்துபூசைசெய்து
கொண்டுவர,தம்முடையவினைநீங்கிவிஷ்ணுவானவர்பரிசுத்தரானார்

மேவியருணைப்பதியின்மிகுதபுகழ்மாயன்... ... ...*
பாவமகல்வித்திடு பலத்தினையுமாத்துந்... ..... *
தூவிமயில்பாகமுறை சோணகிரிநாத... ..... *
ஞானியின்மகிழ்ச்சியையு நான்முகனுரைப்பான்... ...*

(இதன்பொருள்)

மிகுந்தபுகழையுடையவிஷ்ணுவானவர் அருணாசலத்திற்குப்போய்,
தம்முடையபாவத்தைநீக்கி அவர்அடைந்தபலத்தைப்பிரமாவானவ
ர் சனகரிஷிக்குச்சொல்லிப்பார்ப்பதியானவள் ஒருபுறத்தில் வாசஞ்
செய்கின்றஅருணாசலேசுரர் புழுதுபூனையினாலே அடைந்தசந்தோ
ஷத்தையும் சொல்லத்தொடங்கினார்—என்றவாறு. (௩௧)

பதிமூன்றாவது
பாவந்தீர்த்தசருக்கம்—முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம் — ௩௭௮.

சிவமயம்.

# புளகாதிபசருக்கம்



[எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

உருவுபல வேறுபுனை புளகனெனு மோரசுர னொருபொழுது நாவிவடிவாய், அருணைகிரி மீதுலவி யரியபுழு கேசிதறி யதிகபல மாயவினியே யுற்று, வெருவவிமையோர்முனிவ ரொருவரொழியாதழிய வினைபுரிகையாலவனெலாம், கருணைமலைபோலிமைய மலையமலைபாகருறை கயிலைமலை மேவிமொழிவார்... ... ... *

[இதன்பொருள்]

நினைத்தபடி வெவ்வேறு உருவங்களை எடுத்துக்கொள்ளவல்லமை பொருந்திய புளகனென்னும் ஓரசுரன் ஒருநாள் புழுகுபூனை உருவத்தையடைந்து செவ்விய நிறத்தையுடைய அத்தமலையின்மேலுலாவிக்கொண்டு புழுகைச்சிதறியபடியால் சுவாமியினாலே அதிகபலத்தைப்பெற்றுப் பூமியிலுள்ளவர்கள் பயப்படவும், தேவர்கள் முனிவர்களெல்லாரும் துன்பப்படவும், துஷ்கிர்த்தியஞ் செய்வதினாலே அவர்களெல்லாரும் இமயபருவதராஜனுடைய புத்திரியாகிய பார்வதியை ஒருபாகத்திலே வைத்தருளிய கருணாமலைபோன்ற பரமசிவன் எழுந்தருளியிருக்கின்ற கைலாயகிரிக்குப்போய்ச்சொல்வார்கள்—என்றவாறு. (க)

புளகனெனு மோரசுரன் மிருகவடிவாகிவதை புரியவுலகேழுமுறைபோய், விளைதுயரமாயினர்க ளெனவுரைசெய்தா ரவர்கள் விமலையை மோவிபுகலவா, ளவின்மணமானபுழு கருணைகிரிமீதுதவி ழ்ந்தியபல மாய்மருவிநீ, ளொளிதிகழ்ந்த யானவனு மிலியகதுமேறவுமைய மிடரலையிலெறவிடுவோம் ... ... ... *

(இதன்பொருள்)

புளகனென்னும் ஒரு அசுரனானவன் புழுகுபூனை வடிவங்கொண்டேழுலகங்களிலுமுறையே புகுந்து ஜீவராசிகளையும் வதைசெய்ய அதனாலே எல்லாருந் துன்பத்தையடைந்தார்களென்று வந்தவர்கள் சொல்லக்கேட்டுப் பரமசிவனானவர் அவர்களோடு திருவாய்மலர்ந்தருளுவார் மணம்வீசுகின்ற அளவில்லாதபுழுகை நமதுருவமாகிய அருணாசலத்தில் சிதறியதனாலே அதிகபலத்தையடைந்திருக்கிறான் அப்படிப்பட்டவன் எளிதில் அழியமாட்டான் ஆனபடியினாலே அவனைமோட்சத்தில் அடைவித்து உங்களைத்துக்கசமுத்திரத்தினின்றுங் கரையேற்றுவோம்—என்றவாறு (உ)

மேவுமெனமொழியருளொடுபுளகாதியனைவேதமுதல்கூறியவுணு, நாவியுருவாகியவுருவிபிவாமெனவுதாவிவடிவான் மொழிகுவான் பாவனைவொருபாகரருணலயபுராதனபராபரவிலோசனகுணா, [மேத ...ம்பன்மொழியமாறுதவேவலவிறைவனீரடியின்மீ ...

(இதன்பொருள்)

நீங்கள்உங்களிடத்திற்குப்போய்ச் சேருங்களென்று விடைகொடுத்தருளிமிகுந்தகிருபையோடுபுளகனென்னும்அந்தஅசுரனைவேதமுதலாகியபரமசிவன்அழைத்து அசுரனேபுழுகுபூனைவடிவத்தைக்கொண்டஉன்பிராணனைவிடுவென்றுசொல்லியஅளவில்அந்தஅசுரன்சொல்லுவான்,பார்ப்பதியையொருபாகத்திற்கொண்டருளியவரே! கிருபைக்குஇடமாயிருக்கின்றவரே! பழமையானவரே!பிராபரமாகியவரே!நெற்றிக்கண்ணையுடையவரே!உமக்கு ஏவல்செய்தற்குரிய எளியேன்கேட்டுக்கொள்ளுகிறவரத்தைக்கொடுத்தருளுமென்று சுவாமியினுடையஇரண்டுதிருவடிகளுக்கும்வந்தனஞ்செய்து சொல்லுவான்—என்றவாறு ... ... .... (௫)

எனதுகிளையாமிருகமுனதுதிருமேனிபுக வினியபுழுகாலும் ஒருபேர், புனைகவெனவேபரவியுயிர்விடலுநாவிகதிபுகுதவிறையோனருளினன்,மனமுருகியேமுனிவரிமையவர்கண்மானிடர்கண் மகிமுடியின்மேலணியவே,அனவரதமான்மதமுமிமசலமுமாலயம தருவியெனவேபெருகுமே .... ... ..... ... *

[இ-ள்]நானெடுத்தஉருவமாகியபுழுகுபூனையினதுமரபிலுள்ளஉண்டாகின்றபுழுகானதுஉம்முடையதிருமேனி ஏற்றுக்கொள்ளவும்,அதனால் புழுகணியிறைவனென்று ஒருநாமத்தைநீர்தரித்துக்கொள்ளவும் அருள்செய்யவேண்டுமென்றுவணங்கி நாவி உயிர்விட்டவுடனே அந்தஅசுரன் கதிசேரும்படி சுவாமி அனுக்கிரகஞ்செய்தார்அப்படி அவனை!ரக்ஷித்தது கண்டுமுனிவர்களும்தேவர்களும்மனிதர்களும்!மனவுருக்கத்தையடைந்து சந்திரனைத்தரித்தசுவாமியினது சிரசில் புழுகுகாப்புச்சாத்த எப்போதும் அந்தப்புழுகு கரைந்துபனிநீரோடுசுவாமியினுடையஆலயமானது அருவியையுடையதாகப்பெருகி ஓடும் — என்றவாறு . ... ... (௬)

புழுகுபனிநீர்களபமனுவளவதேனுமிறைபுனையும்வகையாலுதவிநோ,விழிகுளிரநாடியரவிணையடிகளேபரவி வினவினர்கள் வீடுபெறுவா, ருஞ்சமருவுபாணியினர் சரிதமிதுவாருமென வுவகையுடனேயுரைசெய்தான்,மொழியுமலராலயமுனிவருடனே சனகமுனிபுகழ்வீ றேடுதொழுதான் - ... ..... . *

[இ-ள்]புழுகுப்பனிநீருங்கூட்டுவர்க்கச்சந்தனமுமாகியஇவைகளில் அனுவளவாவது சுவாமியானவர் ஒப்புக்கொள்ளும்படி செய்தவர்களும கண்கள்களிப்படையும்படியாகத்தரிசித்துசுவாமியினதுதிருவடிகளைவணங்கிஅவர்சரித்திரத்தைக்கேட்டவர்களும் மோட்சத்தையடைவார்கள் மானைகரத்திலேவைத்தருளிய பரமசிவனுடைய திவ்வியசரிதமிதுவாகுமென்று சந்தோஷமாய் அந்தப்பிரமாவானவர் சொன்னார் அப்படிச்சொல்லிய பிரமாவைச் சனகரிஷியானவர் மு

[கலிவிருத்தம்]

அஞ்செழுத்தும்வாழி வாழி யருணைவாழியருணையான் . *
கஞ்சமொத்தசரணம்வாழி கருணைவாழிகருணைபோன் .... *
மஞ்சுபெற்றவானம்வாழி வையம்வாழிவையமேற் .... *
நஞ்சமூற்றநீறும்வாழி சைவம்வாழிவாழியே ... ... *

[இ-ள்] பாவங்களைப்போக்குகிறதற்குக் காரணமாயிருக்கிற பஞ்சாட்சரமானது வாழ்கவாழ்க,— அருணாசல ஸ்தலம்வாழ்க,—அருணாசலேஸ்வரருடைய தாமரைமலர்போன்ற திருவடிகள்வாழ்க,— அந்தச்சுவாமியினுடைய கிருபையானதுவாழ்க,—அக்கருணைபோன்ற அழகாகிய மேகவருஷம்வாழ்க,—பூலோகம்வாழ்க,—பூமியில் உயிர்களுக்குப்பற்றுக்கோடாகிய திருநீறும் வாழ்க,— சைவசமயமானது வாழ்கவாழ்க— என்றவாறு. (௬)

ஞானம்வாழிநன்மைவாழி நாடுராசநீதிசீர் .. .... ..... *
தானம்வாழிதர்மம்வாழி சாதவேதமாகமங் ...... .... *
கானம்வாழி கல்விவாழி கற்றறிந்தகேள்வி யன் ... *
பானபேர்கள்வாழியீச னடியர்வாழிவாழியே .. *

[இ-ள்] ஞானம்வாழ்க,நன்மையானதுவாழ்க,—நாடும்இராசனும் அவனுக்குரியநீதியும் கீர்த்தியும் தானமும்வாழ்க,—தருமம்வாழ்க,— உண்மையாகியவேதமும் ஆகமங்களும்வாழ்க,—சங்கீதம்வாழ்க,— மற்றவித்தைகளும்வாழ்க,—அவைகளைக் கற்றறிந்தும் கேள்விப்பட்டும்யாவரிடத்தும்அன்புஉண்டானவர்கள்வாழ்க,—பரமசிவனது அடியார்கள் வாழ்கவாழ்க,—என்றவாறு. (௭)

[அறுசீரடிஆசிரியவிருத்தம்]

இக்கதைபடித்தோர்கேட்டோ ரெழுதினோரெழுதிவைத்தோர்...*
மைக்கடல்சூழ்ந்தவிந்த வையகமுழுதுங்காத்துத்..............*
மக்கசந்தானம்போக சவுக்கியந்தழையவாழ்ந்து ....... *
திக்கருணேசரன்பாற் சிவபதம்பெறுவதாமே ........ *

[இ-ள்.] இந்தஅருணாசலத்தின் மான்மியத்தைப் படித்தவர்களும், கேட்டவர்களும், எழுதினவர்களும், எழுதிவைத்துக்கொண்டவர்களும், கரியகடல்சூழ்ந்தபூமிமுழுதுங்காத்துத் தருந்தபுத்திரசம்பத்தும், போகசவுக்கியமும், தழைப்புப்படிபாகவாழ்ந்து யாவருக்கும் ஆகாரமாகிய அருணாசலேசுரர் கிருபையினால் சிவபதம்அடைவார்கள் —என்றவாறு. (அ)

பன்னிரண்டாவது

திபசருக்கம்— முற்றுப்பெற்றது.

திருவிருத்தம்—௫௱அ௬.

அருணாசலபுராணம்—முற்றுப்பெற்றது.

IDHYAYA A IYER LIBRARY MADRAS